

# நிலைபெற்ற நினைவுகள்

இரண்டாம் பாகம்

வல்லிக்கண்ணன்




**12.**11.1920ல் பிறந்த வல்லிக்கண்ணன் 09.11.2006-ல் மறைந்தார். வல்லிக்கண்ணன் கடைசியாக எழுதிய நூல் இது. ஒருமுறை ஜெயகாந்தன் வல்லிக்கண்ணனைப் பார்த்து, "நீங்கள் உங்கள் வாழ்க்கை வரலாற்றை எழுதுங்கள். அது உங்கள் வரலாறாக, மட்டும் அல்லாமல், தமிழகத்தின் பண்பாட்டுக் கலாச்சார மற்றும் இலக்கியப் பதிவாகவும் அமையும்" என்று கூறினார்.

ஜே.கே.-வின் வேண்டுகோளை ஏற்று வ.க. தன் வரலாற்றை எழுதத் தொடங்கினார். "நிலைபெற்ற நினைவுகள்" என்று வ.க.வின் தன் வரலாற்று நூலின் முதல் பாகத்தை சந்தியா பதிப்பகம் வெளியிட்டது.

நூலின் இரண்டாம் பாகம். வெளிவருவதில் இலக்கிய விமர்சகர் தி.க.சி. அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் அதிகம். வ.க. அவர்களுக்கு அடிக்கடி கடிதம் எழுதியும் தொலைபேசியில் பேசியும், இந்நூலை எழுதத் தூண்டினார்கள்.

1946 வரையில் அதாவது இந்தியச் சுதந்திரத்திற்கு முந்தைய ஆண்டுடன் வ.க.வின் வரலாறு இந்நூலில் பதிவாகியுள்ளது.

மரணம் பற்றிய செய்தியுடன் ஆரம்பமாகும் இந்நூலை மரணம் பற்றிய செய்தியுடன் முடித்துவிட்டு மரணமடைந்து விட்டார் வ.க.

"எழுத்து என்பது எனக்கு உயிர் மூச்சாகவும், உற்சாகம் ஊட்டும் உந்து சக்தியாகவும் அமைந்திருந்தது. பணம் பண்ணுவது பற்றியோ, வாழ்க்கை வசதிகள் தேடிக் கொள்வது பற்றியோ எண்ணாமல் எப்போதும் வகைவகையாக எழுதுவதில் மகிழ்ச்சியும் மனநிறைவும் கண்டேன். புத்தகங்கள் படிப்பதே என் சந்தோஷத்தை அதிகப்படுத்தியது," என்று இந்நூலில் குறிப்பிடுகிறார் வல்லிக்கண்ணன்.

# நிலைபெற்ற நினைவுகள்

இரண்டாம் பாகம்

## வல்லிக்கண்ணன்




சந்தியா பதிப்பகம்
நியூடெக் வைபவ்
57-A, 53ஆவது தெரு,
அசோக் நகர், சென்னை - 83.
Ph : 24896979 / 65855704

நிலைபெற்ற நினைவுகள்

வல்லிக்கண்ணன்

| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | 2007 |
| பக்கம் | : | 156 |
| அளவு | : | டெம்மி 1x8 |
| தாள் | : | 16 kg மேப்லித்தோ |
| பிரதிகள் | : | 1000 |
| வெளியீடு | : | சந்தியா பதிப்பகம் |
| ஒளி அச்சு | : | ஸ்ரீ விக்னேஷ் பிரிண்ட்ஸ், சென்னை-83 |
| அச்சாக்கம் | : | சென்னை மைக்ரோ பிரிண்ட் (பி) லிமிடெட் |
| விலை | : | ரூ. 80/- |

Nilaipetra Ninaivugal

Vallikkannan

| | | |
|---|---|---|
| First Edition | : | 2007 |
| Pages | : | 156 |
| Size | : | Dem'y 1 x 8 |
| Paper | : | 6 kg Maplitho |
| Copies | : | 1000 |
| Typeset | : | Shri Vignesh Prints, Chennai-83 |
| Printed at | : | Chennai Micro Print (P) Ltd. |
| Published by | : | Sandhya Publications<br>57A, 53rd Street, Ashok Nagar,<br>Chennai-600 083. Ph : 2489 6979<br>E-mail : sandhyanatarajan@yahoo.com<br>Website: www.sandhyapublications.com |
| Price | : | Rs. 80/- |

# நிலைபெற்ற நினைவுகள்

உலகம் இனியது. வளங்களும் வனப்புகளும் நிறைந்தது. இயற்கையின் வளங்கள் மிகுதியானவை.

இவற்றிடையே மனிதராகப் பிறந்திருப்பது ஒரு பெரும் பேறு-நற்பேறு ஆகும். வாழ்க்கை இனியது, உயர்ந்தது, மாண்பு மிக்கது.

பூமியில் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒருமுறைதான் வாழ்க்கை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதன் நிச்சயமான முடிவாக மரணம் காத்திருக்கிறது.

மனிதருக்குக் கிடைத்திருக்கிற வாழ்க்கையை பெரும்பாலோர் சாரமற்றதாய், அர்த்தமற்றதாய், வீணானதாய் ஆக்கிக் கொண்டிருக்கிறார்கள். வாழ்க்கையில் எதுவுமே செய்யாமல் வெற்றர்களாய்த் திரிகிறவர்களும், எப்படி எப்படியோ விரயம் செய்பவர்களும், வெறுக்கிறவர்களும் வீணடிப்பவர்களும் மிக அதிகமாகவே காணப்படுகிறார்கள்.

வாழ்க்கை நன்று. பொருள் பொதிந்தது.

வாழ்க்கை பொருளற்றது, அர்த்தமற்றது; செய்ததையே செய்து கொண்டு, ஒருநாளைப் போல மறுநாள் என்று இயந்திர ரீதியாக அமைந்துள்ள இந்த வாழ்க்கையில் என்ன இருக்கிறது என்று எண்ணுகிறவர்களும் பேசுகிறவர்களும் பலப்பலர் உளர்.

நமக்குக் கிடைத்திருக்கிற வாழ்க்கையை அர்த்தம் உள்ள தாக்குவதும், நாம் வாழ்கிற காலத்தைப் பொருள் உடையதாக ஆக்கிக் கொள்வதும் நம் கையில்தான் இருக்கிறது. நாம் நமது வாழ்க்கையை அர்த்தம் கொண்டதாகவும் பொருள் பொதிந்ததாகவும் ஆக்கிக் கொள்ள வேண்டும். அதற்குத் தேவைப்படுகிற ஆற்றல் நம்மிடமே, நமக்குள்ளேயே இருக்கிறது. நமக்கு நாமே துணை எனக் கொண்டு, நம்முடைய வாழ்க்கையை பயனுள்ள முறையில் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

ஆனால், சமூகத்தில் ஒவ்வொருவருடைய வாழ்க்கையையும் மற்றவர்கள் அமைத்துக் கொடுப்பதே இயல்பாக இருக்கிறது.

பெரும்பாலும், பெற்றோர்களே தங்கள் பிள்ளைகளின் வாழ்க்கையை அவர்கள் எப்படி வாழ வேண்டும், என்ன தொழில் செய்ய வேண்டும் என்று தீர்மானிக்கிறார்கள்; வழிவகுத்துக் கொடுக்கிறார்கள்.

பள்ளிக்கூடத்தில், வகுப்பு நேரத்தில், பொழுது போகாத சமயத்தில், 'பிற்காலத்தில் நீ என்ன ஆக வேண்டும் என்று விரும்புகிறாய்?' என சில ஆசிரியர்கள் மாணவர்களைக் கேட்பது உண்டு.

நான் டாக்டர் ஆக விரும்புகிறேன், என்ஜினீயர் ஆக விரும்புகிறேன், வக்கீல் ஆக விரும்புகிறேன், ஆசிரியராகிப் பல பேருக்கு அறிவு புகட்ட விரும்புகிறேன் என்று மாணவர்களும் அவரவருக்குத் தோன்றியதைச் சொல்வார்கள். சிலர் வித்தியாசமாக, இன்ஜின் டிரைவர் ஆக விரும்புகிறேன், ஏரோப்ளேன் பைலட் ஆக ஆசைப்படுகிறேன் என்று சொல்லி மற்றவர்களைச் சிரிக்கவோ வியக்கவோ வைப்பார்கள்.

நான் எழுத்தாளன் ஆக விரும்புகிறேன், கவிஞனாக வாழ ஆசைப்படுகிறேன் என்று எந்த மாணவரும் சொல்வதில்லை. ஓவியனாக வளர விரும்புகிறேன், ஒரு கலைஞனாக வாழ்ந்து பெயர் பெறப்போகிறேன் என்று எவரும் சொல்ல ஆசைப்படுவதுமில்லை.

அப்படி யாராவது சொன்னால், அவர்களை, பிழைக்கத் தெரியாதவர்கள், உருப்பட விரும்பாதவர்கள் என்று தான் சமூக மனிதர்கள் குறிப்பிடுவார்கள்.

பொதுவாக, பிள்ளைகளின் எதிர்காலத்தை, வாழ்க்கையைப் பெற்றோர்கள் தான் தீர்மானிக்கிறார்கள். முக்கியமாக, அப்பா இல்லாத குடும்பங்களில் அம்மா தீர்மானிப்பாள். அல்லது பொறுப்புள்ள உறவினர்கள் பாதுகாப்பாளர்களாக 'கார்டியன்'களாக இருந்து நெறிப்படுத்துவார்கள்.

வகுப்பில் பெரிதாகத் தெரிவித்தபடி மாணவர்கள் அனைவரும் பிற்காலத்தில் அப்படியே ஆனார்கள் என்று சொல்வதற்கில்லை. வசதியுள்ளவர்கள், வாய்ப்புப் பெற்றவர்கள் ஒரு சிலர் தாங்கள் விரும்பியபடி சமூக வாழ்வில் அடிபதித்து வாழ்க்கைப் பாதையில் முன்னேறியிருக்கலாம். பெரும்பாலானவர்கள் ஏதேனும் அலுவலகத்தில் குமாஸ்தாவாக, உதவியாளராக மாதச் சம்பளம் பெறும் ஏதோ ஒரு உத்தியோகஸ்தராகத்தான் ஆக முடியும். பலர் 'வேலை

இல்லாதவர்'களாக, வேலை தேடும் வேலையிலேயே காலத்தைக் கழிப்பவர்களாக அதனால், பெற்றோரின் பெரியவர்களின் குறைகூறல்களுக்கும் பழிப்புக்கும் ஆளாகிறவர்களாக நேரிடுகிறது. அவர்கள் விரக்தியும் மனக்கசப்பும் அடைந்து வாழ்க்கையை வெறுக்கிறவர்களாகி விடுகிறார்கள்.

நான் மாணவனாக வளர்ந்த காலத்தில், நீ பிற்காலத்தில் என்ன ஆகப் போகிறாய் என்று மாணவர்களை எந்த ஆசிரியரும் கேள்வி கேட்டுப் பதில் பெற்றதில்லை. நான் எதிர்காலத்தில் இப்படி இப்படி வளர்ந்து வாழ வேண்டும் என்று இயக்கி நெறிப்படுத்துவதற்கு என் தந்தை உயிரோடிருக்கவில்லை. நான் ஆறாம் வகுப்பு படித்தபோதே என் அப்பா இறந்து போனார்.

என்னையும், என் அண்ணன்களையும் தம்பியையும் நன்றாகப் படிக்க வைக்க வேண்டும்; எல்லோரும் படித்து ஏதாவது ஒரு வேலைக்குப் போய் சம்பாதிக்க வேண்டும்; அப்போது தான் குடும்பம் நல்ல நிலை அடைய முடியும்; கடன் இல்லாமல் வாழ்க்கை நடத்த முடியும் என்றுதான் அம்மா எண்ணினாள். கஷ்டப்பட்டு எங்களைப் படிக்க வைத்தாள்.

அம்மாவின் ஆசை முழுமையாக நிறைவேறிற்று என்று சொல்வதற்கில்லை. என் பெரிய அண்ணன் கலியாணசுந்தரம் தனக்கு படிப்பு வரவில்லை என்று சொல்லி எட்டாவது வகுப்புடன் தனது கல்விப் பயிற்சியை நிறுத்திக் கொண்டார். சுகவாசியாக வீட்டோடு இருப்பதையே அவர் என்றும் விரும்பினார். என் தம்பியும் கட்டுப்பாடுகளுக்கு உட்படாத சுதந்திரப் பறவையாக வாழவே ஆசைப்பட்டான். அதனால் அவனும் ஏழாவது வகுப்புடன் தனது படிப்பை முடித்துக் கொண்டான்.

அண்ணன் கோமதிநாயகமும் நானும் தான் பள்ளி இறுதி, தேர்வு முடியப் படித்து சான்றிதழ் பெற்றோம். கிராமங்களில், எஸ்.எஸ்.எல்.சி. படித்தவர்களை 'பெரிய பத்து படித்தவர்கள்' என்று சொல்லிக் கொண்டிருந்த காலம் அது.

ஏனெனில், பள்ளிக்கூடத்தில் ஐந்தாம் வகுப்புக்குப் பிறகு ஆறாம் வகுப்பு, ஏழாம் வகுப்பு என்ற ரீதியில் கணக்கிடப்படாத காலம். ஐந்தாம் வகுப்புக்குப் பிறகு 'முதல் பாரம்' (ஃபர்ஸ்ட் ஃபார்ம்) இரண்டாம் பாரம் (செகண்ட் ஃபார்ம்) என்ற தன்மையில் கணக்கிடப்பட்டிருந்தது. அப்படிப் பார்க்கையில் 'ஐந்தாம் பாரம்' (பிஃப்த் ஃபார்ம்) என்பது பத்தாவது வகுப்பு ஆகிறது. ஆயினும்,

ஆறவாது பாரம் தான் (சிக்ஸ்த் ஃபார்ம்) 'பத்தாம் கிளாஸ்' என்று கணக்கிடப்பட்டது. ஆகவே, ஒவ்வொருவரும் இரண்டு 'பத்தாம் வகுப்பு'களில் படிக்க வேண்டியிருந்தது. அதனால் பெண்களும் சாதாரண ஜனங்களும் ஐந்தாவது பாரத்தை 'சின்னப் பத்து' என்றும், ஆறாம் பாரத்தை 'பெரிய பத்து' என்றும் குறிப்பிடுவது வழக்கமாயிற்று.

பத்தாம் வகுப்பு படித்துத் தேறியவர்கள் ஏதாவது ஆபிசில் அல்லது மில்லில், அல்லது தனியார் நிறுவனங்களில் குமாஸ்தா வேலைக்குத் தான் போக முடியும். எங்கள் நலனில் அக்கறை கொண்ட சில உறவினர்கள் எங்கள் இருவருக்கும் வேலை பெற்றுத்தர முயற்சிகள் மேற்கொண்டார்கள். உரிய பலன்தான் கிடைக்கவில்லை.

இந்த நிலைமையில்தான், நெருங்கிய சொந்தக்காரர் ஒருவரின் சிபாரிசு காரணமாக, அரசு வேளாண்துறை செயல் விளக்க அலுவலர் பணிமனையில் (கவர்ண்மென்ட் அக்ரிக் கல்சுரல் டிமான்ஸ்ட்ரேட்டர் ஆபீஸ்) ஒரு குமாஸ்தா வேலை கிடைத்தது எனக்கு.

அந்த வேலை கிடைத்து, நான் வீட்டைவிட்டு வெகு தொலைவில், இராமநாதபுரம் ஜில்லா (அப்பொழுதெல்லாம் 'ஜில்லா' தான். மாவட்டம் என்ற சொல் கண்டுபிடிக்கப்பட்டிருக்கவில்லை) பரமக்குடியில் வேலை பார்க்கச் சென்றேன். என் அம்மா 'நல்ல காலம் பிறந்து விட்டது' என்று மகிழ்ச்சி அடைந்தாள்.

அவள் சந்தோஷம் நான்கு வருடங்கள் கூட நீடிக்கவில்லை. இராமநாதபுரம் - பரமக்குடியில் இரண்டு வருடங்கள் பணி புரிந்த பிறகு, திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீவைகுண்டம் ஊருக்கு மாறுதல் பெற்று நான் வந்தேன். அதற்கிடையில் நான் கதைகள், கட்டுரைகள் எழுதும் ஆர்வம் பெற்று, அந்த ஆற்றலை வளர்த்துக் கொள்வதில் தீவிர வேகம் கொண்டிருந்தேன். அலுவலக அதிகாரிக்கும் எனக்கும் ஒத்துப்போகாததால், ஒன்றரை வருடங்களிலேயே நான் அந்த வேலையைத் துறந்து வெளியேறினேன். ஆகவே, எனது அரசாங்க உத்தியோக காலம் மூன்றரை வருடங்கள் தான். பெரிதாக ஆசைகள் வளர்த்து வந்த என் அம்மாவுக்கு என் செயல் அதிர்ச்சியாகத் தான் இருந்தது. மிகுந்த ஏமாற்றமும் கூட.

என் அண்ணன் கோமதிநாயகம் திருநெல்வேலியில் ஒன்றிரண்டு 'மெடிக்கல்ஷாப்'களில் வேலை பார்த்து, கசப்பான

அனுபவங்கள் பெற்ற பின்னர், 'தி மெடிக்கல் ஷாப்' என்கிற பெரிய மருந்துக்கடையில் சேர்ந்து பணியாற்றிக் கொண்டிருந்தார். கிளார்க் வேலை தான். வேலை கடுமையாக இருக்கும். காலை 9 மணிமுதல் இரவு 9.30 அல்லது 10 மணி வரை வேலையிருக்கும்.

தனியாக ஒரு அறையில் தங்கி, முறையான ஓட்டல் அல்லாத தனிப்பட்டவர்கள் நடத்திய உணவு விடுதியில் சாப்பிட்டுக் கொண்டு சிரம வாழ்க்கை அனுபவித்து வந்தார் அவர்.

பெரிய அண்ணன் கலியாணசுந்தரத்துக்கு திருமணம் ஆகியிருந்தது. ஒரு பெண்குழந்தை பிறந்திருந்தது. மாமனார் முயன்று திருநெல்வேலி டவுனில் முனிசிபல் பஸ் ஸ்டாண்டில் 'பில் கலெக்டர்' வேலை வாங்கிக் கொடுத்திருந்தார். அண்ணன் மாமனார் வீட்டிலேயே தங்கி, அந்த வேலையைக் கவனித்து வந்தார்.

நான் ஸ்ரீவைகுண்டத்தில் வேலை பார்த்தபோது, ஆரம்பத்தில் சில மாதங்கள் 'சைவாள் சாப்பாட்டுக் கடை' ஒன்றில் உணவு, உண்டு வந்தேன். தனியாக அறை அமர்த்தி வசித்தேன். பிறகு, அம்மாவும் அண்ணன்களும் விரும்பியபடி, வசதியான வீடு வாடகைக்கு அமர்த்தி, அம்மா அங்கு வந்து தங்க ஏற்பாடாயிற்று. தம்பி முருகேசனும் உடன் இருந்தான்.

நான் வேலையை விட்டதும், எல்லோரும் திருநெல்வேலியிலேயே தங்குவது என முடிவாயிற்று. திருநெல்வேலி அரசடிப்பாலத் தெருவில், வாய்க்காலை ஒட்டிய, வசதிகள் நிறைந்த ஒரு வீட்டில் குடிபுகுந்தோம்.

1941ஆம் வருடம் ஜூன் மாதம் நடுவில் அது நிகழ்ந்தது.

இப்படியாக எனது வாழ்க்கையின் புதிய அத்தியாயம் தொடங்கியது.

நான் வேலையை விட்டபோது, இனி என்ன செய்வது என்று எதிர்காலத் திட்டம் எதுவும் கொண்டிருக்கவில்லை. எதிர்காலம் பற்றி நான் எண்ணவும் இல்லை. நிகழ்காலத்தில் அதிகம் அதிகமாக எழுத வேண்டும், நிறையப் படிக்க வேண்டும் என்ற நினைப்பே எனக்கு இருந்தது.

சின்ன வயது முதலே சுவாரசியமான கதை சொல்லிப் பழகி வந்ததாலும், பின்னர் தொடர்ந்து நல்லநல்ல கதைகளைச் சொன்ன புத்தகங்களைப் படிப்பதில் ஆர்வம் கொண்டிருந்ததாலும், இவர்களைப் போல நானும் கதைகள் சொல்ல வேண்டும்,

அவற்றை எழுத்தில் பதிவு செய்ய வேண்டும் என்ற ஆசையே என்னுள் கனன்று கொண்டிருந்தது.

கதைப் பத்திரிகைகளைப் படித்தபோது, முக்கியமாக 'மணிக்கொடி' இதழ்களைப் படிக்கும் வாய்ப்பைப் பெற்றபோது நானும் இந்த விதமான கதைகளை எழுத வேண்டும், புதுமையான எழுத்துகளை ஆக்க வேண்டும் என்ற உந்துதல் என்னுள் சதா உறுத்திக் கொண்டே இருந்தது. என்னாலும் எழுத முடியும் என்ற நம்பிக்கையும் என்னுள் வளர்ந்து வந்தது.

எழுதுவது ஒரு வரப்பிரசாதம் (Gift); எல்லோராலும் எழுதிவிட முடியாது என்றுதான் பலரும் சொல்லி வந்தார்கள்.

'மணிக்கொடி' சிறுகதைப் பத்திரிகையில் சிறிது காலம் ஒரு விளம்பரம் வந்து கொண்டிருந்தது. அதில் எழுதுகிறவர்களின் ஆற்றலைக் குறிப்பிட்டது அது; புராதன சீனாவில் ஒரு வழக்கம் இருந்தது. பிறந்த குழந்தையைத் தரையில் படுக்க வைத்து அதைச் சுற்றிலும் சகலவிதமான பொருள்களையும் பரப்பியிருப்பார்கள். அந்தக் குழந்தை தன் கையால் எதைத் தொடுகிறதோ, அது சம்பந்தப்பட்ட துறையில் ஈடுபட்டு பிற்காலத்தில் அக்குழந்தை பேரும் புகழும் பெறும் என்று பெரியவர்கள் நம்பினார்கள். அந்த ரீதியில் பார்த்தால், 'மணிக்கொடி'யில் எழுதுகிற அத்தனை பேரும் அவர்களது குழந்தைப் பருவத்தில் பேனாவைத் தான் தொட்டிருப்பார்கள்.

இப்படிச் சொன்னது அந்த விளம்பரம். 'கருவிலே திரு உடையார்கள்' என்பார்களே அதுபோல, மணிக்கொடி எழுத்தாளர்கள் 'பிறவி எழுத்தாளர்கள்' என்று பெருமைபட்டுக் கொண்டார் அதன் ஆசிரியர்.

நான் 'மணிக்கொடி எழுத்தாளர்கள்' போல் புதுமையாகவும் சிறப்பாகவும் கதைகள் எழுத வேண்டும் என்று விரும்பி எழுதலானேன். நான் 'பிறவி எழுத்தாளன்' இல்லை என்பது எனக்குத் தெரியும். ஆனால் எவரும் எழுதி எழுதிப் பயின்றால் விரைவிலேயே தேர்ச்சி அடைய முடியும் என்று நான் நிச்சயமாக நம்பினேன். குன்றாத தன்னம்பிக்கை, குறையாத ஆர்வம், சலியாத உழைப்பு, தளராத ஊக்கம் இவை ஒருவனுடைய திறமையை வளர்த்து வெற்றிப்பாதையில் அவனை முன்நடத்திச் செல்லும் எனும் உறுதி எனக்கு இருந்தது.

ஆகவே என் இஷ்டம் போல் எழுதினேன். கிடைத்த புத்தகங்கள் பத்திரிகைகளை எல்லாம் படித்தேன். அதிகமாக

எழுதிப் பழக வேண்டும் என்பதற்காக 'இதய ஒலி' என்ற கையெழுத்துப் பத்திரிகையை உருவாக்கினேன்.

மாத இதழ் அது. இதழின் பக்கங்கள் அனைத்தையும் நானே நிரப்பினேன். கதை, கட்டுரை, கவிதை, சிறுநாடகம் என்று பல வடிவங்களிலும் எழுதினேன். கதைகளுக்கான படங்களையும் நானே வரைந்தேன்.

எழுதியவற்றில் முக்கியமானவற்றை பத்திரிகைகளுக்கு அனுப்பினேன். புதிய எழுத்துகளை வரவேற்று வெளியிடக்கூடிய இதழ்கள் பல ஊர்களிலிருந்து வந்து கொண்டிருந்தன. புதுக்கோட்டையிலிருந்து 'அணிகலம்' 'திருமகள்' என்ற மாத இதழ்கள் வெளிவந்தன. வெ. கதிரேசன் செட்டியார் என்பவர் 'அணிகலம்' பத்திரிகையை அக்கறையோடு வளர்த்து வந்தார். தரமான எழுத்துகளை வரவேற்று வெளியிட்டார். அதில் மாதம்தோறும் எனது கதை இடம் பெற்றது.

திருநெல்வேலியிலிருந்து தொ.மு.சி. ரகுநாதனும் கதைகள் கட்டுரைகள் எழுதிக் கொண்டிருந்தார். அவையும் 'அணிகலம்' இதழில் பிரசுரம் பெற்றன. இலக்கிய விமர்சனம் குறித்து அவர் ஒரு நீண்ட கட்டுரை எழுதினார். பிற்காலத்தில் அதை விரிவுபடுத்தி 'இலக்கிய விமர்சனம்' என்ற நூலாக அவர் வெளியிட்டார். தமிழில் இலக்கிய விமர்சனம் குறித்து வெளிவந்த முதலாவது புத்தகம் அதுதான்.

அண்ணாமலை சர்வகலாசாலை (பல்கலைக்கழகம் என்பது அந்நாள்களில் வழக்கச் சொல் ஆகியிருக்கவில்லை) பேராசிரியர் சி.ஆர். மயிலேறு 'அணிகலம்' இதழில் நாடகங்கள் எழுதி வந்தார். ஓரங்க நாடகங்கள் எழுதுவதில் அவர் பெயர் பெற்றிருந்தார்.

'அணிகலம்' ஆண்டுதோறும் ஒரு மலர் வெளியிட்டது. அளவில் சிறியது தான். ஆயினும் விஷயச் சிறப்பு கொண்டதாக இருக்கும்.

'திருமகள்' பெரிய வடிவம் கொண்டது. இன்றைய 'கணையாழி' அளவில் இருக்கும் என்று சொல்லலாம். 'அணிகலம்' 'ஆனந்த விகடன்' அளவில் அமைந்திருந்தது. திருமகளில் பக்கங்களும் அதிகம். ராசி. சிதம்பரம் என்பவர் அதன் பதிப்பாசிரியர். இராம. மருதப்பர் அதன் ஆசிரியர். 'திருமகள்' என் கதை கட்டுரைகளை இதழ் தோறும் வெளியிட்டது. ரகுநாதன் கதைகளும் அதில் வந்தன.

காரைக்குடியை அடுத்துள்ள செட்டிநாடு என்ற ஊரிலிருந்து 'இந்திரா' எனும் இதழ் வந்து கொண்டிருந்தது.

ப. நீலகண்டன் அதன் ஆசிரியராகப் பணியாற்றினார். பழனியப்பச் செட்டியார் 'இந்திரா'வின் பதிப்பாளராக இருந்தார். அது விகடன் பாணியில் சகல விதமான எழுத்துக்களையும் பிரசுரித்தது. மேலோட்டமான நகைச்சுவைக் கதைகளை அது விரும்பி வெளியிட்டது. என்னுடைய சிறுகதைகளுக்குத் தவறாது இடம் அளித்து வந்தது 'இந்திரா'.

ஒரு சமயம் - 1941ல் - 'இந்திரா' சிறுகதைப் போட்டி ஒன்று நடத்தியது. அதற்கு நான் 'தெருக்கூத்து' என்றொரு கதை அனுப்பினேன். நகைச்சுவைக் கதை அல்ல. தெருவில் கம்பம் நாட்டி கயிறு கட்டி அதன் மேல் நின்று வித்தைகள் செய்து காட்டும் கழைக்கூத்தாடிக்குடும்பம், அதைச் சேர்ந்த ஒரு சிறுமி இவர்களது சோக வாழ்க்கையைச் சித்தரித்த உணர்ச்சிகரமான கதை.

அந்தக் கதை முதல் பரிசு பெற்றது. அகிலன் எழுதிய கதை ஒன்று சினிமாக் காட்சிக்கான நோட்டீஸ்களை வண்டியிலிருந்து, பேண்டு வாத்திய முழக்குடன் தெருக்களில் விநியோகிக்கும் ஒருவனது அனுபவம் பற்றியது இரண்டாவது பரிசு பெற்றது.

திருச்சி மட்டக்காரத் தெருவிலிருந்து 'கலாமோகினி' எனும் மறுமலர்ச்சி இலக்கிய, மாதம் இருமுறைப் பத்திரிகை வந்து கொண்டிருந்தது. வி.ரா. இராஜகோபாலன் என்ற இளைஞர் உற்சாகத்துடன் ஆரம்பித்து, துணிகர முயற்சியாக, அதை நடத்தி வந்தார். மறைந்துபோன 'மணிக்கொடி' மாதிரி மறுமலர்ச்சி இலக்கிய இதழ் நடத்த வேண்டும் என்ற ஆசை அவருக்கு. அதனால், பி.ஏ. படிப்பை விட்டுவிட்டு, பத்திரிகை துறையில் ஈடுபட்டார். ந. பிச்சமூர்த்தி, கு.ப. ராஜகோபாலன், சிட்டி எனும் பெ.கோ. சுந்தரராஜன் ஆகிய மணிக்கொடி எழுத்தாளர்களின் துணை அவருக்குக் கிட்டியது. பத்திரிகை நல்ல முறையில் வளர்ந்து வந்தது. 'கலாமோகினி'யும் என் கதைகளை வெளியிட்டு எனக்கு உற்சாகமூட்டியது.

கோயம்புத்தூரிலிருந்து 'சினிமா உலகம்' எனும் மாதம் இருமுறை இதழ் வந்து கொண்டிருந்தது. பண்டிதர் பி.எஸ். செட்டியார் அதன் ஆசிரியர். அது சென்னையில் தான் தொடங்கப்பட்டது. பல வருடங்கள் சென்னையிலேயே நடந்தது.

இரண்டாவது உலகமகா யுத்தம் வலுப்பெற்று, அதன் பாதிப்பு எங்கும் ஏற்படவும், சென்னை நகரிலும் குண்டுகள் விழலாம் என்ற பயபீதி எழுந்தது. அதனால் ஜனங்கள் பெரும்பாலோர் மாநகரை விட்டு வெளியேறினார்கள். பல தொழில் நிறுவனங்கள், சினிமாக் கம்பெனிகள், பத்திரிகை அலுவலகங்கள் சென்னை நகரைத் துறந்து வெளி இடங்களில் தஞ்சம் புகுந்தன.

வை. கோவிந்தன் நடத்திய 'சக்தி' பத்திரிகையும் சக்தி பிரசுராலயமும் காரைக்குடிக்கு இடம் பெயர்ந்தன. நாவலாசிரியர் வை.மு. கோதைநாயகி அம்மாள் திருவல்லிக்கேணியிலிருந்து வெளியிட்டு வந்த 'ஜனக்மோகினி' இதழின் அலுவலகத்தை சிங்கப் பெருமாள் கோயில் என்ற சிற்றூருக்கு மாற்றிக் கொண்டார். அதே மாதிரி பி.எஸ். செட்டியார் தனது பத்திரிகையையும் குடும்பத்தையும் கோயம்புத்தூருக்குக் கொண்டு சென்றார்.

'சினிமா உலகம்' தமிழில் வெளிவரத் தொடங்கிய முதலாவது சினிமாப் பத்திரிகை என்ற பெருமை பெற்றது. அது சினிமாச் செய்திகளை மட்டும் வெளியிட்டதில்லை. கதை, கவிதை, சமூகக் கட்டுரைகளையும் பிரசுரம் செய்தது. வருடத்திற்கு மூன்று நான்கு மலர்கள் வெளியிடும் வழக்கத்தைக் கொண்டிருந்தது.

பெரும்பாலும் பத்திரிகைகள் விளம்பர வருமானத்தைக் கருத்தில்கொண்டே மலர்கள் வெளியிடுவது வழக்கம். மலருக்கென்று விளம்பரங்கள் மிகுதியாகச் சேகரிக்கப்படும். சாதாரண இதழில் விளம்பரம் வெளியிடுவதற்கான கட்டணத்தை விட அதிகமான கட்டணம் மலர் விளம்பரங்களுக்கு வசூலிக்கப்படும். எனவே, 'சினிமா உலகம்' செட்டியார் மலர் வெளியிடுவதை ஒரு இலாபகரமான பிசினஸ் ஆகவே நடத்தி வந்தார்.

பி.எஸ். செட்டியார் சென்னை நகரப் பள்ளிக்கூடம் ஒன்றில் தமிழ்ப்பண்டிதராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். சினிமாத் தொழில் காலூன்றிக் கொண்டிருந்த காலம். வடஇந்தியாவிலிருந்து சினிமாவுக்கென்று அநேக பத்திரிகைகள் வெளிவந்தன. முக்கியமாக, பாபுராவ் பட்டேல் நடத்திய 'பிலிமிந்தியா' எனும் ஆங்கில இதழ், நாடு நெடுகிலும் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது. அதைப் பார்த்து தமிழிலும் ஒரு சினிமாப் பத்திரிகை நடத்தலாமே என்ற எண்ணம் பி.எஸ். செட்டியாருக்கு ஏற்பட்டது. (அவரது முழுப்பெயர் பக்கிரிசாமிச் செட்டியார் என்பதாகும்.) சினிமாத் துறையிலும் அவர் அடி எடுத்து வைத்திருந்தார்.

எனவே, செட்டியார் 'சினிமா உலகம்' பத்திரிகையைத் தொடங்கி நடத்தலானார். சினிமா வட்டாரத்திலும் செல்வாக்கு பெறலானார். சினிமாத் துறையில் முன்னேற விரும்பிய அநேகர் அவர் துணையை நாடலானார்கள். அவர்களில் சிலரது திறமையையும் உழைப்பையும் செட்டியார் தனது பத்திரிகைக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

தமிழ்த் திரைப்படத்துக்கு வசனம் எழுதுவதில் தனிச்சிறப்பு பெற்றிருந்தவர் இளங்கோவன். ம.க. தணிகாசலம் என்பது அவரது இயற்பெயர். அவர் 'தினமணி' நாளிதழின் ஆசிரியர் குழுவில் பணியாற்றிக் கொண்டிருந்தார். அதை விட்டுவிட்டு சினிமாத் துறையில் பிரவேசித்தார். ஆரம்ப காலத்தில் அவர் பி.எஸ். செட்டியாரின் உதவியை நாடினார். சிறிது காலம் இளங்கோவன் 'சினிமா உலகம்' பத்திரிகைப் பணிகளைக் கவனித்து அதற்கு உயிரூட்டிக் கொண்டிருந்தார்.

மகாகவி பாரதியாருக்கு அடுத்த தலைமுறையைச் சேர்ந்த சிறந்த தமிழ்க் கவிஞர்களில் பாலபாரதி ச.து. சுப்ரமணிய யோகியார் முக்கியமானவர். ச.து.சு. யோகி என அழைக்கப்பட்டு வந்தார். சினிமாத் துறையில் இறங்கிய அவரும் சிறிது காலம் 'சினிமா உலகம்' இதழுக்குப் புத்துயிர் அளித்தார்.

சினிமாத் துறையில் அடிபதித்த கவிஞர் பாரதிதாசனும் கொஞ்ச காலம் 'சினிமா உலகம்' இதழைக் கவனித்துக் கொண்டார்.

இதனால் எல்லாம் பி.எஸ். செட்டியாரின் இலக்கிய உணர்வும் வளர்ச்சி பெற்றிருந்தது. அவர் வெளியிட முன்வந்த மலர்கள், இலக்கிய நயத்துடனும் அமைய வேண்டும் என்று விரும்பி ஆவண செய்து வந்தார். அவருடைய இந்த ஆசை நிறைவேற 'கலாமோகினி' ஆசிரியர் வி.ரா. ராஜகோபாலன் (சாலிவாகனன் என்ற புனைபெயர் அவருக்கு உண்டு) வேண்டிய உதவி புரிந்தார். நல்ல எழுத்தாளர்களின் விலாசம் கொடுத்து, அவர்களைத் தொடர்பு கொள்ளத் தூண்டினார். அவர் மூலம் தான் செட்டியார் என்னிடம் மலருக்குக் கதை கேட்கலானார். மலர்தோறும் எனது கதை வெளிவரலாயிற்று.

'கலைமகள்' இதழிலும் என் கதை பிரசுரம் பெற்றது. 1940களில் 'கலைமகள்' இலக்கியத் தரம்மிக்க பத்திரிகையாக வெளிவந்து கொண்டிருந்தது. 'மணிக்கொடி' நின்றுவிட்ட

பின்னர், மறுமலர்ச்சி இலக்கியத்தில் நாட்டம் கொண்டிருந்த எழுத்தாளர்கள் பலரும் கலைமகளில் எழுதுவதில் உற்சாகம் காட்டினார்கள். ந. பிச்சமூர்த்தி, கு.ப. ராஜகோபாலன், புதுமைப்பித்தன், ந. சிதம்பரசுப்ரமண்யம், சி.சு. செல்லப்பா, க.நா. சுப்ரமண்யம் கதைகள் அடிக்கடி கலைமகளில் இடம் பெற்றன.

புதுமைப்பித்தன் எழுதிய மிகச் சிறப்பான சிறுகதைகள் பலவும் காஞ்சனை, மகாமசானம், அன்று இரவில், கடவுளும் கந்தசாமிபிள்ளையும், செல்லம்மாள் - கலைமகளில் தான் வெளிவந்தன.

வேறு போக்குகளில் எழுதிக்கொண்டிருந்த எழுத்தாளர்களின் கதைகளும் கலைமகளில் இடம் பெற்றன. அன்றைய இலக்கியப் பத்திரிகைகளின் தரத்தை மதிப்பிட்டு, மூன்று வகையான இலக்கியப் போக்குகள் காணப்படுகின்றன என்று கு.ப. ராஜகோபாலன் ஒரு கட்டுரை எழுதினார். அந்நாள்களில் போக்கு என்பதை மனோபாவம் என்று அவர் குறிப்பிட்டிருந்தார்.

முதலாவது, விகடன் மனோபாவம். நகைச்சுவைக்கு முக்கியத்துவம் அளிப்பது. வாழ்க்கையில், மனித சமூகத்தில், நிலவுகிற துன்ப துயரங்களைக் காணமறுத்து, மேலோட்டமாக விஷயங்களைக் கவனிப்பது. எதையும் ஹாஸ்யமாகவே எழுதுவது.

இரண்டாவது, அதற்கு நேரிடையான மணிக்கொடி மனோபாவம். இது வாழ்க்கையின் சகல பிரச்சனைகளையும் அடி ஆழம் வரை கண்டு, உணர்ச்சிகளை முக்கியமாக்கி, கனமான எழுத்துகளைப் படைப்பது, சோதனை ரீதியில் எழுதுவதில் நாட்டம் கொள்வது.

இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட போக்கும் காணப்பட்டது. மேலே சொல்லப்பட்ட இரு போக்குகளையும் ஓரளவுக்கு ஏற்றுக் கொண்டு, இருவகை எழுத்துக்களையும் வரவேற்று ஆதரிப்பது, மிதவாதப் போக்கு கொண்டது. இதை 'கலைமகள் மனோபாவம்' என்று கூறலாம்.

இந்த வகையில் கருத்துக் கூறி விவரித்து கட்டுரை எழுதியிருந்தார் கு.ப. ராஜகோபாலன்.

பெயர்பெற்ற மணிக்கொடி எழுத்தாளர்களின் கதைகளோடு எனது கதைகளையும் ஏற்று 'கலைமகள்' வெளியிட்டு வந்தது என் சந்தோஷத்தை அதிகப்படுத்தியது.

வழக்கம்போல் சக்திதாசன் சுப்பிரமணியன் அவருடைய 'நவசக்தி' மாத இதழில் எனது கதைகளை வரவேற்று வெளியிட்டு மகிழ்ந்தார்.

இதனால் எல்லாம் எழுதுவதில் மேலும் மேலும் எழுதிக் கொண்டேயிருப்பதில் எனக்கு ஊக்கமும் உற்சாகமும் ஏற்பட்டது. எழுதுவதையும் படிப்பதையும் தவிர வேறு வேலை எதுவுமில்லை எனக்கு.

அதிகாலை 5.30 மணிக்கு எழுவது. குளிப்பதற்காக வாய்க்கால் கரை ஓரமாக ஒன்றரை - இரண்டு மைல் அளவு முன் சென்று, தண்ணீர் தெளிவாகவும் சுத்தமாகவும் ஓடும் இடத்தை அடைவதை வழக்கமாகக் கொண்டேன்.

வீட்டைத் தொட்டபடி வாய்க்கால் சென்றது. பெரும்பாலும் நீர் நிறைந்தே போகும். கோடைகாலத்தில் நீரின்றி வாய்க்கால் வறண்டு கிடக்கும். குளிப்பதற்கென்று வரிசையாக படிக்கட்டுகள் கட்டிவிடப்பட்டிருந்தன. அவற்றைப் பயன்படுத்தி ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் குளித்துக் கொண்டிருப்பார்கள். பெண்கள் குடங்களில் தண்ணீர் மொண்டு செல்வதும் உண்டு.

ஆனால் தண்ணீர் சுகாதாரக் குறைவானதாகவே இருக்கும். வாய்க்காலை ஒட்டியிருந்த வீடுகளில் கக்கூஸ்களைக் கழுவித் தண்ணீரை வெளியேற்றுவதற்கான வசதிகள் செய்யப்பட்டிருக்கும். அப்படிக் கழுவப்படுகிற அசுத்த நீர் முழுவதும் வாய்க்காலில் தான் வந்து கலக்கும். நகர மக்கள் அதைக் கண்டு கொள்வதில்லை; பெரிதுபடுத்துவதுமில்லை.

காலப்போக்கில் அந்தப் பெரிய வாய்க்கால் சாக்கடைத்தன்மை பெற்றுவிட்டது. நீலோற்பலச் செடிகள் மண்டி வளர்ந்து நீர்ப்பரப்பை மறைக்கலாயின. நீர் ஓடும் தன்மை குன்றி, தேக்கநிலை பெறுவதும் ஏற்பட்டது.

வாய்க்காலில் தண்ணீர் பெருகி ஓடிக் கொண்டிருந்த - பாசி கொடிகளும் நீலோற்பலச் செடிகளும் களையாகப் படரத் தொடங்கியிராத - அந்நாள்களிலேயே, நான் அந்த நீரில் குளிக்க விரும்பவில்லை. கரை மீதே நடந்து, நகர எல்லையைக் கடந்து பாட்டப்பத்து என்கிற கிராமத்துக்கும் அப்பால் சென்று, குளிப்பதையே விரும்பினேன். அங்கே தண்ணீர் சுத்தமாக ஓடியது. சூழ்நிலையும் அழகும் அமைதியும் நிறைந்து காணப்பட்டது. அவ்வளவு தூரம் நடந்து குளிப்பதற்கென்று எவரும் அங்கே

வரமாட்டார்கள். ஆகவே என் மனசுக்கு மிகப்பிடித்த இடமாக அது இருந்தது.

குளித்துவிட்டு வந்து, காலை உணவு உண்டபிறகு, படிப்பதையும் எழுதுவதையும் கவனிப்பது தான் என் வேலையாயிற்று. மாடி மிக வசதியாக இருந்தது. நான் வெளியே சென்று யாரையும் பார்த்துப் பேச விரும்பியதில்லை. என்னைத் தேடி வருவோர் எவருமிலர். ஆகவே மிகுந்த நிம்மதி.

மாலையில் நாலரை மணிக்குமேல் எங்காவது உலாப்போவதை வழக்கமாக்கினேன். அமைதியான பேட்டை ரோடில் நெடுந்தொலைவு நடப்பது; ரயில்வே நிலையம் பக்கம் போய் தண்டவாளத்தின் ஓரமாக வெகு தூரம் நடந்து திரும்புவது, எப்பவாவது, ஜனசந்தடியும் போக்குவரத்தும் நிறைந்த சுவாமி நெல்லையப்பர் நெடுஞ்சாலையில் நடப்பது, இது எனது பொழுதுபோக்கு ஆயிற்று. சில நாள்களில் தம்பி முருகேசன் உடன்வருவான். பெரும்பாலும் நான் மட்டுமே மாலை உலாப் போய் வந்து கொண்டிருந்தேன்.

நான் திருநெல்வேலி சேர்ந்த சிறிது காலத்திலேயே நெல்லை வாலிபர் சங்கம் இளைஞர்கள் என்னைக் காண வந்தார்கள். காலேஜ் மாணவர்கள் தங்கள் சங்கத்தைப் பற்றியும், உறுப்பினர்கள் பற்றியும் சொன்னார்கள் தி.க. சிவசங்கரன் உங்களைப் பார்க்க வேண்டும் என்று ஆர்வமாக இருந்தார். எங்களோடு வந்திருப்பார். ஆனால் இன்று அவருக்கு வேறு அலுவல் வந்துவிட்டது. அதனால் வரமுடியவில்லை. எழுதுவதில் ஆர்வம் உடையவர். அவர் எழுதிய இரண்டு கட்டுரைகளைக் கொடுத்து அனுப்பினார். இவற்றை படித்துப் பாருங்கள். இன்னொரு நாள் வந்து அவர் உங்களைச் சந்திப்பார் என்றார்கள். எழுத்துப் பிரதிகளைக் கொடுத்தார்கள்.

அவர்கள் சங்கத்துக்கு வந்து ஒருநாள் நான் பாரதியைப் பற்றிப் பேசவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள் நானும் இசைவு தெரிவித்தேன்.

தி.க.சிவசங்கரன் எழுதிய கட்டுரைகளைப் படித்துப் பார்த்தேன். வ.ரா.வின் நடைச்சித்திரம் பாணியில் எழுதப் பட்டிருந்தன. ஒரு கட்டுரை ‘வண்டிக்காரன்’ பற்றியது. மற்றொன்று வீட்டு வேலைக்காரி பற்றியது. ‘பரவால்லே’ ரகம்.

சில தினங்களில் சிவசங்கரன், ஒரு நண்பருடன் வந்தார். நெல்லை வாலிபர் சங்கக் கூட்டத்தின் அச்சடித்த அழைப்பைத் தந்தார். பாரதி பற்றி நானும், பொதுவுடைமை என்றால் என்ன

என்பது குறித்து தொ.மு.சி. ரகுநாதனும் பேசுவதாக அழைப்பு அறிவித்தது.

குறித்த தினத்தில் கூட்டம் நடந்தது. நாற்பது பேர்கள் இருக்கலாம். நெல்லை வாலிபர் சங்கம் இளைஞர்கள் மற்றும் மணியரசுக் கழகத்தை சேர்ந்தவர்கள் வந்திருந்தார்கள்.

மணியரசுக் கழகத்தில் ரகுநாதன் முக்கிய பொறுப்பு வகித்தார். திருநெல்வேலி அம்மன் சன்னதித் தெருவில் ஒரு வீட்டின் மாடியில் அது செயல்பட்டு வந்தது. 'மணியரசு' என்ற கையெழுத்துப் பத்திரிகையையும் அவர்கள் நடத்திக்கொண்டிருந்தார்கள். ரகுநாதன் பத்திரிகையை கவனித்துவந்தார். அக்கழகத்தில் கவிதை, கட்டுரை எழுதக்கூடியவர்களும் இருந்தார்கள்.

முதலில் ரகுநாதன் பேசினார். நன்கு பேசும் திறமையை அவர் பெற்றிருந்தார். சுமார் அரைமணி நேரம் பொதுவுடைமை என்றால் என்ன என்று அவர் விளக்கினார் அடுத்து பாரதி பற்றி நான் பேசினேன். எனக்கு பேச்சாற்றல் கிடையாது. தற்சமயம் கூட்டங்களில் பேசுகிற அளவுகூட அந்நாள்களில் என்னால் பேசமுடிந்ததில்லை. என் பேச்சு கால்மணி நேரத்துக்குள்ளேயே முடிந்துவிட்டது. நான் சிறப்பாகப் பேசுவேன் என்று எதிர்பார்த்திருந்த நெல்லை வாலிபர்களுக்கு அது ஏமாற்றமாகவே இருந்தது.

பொதுவுடைமை குறித்து மேலும் சில விளக்கங்கள் கொடுக்க வேண்டும் என்று ரகுநாதன் மீண்டும் பேசினார். நல்ல கருத்துக்களைச் சொன்னார்.

பெரும் பேச்சாளனாக வளர வேண்டும் எனும் ஆசை என்றுமே எனக்கு இருந்ததில்லை. பேசக்கூடிய வாய்ப்பு வந்தால் கூட நான் அதைத் தட்டிக்கழிப்பதிலேயே கருத்தாக இருப்பேன்.

ஆயினும் நெல்லை வாலிபர்கள் என்னை விட்டுவிடத் தயாராக இல்லை. அவர்களில் பலர் பேச்சுக்கலையில் வளர்ச்சி பெறவேண்டும் என்று விரும்பினார்கள். சிலர் எழுத்து முயற்சியில் ஈடுபட வேண்டும் என்றும் ஆசைப்பட்டார்கள்.

அதற்காக சங்கத்தை பலப்படுத்த வேண்டும்; வாரம் ஒரு கூட்டம் நடத்த வேண்டும்; மணியரசுக் கழகத்தினரைப்போல தாங்களும் கையெழுத்துப் பத்திரிகை நடத்த வேண்டும் என்று அவர்கள் திட்டமிட்டார்கள். இவற்றுக்கெல்லாம் எனது

துணையும் ஒத்துழைப்பும் வழிகாட்டலும் அவசியம் தேவை என்று நெல்லை வாலிபர்கள் கருதினார்கள்.

சங்க நண்பர்கள் தங்கள் விருப்பத்தை என்னிடம் தெரிவித்தார்கள். நெல்லை வாலிபர் சங்கத்தின் தலைவராக நான் இருக்க வேண்டும் என்றும், ஒரு பத்திரிகை தொடங்கி அதன் ஆசிரியர் பொறுப்பை ஏற்று, எழுதுவதில் அவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள்.

சங்கத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்க நான் மறுத்தேன். ஒரு பத்திரிகை தொடங்கி, கதைகள் கட்டுரைகள் கவிதைகள் சேகரித்தால், நான் பார்வையிட்டு வேண்டிய உதவிகளைச் செய்யலாம் என்று சொன்னேன். பலரும் எழுதித் தருகிற விஷயங்களை ஒரே கையெழுத்தில் பிரதி பண்ணி பத்திரிகையை அமைக்க வேண்டும்; அப்போது தான் இதழின் தோற்றம் நன்றாக இருக்கும் என்றும் கூறினேன்.

சங்க உறுப்பினர்களில் எவரது கையெழுத்தும் நன்றாக இராது; நீங்களே முழுப் பொறுப்பும் ஏற்று உரிய முறையில் பத்திரிகையை நடத்தி சங்கத்துக்கு பெருமை சேர்க்க வேண்டும் என்று அவர்கள் வேண்டினார்கள். நான் எவ்வளவு மறுத்தும் அவர்கள் கேட்பதாயில்லை.

முடிவில் நான் நெல்லை வாலிபர் சங்கத்தின் தலைவரானேன். ‘இளந்தமிழன்’ என்ற பெயரில் ஒரு கையெழுத்துப் பத்திரிகையை மாதம் தோறும் தயாரித்துக் கொடுக்கவும் இசைந்தேன். எழுத முடிந்தவர்கள் கதை, கட்டுரை, கவிதை என்று ஏதாவது எழுதித் தரவேண்டும்; இதுவரை எழுதாதவர்கள் நாமும் எழுதவேண்டும் எனும் மன அரிப்பு பெற்றிருப்பவர்கள் அவர்களால் இயன்றவரை முயன்று ஏதாவது எழுதிக்கொடுக்க வேண்டும். அவற்றைத் திருத்தி வெளியிடலாம் என்று தெரிவித்தேன்.

சங்க நண்பர்கள் உற்சாகமாகத் தலையாட்டினார்கள். முதல் இதழுக்கு அநேகர் எழுதித்தந்தார்கள். தி.க.சிவசங்கரன், தி.ப.திருஞானசம்பந்தம் இருவரும் ஆர்வத்தோடு எழுதினார்கள். ஒவ்வொரு இதழுக்கும் ஏதாவது எழுதிக் கொடுத்தார்கள். மற்றவர்கள் இரண்டாவது இதழுக்குக் கூட எழுத ஆர்வமில்லாதவர்கள் ஆகிவிட்டார்கள்.

ஒவ்வொரு இதழையும் நல்ல முறையில் தயாரித்தேன். மற்றவர்கள் எழுதித் தந்ததைத் திருத்தி, ‘இளந்தமிழன்’ இதழில்

எழுதுவது, தேவையான இடங்களில் சித்திரங்கள் தீட்டுவது, மீதிப் பக்கங்களும் நானே எழுதுவது என்று பத்திரிகையை உருவாக்கினேன். சங்க வாலிபர்கள் இதழை மகிழ்ச்சியோடு வரவேற்றார்கள், பாராட்டினார்கள்.

ஐந்தாவது இதழுக்கு யாரும் எழுதித்தரவில்லை. நானே முழுவதும் எழுதினேன். இது தேவையில்லாத அதிகப்படியான வேலை என்ற எண்ணம் என்னுள் வளர்ந்துவந்தது. சங்கத் தலைமைப் பொறுப்பும் எனக்கு வீண்சுமை என்றே பட்டது. இரண்டையும் விட்டுவிடுவதுதான் நல்லது என்று என் மனம் சொன்னது.

இந்த நிலையில் நெல்லை வாலிபர் சங்கத்தின் ஆண்டு விழா கொண்டாடுவது என்று உறுப்பினர்கள் தீர்மானித்தார்கள் விழாவைப் பெரிய அளவில் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடுகள் செய்தார்கள்.

வழக்கமாக சங்கக் கூட்டம் சம்பந்தர் தெருவில் இருந்த ஒரு வீட்டின் மாடியில் கூடும். சங்க வாலிபர்கள் பேசுவதுடன், வெளியிலிருந்து பள்ளித் தமிழாசிரியர்கள் மற்றும் சில பெரியவர்களை அழைத்து வந்து பேசச் செய்வார்கள். ஆண்டு விழாவை வெகுசிறப்பாகக் கொண்டாட வேண்டும் என்பதற்காக சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளையை அழைக்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டது.

அறிஞர் சேதுப்பிள்ளையின் சொற்பொழிவு என்றால் கேட்பதற்குக் கூட்டம் சேரும். ஆகவே மந்திரமூர்த்தி உயர் நிலைப்பள்ளி நிர்வாகிகள், அரங்கத்தைக் கொடுத்து உதவ இசைந்தார்கள்.

1941 டிசம்பர் மாதம் ஒரு நாள் நெல்லை வாலிபர் சங்கத்தின் ஆண்டு விழா சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்காக நல்ல முறையில் அழைப்பிதழ் அச்சிட்டு வழங்கப்பட்டிருந்தது. அழைப்பின் முதல் பக்கத்தில், 'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழ் என்று சங்கே முழங்கு!' எனும் கவிஞர் பாரதிதாசன் கவிதை வரிகளை அச்சிடச் செய்தேன். நான்காம் பக்கத்தில், 'பேச்செல்லாம் தமிழினிலே பேசுங்கள்! ஏச்செல்லாம் தமிழினிலே ஏசுங்கள்!' என்று அச்சிடப்பட்டது.

விழாவுக்கு, எதிர்பார்த்தபடி, அதிகமான அன்பர்கள் வந்திருந்தார்கள். முறைப்படி விழா தொடங்கி நடந்தது. நான்

'முக்கூடற்பள்ளு' பற்றிப் பேசினேன். மற்றொரு இளைஞரும் உரையாற்றினார். பிறகு ரா.பி.சேதுப்பிள்ளை சொல்மாரி பொழிந்தார்.

சங்கத்தின் ஆண்டுவிழா அழைப்பிதழ் அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்திருந்தது. அதைக் குறிப்பிட்டுச் சொன்னார்.

'இந்தச் சங்கத்தைச் சேர்ந்த இளைஞர்களின் தமிழ்ப்பற்று பாராட்டப்பட வேண்டியது ஆகும். பேச்செல்லாம் தமிழினிலே பேசுங்கள் என்று கேட்டுக்கொள்கிறார்கள். அத்துடன் நிறுத்தி விடாமல் ஏச்சுக்களைக் கூடத் தமிழிலே ஏசுங்கள் என்று வேண்டுதல் விடுக்கிறார்கள். தமிழ் நாட்டில் தமிழ்மக்கள் இடியட், ஃபூல், ராஸ்கல் என்றெல்லாம் ஆங்கிலத்தில் ஏசுவது இயல்பாக இருக்கிறது. அப்படி ஏசாதீர்கள்; தமிழ் மொழியிலேயே திட்டுங்கள் என்று நெல்லை வாலிபர்கள் கோருகிறார்கள். முற்காலத்தில் சிவனடியார் ஒருவர் பாடினார், வைதாலும் தமிழினிலே வையுங்கள். வாழ்த்தெனக் கொண்டிடுவேன் என்றார். அந்த பக்தரின் பண்பும் தமிழ்ப்பற்றும், இவர்களுக்கு இருக்கிறது. இது சாதாரணமானது அல்ல என்று அவர் மகிழ்ச்சியோடு பாராட்டினார்.

தமிழ் உணர்வு, தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவது குறித்து சேதுப்பிள்ளை விரிவாகப் பேசினார். அவர் கூறிய கருத்துகள் என் மனசில் ஆழப்பதிந்து நிலைத்து விட்டன. அருவி எனும் அழகான சொல் இருக்கிறது. ஆனால் இப்போதெல்லாம் அருவிக்கு பதிலாக நீர்வீழ்ச்சி என்று எழுதுகிறார்கள். ஆங்கிலத்தில் வாட்டர்ஃபால்ஸ் எனக் கூறப்படுவதைப் பின்பற்றி தமிழ் நாட்டினரும், அதன் மொழிபெயர்ப்பாக நீர்வீழ்ச்சி எனக் குறிப்பிடுகிறார்கள். அருவி எனும் அழகான சொல்லை ஒதுக்கிவிட்டு, நீர்வீழ்ச்சி என்று ஏன் அமங்கலமாகக் கூற வேண்டும் என்று சேதுப்பிள்ளை கேட்டார்.

அதே போல காவிரி என்ற இனிய சொல் வழக்கத்தில் காவேரி என்று திரிந்துள்ளது. பேச்சிலும் எழுத்திலும் அப்படியே வழங்கப்படுகிறது. காவேரி என்பது பொருளற்றது. காவிரி என்பது தோப்புகள் மரங்கள் அடர்ந்த கரைகளினூடே விரிந்து செல்கிற ஆற்றைக் குறிப்பிடும் சொல். காவேரி என்றால்? மழைநாட்களில் காவிரியில் செம்மண் நிறத்தில் நீர் ஓடும். அதில் குளித்துக் கரை ஏறுகிறவர்களின் வெள்ளை வேட்டி காவியேறி நிறம் மாறிக் காணப்படும், அதைக் குறிக்கத் தான் காவேரி என்று சொல்கிறார்கள் போலும் என்று சேதுப்பிள்ளை குறிப்பிட்டார்.

தமிழ் மொழி பலவகைகளிலும் சிதைக்கப்படுகிறது. நல்ல தமிழ் பேசவும் எழுதவும் சிறுபிள்ளைப் பருவத்திலிருந்தே கற்றுத் தரப்பட வேண்டும். ஆனால் தற்காலத்தில் பள்ளிக்கூடங்களில் கூட தமிழைக் கெடுக்கத்தான் சொல்லித் தரப்படுகிறது. ஆரம்பகல்விப் பாடநூலில் தவறான சொற்களைச் சேர்த்திருக்கிறார்கள். டங்கா, டமாரம், டப்பி என்று கற்றுத் தரப்படுகிறது. தமிழ் இலக்கணத்தின்படி 'ட' என்ற எழுத்து மொழி முதலில் வராது- வரக்கூடாது. ஆனால் பள்ளி ஆசிரியர்களோ டங்கா, டமாரம், டப்பி என்று போதிக்கிறார்கள். பாடப்புத்தகத்தில் அவை அச்சிடப்பட்டிருக்கின்றன. இது பிழை. இப்படித் தவறு செய்கிறவர்களை 'டாகினிப் பேய்' தான் தண்டிக்கவேண்டும். தமிழ் இலக்கியத்தில் 'டாகினியை, இடாகினி' என்றுதான் குறிக்கப்பட்டுள்ளது. தவறுகள் செய்வோரை தண்டிக்கக்கூடிய பேய் அது. தமிழில் பிழையாக டங்கா, டமாரம், டப்பி என்ற தன்மையில் பேசுகிறவர்களையும் எழுதுகிறவர்களையும் டாகினிப் பேய் கவனிக்கட்டும் என்று சுவாரசியமாக உரையாற்றினார் சொல்லின் செல்வர்.

இவ்விதம் அரிய கருத்துக்கள் கொண்ட சிறப்புரையை அவர் ஒருமணி நேரத்துக்கும் அதிகமாகவே பேசி சபையோரின் செவிகளுக்கு விருந்து அளித்தார். நெல்லை வாலிபர் சங்கத்தைச் சேர்ந்தவர்கள் சீரிய முறையில் தமிழ்ப்பணி புரியவேண்டும் என்றும் அவர் வழிவகுத்துக் கொடுத்தார்.

கடைவீதிகளில் உள்ள கடைகளின் பெயர்ப் பலகைகளில் எல்லாம் தமிழ்ப் பெயர்களை விட ஆங்கிலச் சொற்கள் கொண்ட பெயர்களே காணப்படுகின்றன. திருநெல்வேலிக் கடைவீதியில் ஒரு கடை ஆயத்த அணிகலன் அங்காடி என்று அழகுதமிழ்ச் சொற்களில் பெயர்வைத்திருக்கிறது. இது மகிழ்ச்சிக்கு உரியது. பல கடைகளில் எழுதிவைக்கப்பட்டுள்ள பெயர்ப்பலகைகளில் எழுத்துப் பிழைகள் மிகுந்து காணப்படுகின்றன. தமிழுக்கு ஊறு செய்யும் போக்குகள் இவை. இத்தகைய தவறுகள் திருத்தப்பட வேண்டும். நெல்லை வாலிபர் சங்க இளைஞர்கள் கடைக்காரர்களைக் கண்டு பேச வேண்டும். பிழைகளைத் திருத்தி எழுதும்படி கூறவேண்டும். தமிழ்ப் பெயர்கள் வைக்கும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். அதற்கு அவர்கள் இசையாவிட்டால், நம் இளைஞர்களே பெயின்ட்டும் பிரஷூம் எடுத்துச் சென்று ஆங்கிலப் பெயர்களை அழிக்கவேண்டும்; சொற்பிழைகளைத்

திருத்தி நல்ல முறையில் எழுத வேண்டும். இத்தகைய நற்பணிகளிலும் தமிழ்ப்பற்றுடைய வாலிபர்கள் ஈடுபடட்டும் என்று தமிழறிஞர் சேதுப்பிள்ளை உபதேசித்தார்.

ஆண்டுவிழா வெற்றிகரமாக நடந்து முடிந்த சில வாரங்களில் நான் சங்கத் தலைமைப் பொறுப்பை விட்டுவிட்டேன். 'இளந்தமிழன்' இதழை சங்க வாலிபர்கள் தொடர்ந்து நடத்த விரும்பினால், அவர்கள் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளலாம் என்று தெரிவித்தேன்.

எங்களால் ஆகாது; நீங்கள் இதழை வைத்துக் கொள்ளுங்கள் என்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். நான் என் - விருப்பத்தைப்போல் எழுதுவதற்கு 'இதய ஒலி' இதழ் எனக்கென்று இருந்தது. அதன் பக்கங்கள் முழுவதையும் விதம்விதமான எழுத்துக்களால் நானே நிரப்பினேன். அதற்காக அநேக புனைப்பெயர்கள் சூட்டிக்கொண்டேன். வல்லிக்கண்ணன், ரா.சு.கிருஷ்ணசுவாமி என்ற பெயர்களோடு நையாண்டி பாரதி, கோரநாதன், சொக்கலிங்கம், சொனாமுனா, மிவாஸ்கி, பிள்ளையார் என்றெல்லாம் பல பெயர்கள் வைத்துக் கொண்டு எழுதினேன்.

ரா.பி.சேதுப்பிள்ளை ராஜவல்லிபுரம் ஊர்வாசிதான். எங்களுக்கு உறவினரும் கூட. எனினும் நான் அவரை எனது இருபத்தொன்றாவது வயதில் தான் முதல் முறையாகப் பார்த்தேன். அவர் ராஜவல்லிபுரத்தில் வசித்ததில்லை. அங்கு அவருக்கு வீடு இருந்தது. அது உபயோகிப்பாரற்றுப் பூட்டிக்கிடந்தது. அவர் சென்னையிலேயே வசித்தார். எப்போதாவது திருநெல்வேலிக்கு வந்தாலும், அங்கே சுடலைமாடன் கோயில் தெருவில் இருந்த மனைவி வீட்டிலும் மற்றும் உறவினர் வீட்டிலும் தங்கிவிட்டுப் போய் விடுவார்.

சேதுப்பிள்ளையின் கம்ப இராமாயணக் கட்டுரைகளை நான் எனது மாணவப் பருவத்திலேயே படித்திருக்கிறேன். 'ஆனந்த போதினி' என்ற இலக்கிய மாசிகையில் அவை வெளிவந்தன. சென்னையிலிருந்து வீரபாகுப் பிள்ளை நடத்திய 'ஒற்றுமை' இதழிலும் சேதுப்பிள்ளை கட்டுரைகள் பிரசுரமாயின. பள்ளி நாள்களில் பரிசுகள் வழங்கப்பட்டபோது, சேதுப்பிள்ளை எழுதிய சிறுபுத்தகங்கள் ('தமிழ் நாட்டு நவமணிகள்' என்று சிறந்த மகளிர் பற்றி எழுதப்பட்ட நூல் போன்றவை) எனக்கு அளிக்கப்பட்டிருந்தன.

ஆண்டு விழாவின்போது அவரைப் பார்த்ததும், அவருடைய சொற்பொழிவைக் கேட்டதும் போதுமானது என்றே தோன்றியது எனக்கு. எந்த அறிஞரையும் பார்த்துப் பேச வேண்டும் என்ற ஆசை என்றுமே இருந்ததில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் 1941ல் ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியாரையும் ஒரு முறை சந்திக்கும் வாய்ப்பு கிட்டியது. தாமிரவர்ணி ஆற்றின் கரையை ஒட்டியுள்ள வண்ணார்பேட்டை என்ற ஊரில் டி.கே.சி. வசித்துவந்தார். அதே தெருவில் அவருடைய வீட்டுக்குப் பக்கத்தில்தான் புதுமைப்பித்தன் வீடும் இருந்தது. புதுமைப்பித்தனின் தந்தை சொக்கலிங்கம் பிள்ளை அங்கு வசித்தார். புதுமைப்பித்தன் சென்னையில் இருந்தார்.

டி.கே.சி. வீட்டில் 'வட்டத்தொட்டி' கூட்டங்கள் நடத்தப்படுவது உண்டு. வீட்டின் முற்றத்தில் வட்டமாக ஒரு தொட்டிக்கட்டப்பட்டிருந்தது. டி.கே.சி.யும் அவரைக் காண வருகிறவர்களும் அதைச் சுற்றி அமர்ந்து பேசிக்கொண்டிருப்பார்கள். அதனால் அந்நிகழ்வுகளுக்கு 'வட்டத் தொட்டி'க் கூட்டம் என்று பெயர் ஏற்பட்டிருந்தது. அங்கு கூடிப் பேசிப் பழகியவர்கள் 'வட்டத் தொட்டி' நண்பர்கள், 'வட்டத் தொட்டியைச் சேர்ந்தவர்கள்' என்ற குறிப்பிடப்பட்டார்கள்.

டி.கே.சி. கலைமகள், ஆனந்தவிகடன், சக்தி முதலிய பத்திரிகைகளில் கவிதை மற்றும் இலக்கியம் குறித்து ரசமான கட்டுரைகள் எழுதிவந்தார். ஆனந்த விகடன் தீபாவளி மலர்களில் அவர் எழுதிய கட்டுரைகள் வெகு சிறப்பானவை. அத்தகைய கட்டுரைகளை எல்லாம் தொகுத்து, டி.கே.சி.யின் அன்பர்கள் 'புதுமைப் பதிப்பகம்' - ரினைசான்ஸ் பப்ளிஷர்ஸ்-என்ற வெளியீட்டகத்தின் வழியாக நூல் வடிவில் வெளியிட்டிருந்தார்கள். 'இதய ஒலி' என்பது அதன் பெயர். சிறந்த கட்டுரைத் தொகுப்பு.

அப்பதிப்பகத்தினரே கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் கவிதைகளையும் தொகுத்து 'மலரும் மாலையும்' என்ற பெயரில் வெளியிட்டிருந்தார்கள். 'முக்கூடற்பள்ளு' வையும் நல்ல பதிப்பாகப் பிரசுரித்திருந்தார்கள்.

'இதய ஒலி'யைப் படித்துச் சுவைத்திருந்த நாங்கள்- (நான் தி.க.சிவசங்கரன், வேலாயுதம் என்ற நண்பர் மூவரும்) - ஒருநாள் டி.கே.சி.யை சந்திப்பதற்காக வண்ணார்பேட்டை போனோம். திருநெல்வேலி டவுனிலிருந்து புறப்பட்டு, நடந்து ஜங்ஷன்

அடுத்துள்ள சிந்துபூந்துறை கிராமம் சேர்ந்தோம். எதிராக மறு கரையில் இருப்பது வண்ணார்பேட்டை.

நீரில் இறங்கி ஆற்றைக் கடந்தோம். தண்ணீர் அதிகமாக இல்லை. இறங்கி நடப்பதற்கு வசதியாக இருந்தது. தண்ணீரை ஒட்டி நீண்ட படித்துறையும் கரையின் மீது பேராச்சி அம்மன் கோயிலும் உள்ளன. இவை எல்லாம் புதுமைப்பித்தன் கதைகளில் இடம் பெற்றிருக்கின்றன.

ஆற்றைக் கடப்பதற்கு, சிறிது தூரத்தில், சுலோசன முதலியார் பாலம் இருக்கிறது. கிழக்கிந்தியக் கும்பெனியார் காலத்தில், கும்பெனியில் துபாஷ் வேலை பார்த்த முதலியாரால் கட்டப்பட்ட பாலம் அது. ரொம்பவும் உறுதியானது. சுண்ணாம்பு பனைவெல்லம், முட்டைக்கரு, பதநீர் எல்லாம் சேர்த்து சாந்தாக அரைத்துப் பாலத்தைக் கட்டியிருந்தார்கள்; எந்த வெள்ளமும் அதை அசைக்கமுடியாது என்று மக்கள் பெருமையாகப் பேசுவார்கள்.

பாலம் வழியாக வருவது சுற்றுவழி என்பதால், நாங்கள் ஆற்றில் இறங்கி நடந்து வண்ணார்பேட்டை அடைந்தோம். மாலை 4 மணி அளவில் டி.கே.சி.வீடு போய்ச் சேர்ந்தோம்.

வீட்டின் முன் பகுதியில், டி.கே.சி.யின் உதவியாளராகப் பணிபுரிந்த எஸ்.வேங்கடசுப்பிரமணியம் என்ற இளைஞர் இருந்தார். பிற்காலத்தில், எஸ்.வி.எஸ். என்ற பெயரில் எழுத்தாளராகத் தெரியவந்தவர். 'கல்கி' பத்திரிகையில் உதவி ஆசிரியராகப் பணியாற்றினார். அவரிடம் நாங்கள் எங்களை அறிமுகம் செய்து கொண்டு எங்கள் விருப்பத்தைத் தெரிவித்தோம்.

அடுத்த அறையில் சாய்வுநாற்காலியில் டி.கே.சி. ஓய்வாகச் சாய்ந்திருந்தார். அவரிடம் எங்களை அழைத்துச் சென்ற எஸ்.வி.எஸ், 'உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள்' என்றார்.

டி.கே.சி. நிமிர்ந்து உட்கார்ந்து, முகம் முழுவதும் மலர்ச்சியுற, அன்புடன் எங்களை வரவேற்றார். அருகில் இருந்த ஆசனங்களில் அமரும்படி சொன்னார். நாங்கள் அவரிடமும் எங்களை அறிமுகம் செய்து கொண்டோம். நாங்கள் என்ன செய்கிறோம் என்று விசாரித்தார். எங்களை அவர் அலட்சியப்படுத்தவில்லை. தமிழின் சிறப்பு, பழம் தமிழ் இலக்கியங்கள், தமிழ்க் கவிதைகளின் உயர்வு, கம்பராமாயணம் முத்தொள்ளாயிரம் பற்றி எல்லாம் அவர் தமது இயல்புப்படி விவரித்தார். அச்சமயத்தில்தான் வெளிவந்திருந்த

'இதய ஒலி' கட்டுரைத் தொகுப்பை எடுத்து, அதில் உள்ள நயமான பகுதிகள் பலவற்றை சுவாரசியமாகப் படித்துக் காட்டினார். பாடல்களை பாவத்தோடு பாடினார்.

பள்ளிக் கூடப் படிப்பு, கல்லூரியில் படித்து பட்டம் பெற்றவர்கள் பற்றி எல்லாம் டி.கே.சி.க்கு நல்ல அபிப்பிராயம் கிடையாது. பள்ளிக்கூடம் போய் படிப்பது வீண் என்ற கருத்து உடையவர் அவர். படித்துப் பட்டம் பெற்று பத்திரிகைகளில் எழுதிக்கொண்டிருந்த பலரது எழுத்துக்கள், எண்ணங்கள் எல்லாம் அவருக்குப் பிடிக்கா. அவை பற்றிக் கேலியாகவும் கண்டித்தும் அவர் பல இடங்களில் எழுதியிருக்கிறார். எங்களிடம் பேசும் போதும் அதே தொனியில் அவர் தமது கருத்துக்களை அழுத்தமாகக் கூறினார்.

டி.கே.சி. ரொம்பப் பெரியவர். அறிஞர்கள், பத்திரிகை ஆசிரியர்கள், அரசியல் தலைவர்கள் பலராலும் மதித்துப் போற்றப்பட்டவர். அவரைக் காணச் சென்ற நாங்கள் சிறுவர்கள். இருவர் மாணவர்கள். எனக்கு அப்போது வயது 21. எனினும் தோற்றத்தில் ஒரு பையன் மாதிரித்தான் இருந்தேன். இரண்டு மூன்று வருடங்களாகத் தான் பத்திரிகைகளில் எழுதிக் கொண்டிருந்தேன். இருப்பினும் டி.கே.சி. எங்களை சமமானவர்கள் போல் மதித்து இயல்பாகப் பேசினார். தமது கருத்துக்களை தாராளமாக எடுத்துச் சொல்லி மகிழ்ந்தார். அது அவருடைய பெரிய மனிதப் பண்பையும் உயர் பண்பாட்டையும் புலப்படுத்தியது.

ஒரு மணி நேரத்துக்கும் அதிகமாகவே உரையாடல் நிகழ்ந்தது. பிறகு நாங்களாகவே விடைபெற்றுப் புறப்பட்டோம். எங்களுக்கு மிகுந்த மனநிறைவு தந்தது அந்தச் சந்திப்பு. நான் மறக்க முடியாத மிக இனிய அனுபவமாக அது அமைந்தது. ஆயினும், டி.கே.சி.யை மீண்டும் சந்திக்க வேண்டும் என்ற விருப்பம் என்னுள் எழுந்ததில்லை. அதற்கான வாய்ப்பும் எனக்குக் கிட்டியதில்லை.

டி.கே.சி.வீட்டிலிருந்து திரும்பியபோது, ரோடு சுற்றி, கொக்கிரகுளம் பாலம் வந்து, பாலம் வழியாக ஜங்ஷன் சேர்ந்து, நேரே நெல்லையப்பர் நெடுஞ்சாலையில் நடந்து திருநெல்வேலி திரும்பினோம்.

எனக்கு படிப்பதற்குப் புத்தகங்கள் தாராளமாகக் கிடைத்துக் கொண்டிருந்தன. புதிது புதிதாக நல்ல புத்தகங்கள் வெளிவந்தன. அவற்றில் அநேகம் நூல்களை நாங்கள் விலை கொடுத்து வாங்கினோம்.

'பாரதிதாசன் கவிதைகள்' புதிய பதிப்பு வெளிவந்தது. நெல்லை வாலிபர்களுக்கு பாரதிதாசன் கவிதைகள் மீது மிகுந்த ஈடுபாடு ஏற்பட்டது.

அல்லயன்ஸ் கம்பெனி 'தமிழ்நாட்டுச் சிறுகதைகள்' என்ற வரிசையில் தொடர்ந்து, பெயர் பெற்ற எழுத்தாளர்களின் கதைகளைத் தொகுத்து தனித்தனிப் புத்தகமாக வெளியிட்டது. முதலாவதாக வ.வே.சு. ஐயரின் 'குளத்தங்கரை அரச மரம்' வந்தது. அடுத்து, 'ராஜாஜி குட்டிக்கதைகள்', த.நா. குமாரஸ்வாமியின் 'கன்யாகுமரி', கு.ப.ராஜகோபாலனின் 'கனகாம்பரம்', ந.சிதம்பரசுப்ரமணியனின் 'சக்ரவாகம், தி.ஜ. ரங்கநாதனின் 'சந்தனக்காவடி', தி.நா.சுப்பிரமணியனின் 'தோட்டியை மணந்த அரசகுமாரி', பி.எம். கண்ணணின் 'பவழமாலை', கா.சி. வேங்கடரமணியின் 'ஜடாதரன்' ஆகியவை தொடர்ச்சியாகப் பிரசுரம் பெற்றன.

இப்படி ஒவ்வொரு எழுத்தாளரின், ஏற்கனவே பத்திரிகைகளில் பிரசுரம் பெற்ற, சிறுகதைகள் பலவற்றைத் தொகுத்து தனித்தனிப் புத்தகமாக வெளியிட்டதுடன், அல்லயன்ஸ் கம்பெனி மற்றொரு முக்கியமான காரியத்தையும் செயல்படுத்தியது. பல எழுத்தாளர்களின் ஒவ்வொரு கதையைச் சேகரித்து 'கதைக்கோவை' என்ற பெயரில் பெரிய தொகுப்பாக வெளியிட்டது. இதனால் தமிழ்ச் சிறுகதையின் வளர்ச்சியையும், வளத்தையும், வகைகளையும் வாசகர்கள் புரிந்து கொள்வதற்கு வாய்ப்பு ஏற்பட்டது.

மொழிபெயர்ப்பு நாவல்களும் அதிகமாக வெளிவந்து, நல்ல விற்பனையைப் பெற்றன. பங்கிம் சந்திரரின் 'ஆனந்த மடம்', 'விஷவிருட்சம்' வந்தன. 'தேவி சௌதுராணி', 'ராஜ புத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம்' போன்ற நாவல்களின் தமிழாக்கங்கள் வெளிவந்தன.

'கலைமகள்' பத்திரிகை பிரேம்சந்த் நாவல்களின் மொழிபெயர்ப்பை தொடர்கதையாக வெளியிட்டது. தாரா சங்கரின் 'அக்கினி' நாவலைத் தொடர்ந்து பிரசுரித்தது. ஆனந்தவிகடன் 'சேவா சதனம்' நாவலை வெளியிட்டது. சரத் சந்திரர் நாவல்களின் மொழிபெயர்ப்பும் புத்தகங்களாகப் பிரசுரிக்கப்பட்டன. இப்படியாக வங்காள, இந்தி நாவல்கள் தமிழில் வேகமான அறிமுகத்தையும் பரவலான கவனிப்பையும் தொடர்ந்து பெற்றுக் கொண்டிருந்தன.

இந்த நிலையில், வி.எஸ்.காண்டேகர் எனும் மராத்தி எழுத்தாளரின் நாவல்கள் தமிழில் அறிமுகமாயின. முதலில் ‘வெறும் கோயில்’ என்ற நாவல் புத்தகமாகவே வெளிவந்தது. காண்டேகரின் எழுத்தாற்றலும், கதை சொல்லும் முறையும் கதையின் பொருளும், கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் திறமையான தமிழாக்கமும் அந்த நாவலுக்கு நல்ல வரவேற்பையும் பாராட்டுதலையும் பெற்றுத் தந்தன. தொடர்ந்து காண்டேகரின் ‘சுகம் எங்கே?’ ‘எரி நட்சத்திரம்’ ஆகிய நாவல்கள் வெளிவந்து வாசகர்களின் கவனிப்பையும் ஆதரவையும் பெற்றன. அடுத்து வந்த ‘கருகிய மொட்டு’ பரபரப்பான கவனிப்பையும் விமர்சனங்களையும் பெற்றது.

திருமணம் மூலம் இணைகிற ஆண்கள் பெண்களின் இல்லற வாழ்க்கையின் குறைபாடுகள் பற்றி பொருந்தாத ஜோடிகளின் காமஉறவின் திருப்தியின்மை குறித்து அந்தஅந்தப் பாத்திரங்களே சொல்வதுபோல் எழுதப்பட்ட நாவல் ‘கருகிய மொட்டு’- சிறிது வெளிப்படையாக இல்லற உறவு பற்றிப் பேசுவது. காண்டேகர் அழகான நடையில் எழுதியிருப்பார். கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் தமிழாக்கம் சிறப்பாக அமைந்திருந்தது.

காண்டேகர் நாவல்களுக்குத் தமிழ்நாட்டில் ‘கிராக்கி’ ஏற்பட்டது. புத்தகங்கள் தொடர்ந்து வந்தன. பல பத்திரிகைகள் காண்டேகர் நாவலை தொடர்கதையாக வெளியிடுவதில் ஆர்வம் காட்டின. அனைத்தையும் கா.ஸ்ரீ.ஸ்ரீ. (கா.ஸ்ரீ. ஸ்ரீநிவாசாச்சார்யா) தான் தமிழாக்கி உதவினார். அதனால் காண்டேகர், மகாராஷ்டிரத்தில் பெற்ற ஆதரவையும் கவனிப்பையும் விட அதிகமான கவனிப்பையும் போற்றுதலையும் தமிழ்நாட்டில் பெற்றார். தமிழ வாசக உலகில் பதினைந்து இருபது வருடங்கள் ‘காண்டேகர் சீசன்’ நிலவியது.

காண்டேகர் பாணியில் நாவல்கள் எழுதுவதில் சில எழுத்தாளர்கள் உற்சாகம் காட்டினார்கள்.

காண்டேகர் நாவல்களும் சிறுகதைத் தொகுப்புகளும் எனக்குப் படிக்கக் கிடைத்தன.

தி.க. சிவசங்கரனும் புதிய புத்தகங்கள் வாங்கிப் படிப்பதில் ஆர்வம் கொண்டிருந்தார். அவர் வாங்கும் புத்தகங்களை எங்களுக்குப் படிக்கத் தருவதை வழக்கமாகக் கொண்டார். மகாத்மா காந்தியின் நூல்கள், சுபாஷ் சந்திர போசின் ‘இளைஞன் கனவு’, வ.ரா. கட்டுரைகளின் தொகுப்பு ‘மழையும் புயலும்’ போன்ற நூல்கள் அவர் மூலம் கிடைத்தன.

பெரிய அண்ணாச்சி கலியாணசுந்தரத்துக்கு அறிமுகமான போலீஸ்காரர் ஒருவர் இருந்தார். வள்ளிநாயகம் என்று பெயர்.தமிழ் இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டவர். சங்க இலக்கியங்கள் சம்பந்தமான நூல்கள் (சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடுகள்), திரு.வி. கல்யாணசுந்தரமுதலியார் எழுதிய புத்தகங்கள் முதலியவற்றை அவர் வைத்திருந்தார். அவற்றைப் படிப்பதற்காக எனக்கு உதவினார்.

திருநெல்வேலி நகரசபை நூல்நிலையத்தில் ஆங்கிலப் புத்தகங்களும் மிகுதியாக இருந்தன. பெர்னாட்ஷா நாடகங்கள் பலவும் அங்கு கிடைத்தன. அண்ணா கோமதி நாயகம் அவற்றை வீட்டுக்கு எடுத்து வந்தார். ஆகவே படிப்பதற்கான நல்ல புத்தகங்களுக்குக் குறைவே இல்லை.

நல்ல பத்திரிகைகளும் கிடைத்து வந்தன. ‘கலைமகள்’ இலக்கியத் தரத்துடன் வந்து கொண்டிருந்தது. ‘சக்தி’ மாத இதழ் வேறுவகையில் தரமான இதழாக வளர்ந்து வந்தது.

சிறந்த நோக்கமும் உயர்ந்த கொள்கைகளும் கொண்டிருந்த இலட்சியவாதியான வை.கோவிந்தன் ‘சக்தி’ பத்திரிகையைத் தொடங்கி நடத்தினார். யுத்தகாலத்தில் பாதிக்கப்பெற்று, பர்மாவிலிருந்து வெளியேறி நடந்தே இந்தியா வந்து சேர்ந்து அவரவர் பிரதேசங்களை சென்றடைந்தவர்கள் பலராவர். அப்படி தமிழ்நாடு வந்து சேர்ந்த நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அநேகர். அவர்களில் வை.கோவிந்தனும் ஒருவர்.

தமிழில் உயர்தரமான நூல்களைக் குறைந்த விலையில் வெளியிட வேண்டும்; ஆங்கிலத்தில் வெளிவந்து கொண்டிருந்த ‘டைம், ரீடர்ஸ் டைஜஸ்ட்’ மாதிரி தமிழிலும் சிறந்த முறையில் ஒரு பத்திரிகை நடத்த வேண்டும் என்று வை.கோவிந்தன் ஆசைகளை வளர்த்து வந்தார். சென்னை வந்து சேர்ந்ததும், அந்த முயற்சியில் அவர் உற்சாகமாக ஈடுபட்டார்.

சக்தி பிரசுராலயம் என்ற பெயரில் வை.கோவிந்தன் ஒரு பதிப்பகம் தொடங்கி, நல்ல நூல்களை வெளியிடலானார். அந்நாள்களில் ‘பெங்குவின் புக்ஸ்’ எனும் ஆங்கில வெளியீடுகள் ஆறணா விலையில் விற்பனை செய்யப்பட்டன. புனைகதைகளை அந்தப் பெயரிலும், அறிவியல் நூல்களை ‘பெலிகன் புக்ஸ்’ என்ற பெயரிலும் பெங்குவின் நிறுவனம் வெளியிட்டு வந்தது. ஒரே மாதிரி அட்டை அமைப்புடன், ஆனால் மாறுபட்ட வர்ணங்களில்

புத்தகங்கள் தோற்றம் கொண்டிருந்தன, அட்டையில் படங்கள் கிடையா. நூலின் பெயரும் ஆசிரியர் பெயரும், பெங்குவின் புக்ஸ் என்பதும் எடுப்பான எழுத்துக்களிலேயே அச்சிடப்பட்டிருக்கும்.

அதே ரீதியான அட்டை அமைப்புடன் வை.கோவிந்தன் சக்தி புத்தகங்களை வெளியிட்டார். நல்ல மொழிபெயர்ப்புகள், தமிழில் சொந்தமாக எழுதப்பட்ட நூல்கள் எனப் பலவகையான நூல்களும் சக்தி காரியாலய வெளியீடுகளாக வந்தன, ஆரம்பத்தில் எட்டணா, பன்னிரண்டணா விலையில் புத்தகங்கள் வெளியிடப்பட்டன. போகப் போகக் காலத்தின் கட்டாயத்தால் விலைகளை அதிகரிக்க வேண்டியது அவசியமாயிற்று.

அந்த நிலையிலும், பல வருடங்களுக்குப் பின்னர், வை. கோவிந்தன் மலிவு விலை நூல்களை துணிந்து வெளியிட்டு, புத்தகப் பிரசுரத் துறையில் ஒரு வழிவகுத்துக் கொடுத்தார். பாரதியார் கவிதைகளை ஒரு ரூபாய் விலையில் அச்சிட்டு விற்பனைக்கு அனுப்பினார். திருக்குறள் உரையுடன் தனிப்புத்தகமாக வந்தது. மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் 'பிரதாப முதலியார் சரித்திரம்' நாவலையும் 'சுகுணசுந்தரி'யையும் ஒரே புத்தகமாக வெளியிட்டார்.

இதிலும் அவர் புதுமை செய்திருந்தார். 'பிரதாபமுதலியார் சரித்திரம்' ஒருபுறம். அதே புத்தகத்தின் பின்பக்கத்திலிருந்து 'சுகுணசுந்தரி' ஆரம்பமாகியிருந்தது. 'பிரதாபமுதலியார் சரித்திரம்' படித்துமுடித்ததும், புத்தகத்தைத் திருப்பி மாற்றிப் பிடித்து 'சுகுண சுந்தரி'யை வாசிக்க வேண்டும்.

கம்பராமாயணம் முழுவதையும், ஒவ்வொரு காண்டத்தையும் தனித்தனிப் புத்தகமாக, ஒன்றரை ரூபாய் விலையில் வெளியிட வை.கோவிந்தன் திட்டமிட்டார். சுந்தர காண்டம் மட்டும் முதலில் பிரசுரம் பெற்றது. இதர காண்டங்கள் வெளியிடப் பெறவில்லை.

வை.கோவிந்தனின் துணிச்சலான மலிவு விலை வெளியீட்டு முயற்சியையும், அதற்கு நாடுநெடுகிலும் இருந்த வரவேற்பையும் கவனித்த இதர பல புத்தகவெளியீட்டாளர்களும், பலவகையான நூல்களையும் மலிவு விலைப் பதிப்புகளாகப் பிரசுரம் செய்ய முற்பட்டார்கள். பஞ்சதந்திரக் கதைகள், கதைக்கடல், விக்கிரமாதித்தன் கதைகள், மதனகாமராஜன் கதைகள், நடேச சாஸ்திரியின் 'தீனதயாளன்' நாவல் போன்ற பலரகமான புத்தகங்களும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டன.

பொதுவாகவே, பதிப்பகத்துறையில் ஈடுபட்ட செட்டியார்கள் பலரும் வை.கோவிந்தனை தங்கள் முன்னோடியாகவும், வழிகாட்டியாகவும் கொண்டு செயல்பட்டார்கள்.

புத்தகங்கள் பதிப்பித்து வெளியிடுவதில் சாதனைகள் புரிந்த வை. கோவிந்தன் 'சக்தி' என்ற தனிரகமான பத்திரிகையையும் நடத்தி, இதழியல் துறையில் தனியிடம் பெற்றார். 'சக்தி' மாத இதழ் முதலில் ஒரு வருடம் அகல சைசில், 'டைம்' பத்திரிகை மாதிரியே அட்டை அமைப்புக் கொண்டு வெளிவந்தது. அப்போது சுவாமி சுத்தானந்த பாரதியார் அதைப் பொறுப்புடன் கவனித்து வந்தார். அவருடைய படைப்புகள் அதில் மிகுதியாக வந்தன. பிற்காலத்தில் அவருக்குப்புகழ் பெற்றுத்தந்த 'பாரத சக்தி மகாகாவியம்' ஆரம்பப் பகுதி தொடர் கவிதையாக 'சக்தி'யில் வெளிவந்தது.

ஒரு வருடத்துக்குப் பிறகு தி.ஜ. ரங்கநாதன் (தி.ஜ.ர.) 'சக்தி'யின் ஆசிரியர் பொறுப்பேற்று, பெரும் மாறுதல்களைப் புகுத்தினார். பத்திரிகையின் வடிவம் மாற்றப்பட்டது. கச்சிதமான புத்தக வடிவத்தில், கனத்த அட்டையுடன், வசீகர வர்ணப்பொலிவு பெற்று 'சக்தி' புதுமலர்ச்சி பெற்றது. அட்டையில் பிரபலஸ்தர் ஒருவரின் படத்தை அச்சிட்டு, அவரைப்பேட்டி கண்டு, சுவாரசியமான கட்டுரையாக எழுதினார் தி.ஜ.ர. இந்த விதமாக கவிஞர் பாரதிதாசன், வெ. சாமிநாத சர்மா, திரு.வி. கல்யாண சுந்தர முதலியார் போன்றோர் பற்றி வாசகர்கள் அதிகம் தெரிந்து கொள்ளமுடிந்தது. உள்ளடக்கத்திலும் பல மாறுதல்கள் செய்தார் தி.ஜ.ர. சுயமான கட்டுரைகள் கதைகளோடு மொழிபெயர்ப்பு விஷயங்களுக்கு அதிக இடம் ஒதுக்கப்பட்டது 'டைஜஸ்ட்' பாணிப் பத்திரிகையாக 'சக்தி' மறுமலர்ச்சி பெற்று விளங்கியது.

'சக்தி'யிலும் எனது எழுத்து பிரசுரம் பெற்றது, 'சக்தி'யை திருநெல்வேலி வாசகர்களிடம் அதிகம் பரப்புகிற முயற்சியில் நானும் என் சகோதரர்களும் ஈடுபட்டோம்.

'சக்தி' இதழுக்கு திருநெல்வேலியில் விற்பனையாளர் யாரும் இல்லை. 'சக்தி'யை மாதம் தோறும் பத்துப்பிரதிகள் எனக்கு அனுப்பிவைத்தால், அவற்றை விற்று உடனடியாக உரிய பணத்தை அனுப்பி வைக்க இயலும். முன்பணமாக (ஏஜன்சி டிப்பாசிட்) எதுவும் கட்ட இயலாது. என்னை நம்பி இதழ் அனுப்பினால், இந்த வட்டாரத்தில், 'சக்தி' பத்திரிகை பரவுவதற்கு உதவ முடியும் என்று சக்தி காரியாலயத்துக்கு எழுதினேன்.

அந்த சந்தர்ப்பத்தில் சுப. நாராயணன் அங்கு விற்பனைப் பிரிவின் மேலாளராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். நல்ல சிந்தனையாளர் பிற்காலத்தில் நல்ல எழுத்தாளராக அவர் வளர்ச்சி பெற்றார். அவர் என் எழுத்துக்களிலும், எனது தமிழ் நடையிலும் வியப்பும் மதிப்பும் கொண்டிருந்தார். எனவே அவர் மாதம் தோறும் எனக்கு பத்துப் பிரதிகள் அனுப்ப ஏற்பாடு செய்தார். அவை விற்பனையானதும் உடனேயே பணத்தை அலுவலகத்துக்கு அனுப்பிவைத்தோம். விற்பனையாளருக்கு உரிய கமிஷனைக் கழித்துக்கொண்டு பணம் அனுப்பினால் போதும் என்று சுப. நாராயணன் தெரிவித்திருந்தார்.

இலக்கிய நண்பர்கள் 'சக்தி' யை ஆவலுடன் வரவேற்றார்கள். விரும்பி வாசித்தார்கள். அதன் விஷயச் சிறப்பைப் பேசி மகிழ்ந்தார்கள்.

விரைவிலேயே 'சக்தி'யின் விற்பனை ஐம்பது பிரதிகளை எட்டியது. சக்தி அலுவலகம் முன்பணம் கேட்காமலே அதிக அளவு பிரதிகளை அனுப்பி உதவியது.

மாதங்கள் மகிழ்ச்சிகரமாகப் போய்க்கொண்டிருந்தன. நான் எழுத்துத் துறையில் வளர்ந்து முன்னேற வேண்டும் என்ற உந்துதலோடு ஊக்கமாகவும் உற்சாகமாகவும் எழுதிக் கொண்டிருந்தேன். பத்திரிகைகள் பலவும், நான் எழுதி அனுப்புகிற வற்றையெல்லாம் மகிழ்ச்சியோடு வெளியிட்டன. இதுவும் என் உற்சாகத்தை அதிகப்படுத்தியது. பத்திரிகைகள் என் எழுத்துக்களுக்காக எனக்குப் பணம் தர வேண்டும் என்று நான் எண்ணவும் இல்லை; எதிர்பார்த்ததும் இல்லை.

முதன்முதலாக எழுத்து மூலம் எனக்கு சன்மானம் என்று கிடைத்தது ஆனந்த விகடன் பத்திரிகையிலிருந்துதான், 'புன்னகையும் புதுநிலவும்' என்ற எனது கதையை வெளியிட்ட விகடன் பதிமூன்று ரூபாய் எட்டணா சன்மானம் அனுப்பி என்னை மகிழச் செய்தது, கதை எழுதி அடுத்து நான் பெற்ற வருமானம் 'இந்திரா' இதழிலிருந்து. அது நடத்திய சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற எனது சிறுகதை 'தெருக்கூத்து' க்காக நூறு ரூபாய் வந்தது. அந்தக் காலத்தில் அது பெரிய தொகைதான்.

அதன் பிறகு 'இந்திரா' இதழ் தோறும் என் கதைகளை வெளியிட்டு வந்தது. ஆயினும் எனக்கு பணம் எதுவும் தரவில்லை. அவ்வப்போது என் கதைகளை வெளியிட்டது கலைமகள்'. அதுவும் எனக்குப் பணம் தந்ததில்லை. புதுமைப் பித்தன், கு.ப.

ராஜகோபாலன், ந.பிச்சமூர்த்தி போன்ற பெரிய எழுத்தாளர்களுக்கு மட்டும் 'கலைமகள்' சன்மானம் அளித்து வந்தது. கதைக்குப் பதினைந்து ரூபாய்.

எனக்கு முன்னோடிகளான இப் பெரிய எழுத்தாளர்களின் கதைகள் வெளிவந்த இதழ்களிலேயே என் கதைகளும் பிரசுரமாகிக் கொண்டிருந்தது எனது மகிழ்ச்சியை அதிகப் படுத்தியது. அது எனக்குப் பெருமையையும் சேர்த்தது.

அப்போது நான், இதர வகைக் கதைகளோடு, உருவகக் கதைகளும் எழுதிக் கொண்டிருந்தேன். ஆஸ்கார் ஒயில்ட் எனும் ஆங்கில எழுத்தாளர் 'ப்ரோஸ் போயம்ஸ்' என்ற பெயரில் தனிரகமான கதைகள் எழுதிப் பெயர் பெற்றிருந்தார். அழகிய நடையில், கவிதைத் தன்மையோடு, எழுதப்பெற்ற சின்னச் சின்னக் கதைகள் தத்துவ நோக்கில், வாழ்க்கை இயல்புகளை எடுத்துக் கூறும் குட்டிக்கதைகள். ஒரு பக்கத்துக்குள் அடங்கிவிடும். இவான் துர்கனேவ் என்கிற ரஷ்ய இலக்கிய எழுத்தாளரும் அப்படிப்பட்ட 'ப்ரோஸ் போயம்ஸ்' எழுதியிருந்தார். அந்த விதமான தத்துவக் கதைகளை நான் தமிழில் எழுதினேன். அவை நல்ல கவனிப்பைப் பெற்றுக் கொண்டிருந்தன.

# 2

சந்தோஷமான தன்மையிலேயே நாள்கள் போயின. நண்பர்கள் என்று திக. சிவசங்கரனும் திப. திருஞானசம்பந்தமும் திருவனந்தபுரம் எஸ். சிதம்பரமும் தினந்தோறும் மாலையில் வந்து பேசி மகிழ்ந்தார்கள். கல்லூரி சமாச்சாரங்கள், படித்த புத்தகங்கள், மாணவர்களின் போக்குகள், மனிதரின் விந்தைக் குணங்கள், சினிமாப் படங்கள் பற்றியெல்லாம் சுவையாக உரையாடினார்கள்.

சினிமா மக்களின் ஆதரவைப் பெற்று வளர்ந்து வந்தது. புதிய படங்கள், புதிய புதிய நடிகர்கள், நடிகைகள் மக்களை வசீகரிக்கும் சக்திகளாக விளங்குவதற்குக் காலம் உதவியது.

தமிழ்ப்படங்களில் பாடல்கள் அதிக முக்கியத்துவம் பெற்றிருந்தன. ஒரே படத்தில் முப்பது நாற்பது பாடல்கள் ஒலித்தன. அவையே முக்கியமாக விளம்பரப்படுத்தப்பட்டன. இனிய குரலில் கவர்ச்சியாகப் பாடத் தெரிந்தவர்கள் பெரிய நடிகரெனப் பெயர் பெறுவது சாத்தியமாகியிருந்தது. எம்.கே.தியாகராஜ பாகவதர் ஒளி மிகுந்த நட்சத்திர நடிகராக வளர்ந்து கொண்டிருந்தார். பாகவதர் நடித்த 'சிந்தாமணி' நீண்ட நாட்கள் ஓடின.

நடிகைகள் மக்களை மயக்கும் கவர்ச்சி சக்திக்களாக விளங்கலாயினர். 'சிந்தாமணி'யில் நடித்த அஸ்வத்தம்மா எனும் கன்னடப் பெண் தமிழ் ரசிகர்கள் பலரைப் பித்தர்களாக்கிக் கொண்டிருந்தாள். அஸ்வத்தம்மா பித்துப் பிடித்த ரசிகர் ஒருவர் இலங்கையிலிருந்து தமிழ்நாட்டுக்கு வந்து அந்த நடிகையைப் பார்க்க வேண்டும் என்று அலைந்தார். அஸ்வத்தம்மாவின் பெரிய காந்தக் கண்கள் இரவும் பகலும் பலரைப் புலம்பச் செய்தன. தவமணி தேவி துணிச்சலுடன் நீச்சல் உடையில் 'வனராஜ டார்சான்' என்ற படத்தில் கதாநாயகியாக நடித்துக் கவர்ச்சி நடிகை எனப் பெயர்பெற்றார். டைரக்டர் கே. சுப்பிரமணியம் அறிமுகம் செய்த டி.ஆர் ராஜகுமாரி ஒளிவீசும் நட்சத்திரமாக வளரலானார்.

நடிகர் பி.யூ.சின்னப்பா திறமையாகப் பாடவும் செய்தார்; நடிப்புத் திறமையும் காட்டினார். தியாகராஜ பாகவதரின் வசியத் தோற்றத்தை அவர் பெற்றிருக்கவில்லை.

படத்துக்கு வசனமும் தனித்தன்மை சேர்க்கக் கூடும்; பாடல், நடிகர் இவற்றுடன் அழகான, உணர்வுள்ள தமிழ் வசனம் படத்தை வெற்றிகரமாக்க முடியும் என நிரூபித்தார் இளங்கோவன் (ம.க. தணிகாசலம்) என்ற எழுத்தாளர்.

பாடல்கள்- பாபநாசம் சிவன்; நடிப்பு - எம்.கே.தியாகராஜ பாகவதர் அல்லது பி.யு. சின்னப்பா; வசனம் - இளங்கோவன் என்ற கூட்டுப் படங்களுக்குப் பெருமை சேர்த்தது.

சினிமா பற்றியும் நண்பர்கள் ரசமாகப் பேச்சு பரிமாறுவது வழக்கம். நானும் என் சகோதரர்களும் முக்கியமான நல்ல படங்களைப் பார்த்து மகிழ்ந்தோம்.

நான் வேலையை உதறிவிட்டு திருநெல்வேலி வந்து சேர்ந்து பத்து மாதங்கள் ஓடிவிட்டன. விரைவில் ஒரு வருடம் முடிந்துவிடும். நான் என் வளர்ச்சி குறித்து சிந்திக்கலானேன். திருநெல்வேலியிலேயே வீட்டோடு தங்கி இருந்து எழுதிக் கொண்டிருப்பது வளர்ச்சிக்குத் துணைபுரியாது என்ற எண்ணம் என்னுள் உறுத்திக் கொண்டிருந்தது. வெளியூர் சென்று ஏதாவது பத்திரிகையில் சேர்ந்து உழைத்தால் வளர்ச்சி ஏற்படலாம் என்ற நினைப்பும் எழுந்தது.

எனவே எனக்கு என் எண்ணம் நிறைவேறுவதற்கு உதவி செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரிந்த பத்திரிகை உலக நண்பர்களுக்குக் கடிதம் எழுதினேன்.

'சினிமா உலகம்' ஆசிரியர் பி.எஸ். செட்டியாரின் கடிதம் முதலில் வந்தது. 'சினிமா உலகம் பத்திரிகைக்கே ஒரு உதவி ஆசிரியர் தேவைப்படுகிறது. சிறிது காலம் பொறுத்திருங்கள் நானே உங்களை அழைத்துக் கொள்வேன்' என்று அவர் எழுதியிருந்தார்.

சென்னையிலிருந்து 'நவசக்தி' ஆசிரியர் சக்திதாசன் சுப்பிரமணியம் உற்சாகமாக எழுதியிருந்தார். 'நவசக்தியே' உங்களை ஏற்றுக்கொள்ளச் சித்தமாக இருக்கிறாள். ஆனால் இப்போது சந்தர்ப்பங்கள் சரியில்லை. யுத்தகால நெருக்கடிகளால் சிரமங்கள் நீடிக்கின்றன. மக்கள் குடும்பம் குடும்பமாக சென்னையை விட்டு வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள். பல பத்திரிகை அலுவலகங்கள் கூட வெளியூர்களுக்கு இடம்

மாறிவிட்டன. இந்த நிலையில் நான் உங்களை சென்னைக்கு அழைத்துக் கொள்ள விரும்பவில்லை. நான் சென்னையிலேயே தான் இருப்பேன். நவசக்தி சென்னையிலிருந்து தான் வெளியாகும். ஒண்டியண்டி குண்டு விட்டு உயிர்பறித்த போதினும், அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே! கொஞ்சம் காலம் திருநெல்வேலியிலேயே தங்கியிருங்கள். கவலைப்பட வேண்டாம். காலம் வரட்டும்' என்று அவர் எழுதியிருந்தார்.

எனக்கு விசித்திரமான ஒரு எண்ணமும் ஏற்பட்டிருந்தது. மேல்நாடுகளில் நாடகங்கள் எழுதிப் பெயர் பெற்ற சில எழுத்தாளர்கள் தொழில் முறை நாடகக் கம்பெனிகளில் சேர்ந்து, அவர்களுடன் தங்கியிருந்து, அனுபவம் பெற்று, நல்லமுறையில் நாடகங்கள் எழுதினார்கள் என்று நான் படித்திருந்தேன். அதே மாதிரி நானும் தேர்ந்த ஒரு நாடகக் குழுவுடன் இணைந்து பயிற்சி பெற்று அனுபவபூர்வமாக நாடகங்கள் எழுதலாமே என்று நினைத்தேன். அதனால் என் விருப்பத்தைத் தெரிவித்து, 'முத்தமிழ் கலா வித்வ ரத்ன டி.கே. எஸ். நாடக சபா' வின் டி.கே. சண்முகத்துக்கு கடிதம் எழுதினேன்.

கலைஞர் டி.கே. சண்முகம் உடனடியாக பதில் எழுதியிருந்தார். 'உங்கள் விருப்பம் எங்களுக்கும் மகிழ்ச்சி தருகிறது. ஆயினும், உங்களைப் போன்ற திறமையுள்ள ஒரு எழுத்தாளரை எங்கள் நாடகக் கம்பெனியில் சேர்த்துக் கொண்டு என்ன முறையில் வேலை கொடுப்பது என்று எங்களுக்குப் புரியவில்லை. உங்கள் விருப்பத்தை ஏற்று உங்களுக்கு உதவ முடியாமல் இருப்பதற்காக வருத்தம் தெரிவிக்கிறோம்' என்று சண்முகம் அறிவித்திருந்தார்.

காலம் வரும் என்று காத்திருப்பது தவிர வேறு வழியில்லை என்றாயிற்று. கிடைத்திருந்த சர்க்கார் வேலையை விட்டுப்போட்டு, சும்மா வீட்டோடு இருந்து வெட்டிப் பொழுது போக்குகிறானே என்று உறவினரில் சிலர் குறை கூறினார்கள். இனிமேல் என்ன பண்ணப்போகிறானாம் என்று அநேகர் முணுமுணுத்தார்கள்.

இந்த எண்ணம் என் அம்மாவுக்கும் இருந்தது. படித்தும் புத்திகெட்டுப் போன பிள்ளை என்ற மனவருத்தம் அம்மாவுக்கு ஆனால் என் அண்ணா கோமதிநாயகம் வருத்தப்படவுமில்லை; குறைகூறவுமில்லை. எனது எழுத்து முயற்சிகளைப் படித்து ரசித்தார். பத்திரிகைகளில் என் கதைகள் வந்ததனால் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். எனக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிக்கத் தவறவுமில்லை.

எனினும், என் உள்ளத்தில் அமைதி இல்லை. எழுத்துத் துறையில் வளர்ந்து முன்னேறுவதற்கு நான் வீட்டை விட்டு வெளியேற வேண்டியது அவசியமாகும் என்ற எண்ணம் என்னுள் உறுத்திக் கொண்டேயிருந்தது. வெளியுலகில் சென்று முயற்சிக்க வேண்டும் எனும் நினைப்பு பேருருவம் பெற்று வந்தது.

எங்கே போவது? போய் என்ன செய்வது? இப்பிரச்சினைகள் தலைதூக்கவில்லை. வீட்டை விட்டு வெளியேறி ஏதாவது செய்தாக வேண்டும் என்ற எண்ணமே வளர்ந்தது. எங்கே போகலாம்? சென்னைக்கே போகலாம். போவதற்குப் பணம்? நடந்தே போகலாம்- இப்படி மனம் தர்க்கித்துக் கொண்டிருந்தது.

புத்தகங்களில் படித்திருந்த சில வரலாற்று நிகழ்வுகள் என்னுள் வேலை செய்தன. பெயர் பெற்ற ஆங்கில நாவலாசிரியரான (எழுத்தாளர்- கவிஞர்) ஆலிவர் கோல்ட்ஸ்மித் நடந்து நடந்தே ஐரோப்பா முழுவதும் பயணம் செய்தான். ரஷ்ய எழுத்தாளன் மாக்சிம் கார்க்கி நடந்து நடந்தே ரஷ்யாவின் நீள அகலங்களைக் கண்டறிந்தான். இத்தாலிய சர்வாதிகாரியாக வளர்ந்து விட்ட பெனிட்டோ முசோலினி, ஆரம்பகாலத்தில், பையில் மூன்றே மூன்று (இத்தாலிய) காசுகளோடு, தொலைவில் இருந்த கிராமத்திலிருந்து புறப்பட்டு நடந்தே ரோம் நகரை அடைந்தான். நடப்பது ஒன்றும் சிரமமான காரியம் இல்லை என்றது மனம்.

தனக்கு சாதகமாக மனம் கணக்கிட்டது. திருநெல்வேலியில் இருந்து சென்னை 400 மைல் தூரம். தினசரி 30 மைல்கள் நடக்கலாம். அப்படி நடந்தால் 14 நாள்களில் சென்னை போய்ச் சேரலாம். எப்படியும் 15 நாட்களில் போய் விடலாம் என்று அது சந்தோஷப்பட்டது.

தொடர்ந்து தினசரி 30 மைல்கள் நடக்க முடியுமா? கையில் பணம் எதுவுமின்றி நடக்கிறபோது சாப்பாட்டுக்கு என்ன செய்வது? போதுமான உணவு இல்லாமல் எத்தனை மைல்கள் நடக்க முடியும்? எத்தனை நாள்கள் நடக்க இயலும்? இக்கேள்விகளை மனசே கேட்டுக் கொண்டது.

ஆனால், இளமையும் கனவு வேகமும் லட்சிய வெறியும் கூட அதெல்லாம் நடந்து போயிடலாம்' என்று தைரியம் தந்தன.

என்றைக்குப் புறப்படுவது? என்னென்ன எடுத்துப் போவது வீட்டில் யாருக்கும் தெரியாமல் எப்படிக் கிளம்பிப் போவது? இந்த நினைப்புகளை எண்ணி எண்ணிப் பொழுது போக்கியது மனம்.

ஒருவாறு என்னுள் எல்லாம் தீர்மானிக்கப்பட்டது. ஒருநாளில் அதிகாலையில் எழுந்து யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பிவிட வேண்டும். ஒரு பையில் இரண்டு வேட்டி, இரண்டு சட்டை, இரண்டு துண்டு, எஸ்.எஸ். எல்.சி. சர்டிபிகேட், புத்தகம், சில தாள்கள். எழுதும் பேனா இவற்றை எடுத்து வைத்து, பையை மறைவாக எவர் கண்ணிலும் படாதவாறு ஓர் இடத்தில் பத்திரப்படுத்தினேன்.

எனது எண்ணங்களையும் நோக்கத்தையும் விரிவாக எழுதி, நான் வீட்டைவிட்டுப் போகிறேன், தேட வேண்டாம் என்று முடித்து ஒரு நீண்ட கடிதம் எழுதினேன். புறப்படுவதற்கு முன்னதாக அதை, அடிக்கடி திறந்து பார்க்கப்படுகிற ஒரு பெட்டியில் பார்வையில் படும்படியாக வைத்தேன். 1942 மே மாதம் 24 ஆம் நாள்.

அன்று இரவு சரியான தூக்கம் இல்லை. எப்படி வீட்டைவிட்டு வெளியேறுவது, எப்போது புறப்பட்டுப் போவது எனும் மன உளைச்சல். அதிகாலை ஐந்து மணிக்குக் கிளம்பிவிட வேண்டும் என்று திட்டமிட்டிருந்தேன். ஆனால் பின்னிரவில் நன்கு தூங்கிவிட்டேன். திடீரென்று விழித்துபோது மணி ஆறு ஆகியிருந்தது. நல்ல வெளிச்சம் வந்திருந்தது. மற்றவர்கள் விழித்திருக்கவில்லை. அம்மா மட்டும் எழுந்து வழக்கமான பணிகளில் ஈடுபட்டிருந்தாள்.

நான் எனது பையை எடுத்து தோளில் மாட்டிக்கொண்டு, பெரிய துண்டினால் அதை மூடிப் போர்த்திக்கொண்டு, மாடியிலிருந்து இறங்கிவந்து, கதவைத் திறந்துகொண்டு வெளியேறினேன். நான் வாய்க்காலுக்குப் போவதாக அம்மா எண்ணியிருக்கலாம்.

தெருவில் இறங்கி வேகமாக நடந்தேன். அண்ணாவோ தம்பியோ எழுந்து வந்துவிடக்கூடாது என்ற பதைப்புடன் அவசரமாக நடந்தேன். திருநெல்வேலி ஜங்ஷன் சேர்ந்து மதுரை ரோடில் நடந்தேன்.

அந்தக் காலத்தில் அப்பகுதி எல்லாம் அமைதியாக, போக்கு வரத்து நெரிசல் இல்லாமல், ரோடின் இருபுறமும் ஓங்கி வளர்ந்த மருதமரங்கள் நின்ற சூழலாக இருந்தது. பெரிய ஓட்டல்களும் கடைகளும் பரபரப்பான பஸ் நிலையமும் இல்லாமல் இருந்த நாள்கள் அவை. காலப்போக்கில் எல்லாம் முற்றிலும் மாறிவிட்டன. ஏகப்பட்ட கடைகள். எப்போதும் ஜனங்கள், வாகனப் போக்குவரத்தும் நெரிசலும் அதிகமான பிரதேசமாகி விட்டது.

நான் நிதானமாக நடந்தேன். வீட்டிலிருந்து பணம் எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை. கொஞ்சம் அவல் மட்டும் எடுத்துச் சிறு பொட்டலமாக்கிப் பைக்குள் வைத்திருந்தேன். வழிநெடுகப் பசுமையாக இருந்தது. அடிக்கடி மழை பெய்து ரோடு ஓரங்களில் தண்ணீர் தேங்கிக்கிடந்தது.

ரோடில் போக்குவரத்து அதிகமில்லை. எப்பவாவது ஒரு பஸ் வரும். 'கோபாலன் பஸ்' வந்தால் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று என் மனம் சொன்னது. நான் சேவியர் ஹைஸ்கூலில் படித்த காலத்தில், ஏழாவது வகுப்பிலிருந்து பள்ளி இறுதி வரை கே. ராமசாமி என்றொரு மாணவன் என்னோடு படித்தான். என்னுடன் நண்பனாகப் பழகினான். அவன் கோபாலன் பஸ் சர்வீஸ் முதலாளியின் மகளைக் கல்யாணம் செய்து கொண்டு அவர் வீட்டோடு வசித்தான். சில சமயம் அவனே ஆர்வத்தோடு பஸ் ஓட்டிச் செல்வதும் உண்டு என்று ஒருமுறை என்னிடம் சொல்லியிருந்தான்.

அப்படி அவன் பஸ் ஓட்டிக்கொண்டு எதிரில் வந்தால், ரோடில் நடந்து கொண்டிருக்கும் என்னைப் பார்க்க நேரிட்டால் பஸ் வேகத்தைக் குறைத்து, என்ன இப்படி எங்கே போறே? என்று கேட்கக் கூடும்; வீணாக அவனுக்கு ஏதாவது பதிலைச் சொல்ல வேண்டியிருக்கும் என்று என் மனம் எண்ணியது.

பஸ் முதலாளி வீட்டு மாப்பிள்ளை ஆகி, அந்தஸ்தில் உயர்ந்து, பொருளாதார நிலையிலும் உடல் அளவிலும் பெரும் வளர்ச்சி பெற்றிருந்த ராமசாமி, பள்ளி நாள்களில் நண்பனாகப் பழகியிருந்த போதிலும், இப்போது அப்பாவித் தோற்றத்தில், சட்டை அணியாமல் துண்டை மேலே போர்த்திக் கொண்டு பட்டிக்காட்டான் மாதிரி நடந்து கொண்டிருக்கிற என்னை அடையாளம் கண்டு கொள்வான் என்று எண்ணுவதே தப்பு. அவன் அப்படி அடையாளம் காண நேர்ந்தால் கூட, பஸ்சின் வேகத்தைக் குறைத்தோ, அல்லது நிறுத்தியோ, என்னிடம் நலம் விசாரிப்பான் என எதிர்பார்ப்பது பெரிய தப்பு. இப்படி என் அறிவு பேசியது.

இருப்பினும், தொலைவில் பஸ் வருவதைக் கண்டதால் நான் பாதை ஓரம் சென்று பெரிய மரத்தினடியில் பதுங்கி நின்று, பஸ் கடந்து சென்றதும் ரோடுக்கு வந்து நடையைத் தொடர்ந்தேன். இது தேவையில்லாத வேலை என்றாலும் பஸ் எதிரே வந்த ஒவ்வொரு முறையும் அவ்விதம் செய்து கொண்டிருந்தேன். நெடுநேரத்துக்கிடையே சிறிது அவல் எடுத்து வாயில் போட்டு

மென்றபடி நடந்தேன். ரோடு ஓரத்துப் பள்ளங்களில் கட்டிக்கிடந்த மழைநீர் குடிப்பதற்கு ஏற்றதாக உதவியது.

எந்த இடத்திலும் உட்காரவில்லை. வேகமாக இல்லாமலும் மெதுவாக இன்றியும் நிதானநடையிலேயே தூரத்தைக் கடந்து கொண்டிருந்தேன். மாலை 6 மணி அளவில் கோவில்பட்டி அடைந்து விட்டேன். 35 மைல் தூரம் நடந்திருந்தேன். அன்று தேதி மே 25.

ரயில் நிலையம் சேர்ந்தேன். கோவில்பட்டி ஸ்டேஷன் அன்று சாதாரணக் கட்டிடமாகத் தான் இருந்தது. பிற்காலத்தில் மிகப்பெரியதாக, அதிகக் கட்டுமானங்களுடன், நாகரிகத் தோற்றம் பெற்றுவிட்டது. அன்று எனக்குப் புகலிடம் அளித்த நிலையம். பரபரப்பு இல்லாதது, அடக்கமான கட்டிட அமைப்புக் கொண்டதாகும். அதன் தாழ்வாரத்தின் ஒரு மூலை படுப்பதற்கு வசதியான இடமாக எனக்குத் தோன்றியது.

முதலில் ஓய்வாக உட்கார்ந்தேன். அந்தி மயங்கி இரவு படரும் நேரம். என் அருகே வந்து யாரும்; நீ யார், ஏன் உட்கார்ந்திருக்கிறே? என்று கேட்கவில்லை. எத்தனை நேரம் உட்கார்ந்திருப்பது- படுக்கலாமே என்று கல்தரையில் படுத்தேன். ஆழ்ந்த தூக்கம் என்னை ஆட்கொண்டது.

திடீரென்று எவரோ அதட்டிய குரலில் என்னை எழுப்பியதை உணர முடிந்தது. ஏ, எழுந்திரு; இங்கே ஏன் படுத்திருக்கே என்று அதிகாரக் குரல் உலுக்கியது. எழுந்து உட்கார்ந்தேன். போலீஸ்காரர் குரல் டார்ச்லைட்டால் வெளிச்சப்படுத்தியவாறு நின்றார். அவர் அருகில் இன்னொருவரும் நின்றார்.

எங்கே இருந்து வாறே? என்று போலீஸ் விசாரித்தார். இப்போது அவர் குரலில் அதட்டல் இல்லை. சகஜமாகத்தான் கேட்டார். எனது அப்பாவித் தோற்றம் அவர் மனசைத் தொட்டிருக்க வேண்டும்.

நான் திருநெல்வேலியிலிருந்து என்று பதிலளித்தேன்.

இந்த பத்து மணி ட்ரெயின்லே திருநெல்வேலியிலிருந்து அதிகமான பேர்கள் வந்து இறங்கி, ஸ்டேஷனிலே இருக்கிறாங்க என்று அவர், கூட நின்றவரிடம் சொன்னார், நீ எங்கே போகணும் என்று என்னிடம் கேட்டார்.

சாத்தூர் போகணும் என்றேன்.

சாத்தூருக்கு அதிகாலையிலே ஒரு பஸ் போகும் 5 மணிக்கு அது புறப்படும் என்று அவர் தெரிவித்தார். ராத்திரி இங்கேயே படுத்துக்கோ என்றும் அவர் அனுமதி தந்தார். அசந்து தூங்கிவிடாதே, பையிலே ரிக்கார்டு ஏதாவது வச்சிருக்கியா? மதிப்பு மிக்க சாமான் ஏதாவது? என்று வினாவினார்.

அப்படி எதுவும் இல்லை என்று சொன்னேன். எஸ்.எஸ்.எல்.சி. சர்டிபிகேட் புக் இருக்கிறது எனச் சொல்ல வேண்டுமா என்று என் மனசினுள் ஒரு குரல் ஒலித்தது. அது என்ன பெரிய ரிக்கார்டா! மதிப்பு மிகுந்ததா! என்று நையாண்டி பண்ணியது மற்றொரு குரல்.

சரிசரி, கவனமா இரு என்று சொல்லிவிட்டு போலீஸ்காரர் நகரலானார். அவருக்கு என் மீது இரக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். சட்டென்று நின்றார். என்னைப் பார்த்து, 'ஒண்ணு செய். என் கூட பஸ் ஸ்டாண்டுக்கு வா. அங்கே படுக்கிறதுக்கு உனக்கு ஏற்பாடு பண்றேன். முதல் பஸ்சிலே சாத்தூர் போகலாம் என்றார்.

எனக்கு திக்கென்றது. 'வேண்டாம் சார். நான் இங்கே இரவைப் போக்கிவிட்டு, அதிகாலையில் பஸ் ஸ்டாண்ட் போறேன் என்று சொன்னேன். இவர் நல்லது எண்ணி, என்னை பஸ் நிலையம் கொண்டு சேர்த்து, அங்கிருப்பவரிடம் சொல்லிவிட்டுப் போய்விடுவார். காலையில் எழுந்து பஸ் புறப்படுகையில் நான் பயணம் செய்யாமல் எப்படி நழுவுவது? பஸ்சில் சாத்தூர் போவதற்கு என்னிடம் காசு ஏது என்று என் மனம் புலம்பியது.

சரி, இங்கேயே படுத்துக்கொள் என்று சொல்லி விட்டு அவர் நடந்து போனார். உடன் நின்றவர் எதுவும் பேசாமலே அவரைத் தொடர்ந்தார்.

நல்ல மனிதர் என்று அந்தப் போலீஸ்காரரை எண்ணி மகிழ்ந்தது மனம். அவர் பேச்சிலிருந்து சில சங்கதிகளை நான் புரிந்து கொண்டேன்: அப்போது இரவு மணி பத்துக்கு மேலாகியிருந்தது. பத்து மணிக்கு திருநெல்வேலியிலிருந்து ஒரு ட்ரெயின் வந்துள்ளது. அது கோவில்பட்டி ஸ்டேஷனிலேயே நின்றுவிடும்". என்று தெரிகிறது. சாத்தூருக்கு முதல் பஸ் அதிகாலை 5 மணிக்குப் புறப்படும்.

மீண்டும் படுத்தபடி இதை எல்லாம் எண்ணினேன். திருநெல்வேலியில் நான் வீட்டைவிட்டு வெளியேறியதை அறிந்ததும் அம்மா, அண்ணன், தம்பி எல்லோரும் என்ன நினைப்பார்கள், என்ன செய்வார்கள் என்றும் நினைத்தேன். அந்த நினைப்பிலேயே தூங்கியும் போனேன்.

விழிப்பு வந்தபோது இன்னும் விடிந்திருக்கவில்லை. வைகறை வெளிச்சம் பரவி சூழ்நிலையை தெளிவு படுத்திக் கொண்டிருந்தது. பயணத்தைத் தொடரவேண்டியது தான் என்று எழுந்து நடந்தேன்.

ரோடு ஓரத்தில் ஒரு குளமோ, குட்டையோ, தண்ணீர் பரவலாகப் பெருகிக்கிடந்தது. மழை பெய்திருந்ததால் நீர் மிகுதியாகவே தேங்கியிருந்தது. செம்மண் கலந்த நீர். காலைக் கடன்களை முடிப்பதற்கு வசதியாக இருந்தது அந்த இடம், பல் துலக்கினேன். சிறிது அவலை மென்று தின்று, தண்ணீர் குடித்தேன். நடக்கலானேன்.

வெறிச்சோடிய ரஸ்தா. அபூர்வமாக எப்போதாவது ஒரு பஸ் அல்லது கார் வரும். ஏதேனும் ஊர் நெருங்கும்போது ஒன்றிரு ஆட்கள் தென்படுவார்கள். தலைமீது ஏதாவது கூடை அல்லது மூட்டை சுமந்தபடி நடப்பார்கள். விற்பனை செய்வதற்காகப் பொருள்கள் கொண்டு செல்பவர்களாக இருக்கலாம். ஊர்களும் ஆள் அரவமற்று அமைதியாகவே காட்சி தந்தன. அப்படி எவரேனும் தென்பட்டால் கூட, நீ யார்? எங்கிருந்து வாறே? எங்கே? போறே? என்று யாரும் என்னைக் கேட்டதில்லை.

நான் மெதுநடையில் முன்னேறிக் கொண்டிருந்தேன். விருதுநகரை எட்டிவிட்டேன். ஊருக்கு முன்னாடி, ரஸ்தா ஓரத்தில் ஒரு தோட்டமும், அதில் ஒரு மடம் அல்லது சத்திரம் போன்ற சிறு கட்டிடமும் தென்பட்டன. மாலை நேரம். வெளிச்சம் அதிகமிருந்தது. சுற்றுப்புறம் எங்கும் ஆள் நடமாட்டமே இல்லை. இந்த மடத்தின் திண்ணையில் சிறிது நேரம் ஓய்வெடுக்கலாமே என்ற எண்ணம் எழுந்தது. அந்த உயர்ந்த திண்ணையில் ஏறிப் படுத்தேன். உடனேயே தூங்கிவிட்டேன்.

சட்டென விழிப்பு வந்தது. நல்ல இருட்டு. இரவில் நேரம் என்ன இருக்கும் என்று தெரியவில்லை. இருப்பினும் எழுந்து நடந்தேன். சிறிது தொலைவில் காந்த விளக்குகளின் ('கியாஸ் லைட்') வெளிச்சம் நகர்ந்து வந்து கொண்டிருந்தது. ஏழெட்டுப் பேர்கள் மௌனமாய் கும்பலாக வந்தார்கள். அவர்களில் சிலர் எதையோ தூக்கி வருவது தெரிந்தது.

அந்தக் கூட்டம் நெருங்கி வரவர, விஷயம் புலப்பட்டது அது பிண ஊர்வலம். சுடுகாடு அருகில் எங்கோ இருக்க வேண்டும் இறந்தவரின் உடலை எரிப்பதற்காக அந்த நேரத்தில் அவர்கள் போய்க் கொண்டிந்தார்கள்.

நான் ஒதுங்கி ஓரமாக நின்றேன். கூட்டத்தில் நடந்தவர்கள் என்னைப் பார்த்தார்கள். அவர்கள் இயல்புப்படி தங்கள் கருமமே கண்ணாக, மௌனமாக நடந்து போனார்கள். வெளிச்சம் நகர்ந்து சென்றதும், நான் இருட்டில் விருதுநகர் நோக்கி நடந்தேன். இரவில் வெகுநேரமான பிறகும் மனிதர்கள் மயானத்தை நோக்கிப் போகிறார்களே என்ற எண்ணம் என்னுள் ஊர்ந்தது.

விருதுநகர் இன்னும் விழித்திருந்தது. கடை வீதி வெளிச்சமயமாக விளங்கியது. கடைகள் திறந்திருந்தன. வண்டிகளும் ஆட்களும் இயங்கி, வியாபாரம் நடப்பதைப் புலப்படுத்தின.

பெரும்பாலான கடைகளில் மின்விளக்குகள் இல்லை. உயரே இருந்து நீண்டு தொங்கிய கனத்த பித்தளைச் சங்கிலிகளில் பெரிய பித்தளை விளக்குகள் வெளிச்சம் தந்தன. எண்ணெயில் எரியும் திரிகளின் சுடரொளி போதுமான வெளிச்சத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது. ஒரு கடையின் சுவரில் காட்சி தந்த பெரிய கடியாரம் மணி 12 என்று சுட்டியது. நடுநிசி- நள்ளிரவு; நகரம் இன்னும் விழிப்புடன் பணம் பண்ணிக் கொண்டிருக்கிறது என்று என்மனம் அதிசயித்தது.

தெருக்குழாய்களில் குடிதண்ணீர் தாராளமாக வந்து கொண்டிருந்தது. நான் முகம் கழுவி, வாய் கொப்பளித்து, வேண்டிய மட்டும் தண்ணீர் குடித்தேன். நடந்தேன். நகரின் ஒளிப்புள்ளிகள் மங்கி மறைந்தன. இருள் கவிந்த ரஸ்தா நீண்டு கிடந்தது. வானத்து நட்சத்திரங்கள் தான் துணை வந்தன.

கள்ளிக்குடி வந்தது. ஊர் என்று சொல்லும்படியாக அங்கு அதிகமான குடிசைகளோ வீடுகளோ தென்படவில்லை. சில கடைகள் இருந்தன. தூங்காமல் ஆட்கள் அங்கு இருந்தார்கள். அங்கே விடிந்தால் சந்தை கூடும் என்று தோன்றியது. கூண்டு வண்டிகள் வந்திருந்தன. சரக்குகளோடு அவை அவிழ்க்கப்பட்டு நின்றன. மாடுகள் வண்டிகளின் அருகில் நின்று தீவனம் தின்று கொண்டிருந்தன. கிராம ஆட்கள் நின்றும், உட்கார்ந்தும், படுத்தும் பலநிலைகளில் காட்சி தந்தார்கள். சிறுசிறு கடைகளில் சிம்னி விளக்குகள் வெளிச்சமிட்டபடி இருந்தன.

நானும் இங்கு சற்று நேரம் படுக்கலாமே என்ற நினைப்பு எனக்கு ஏற்பட்டது. சிறிது தள்ளிப்போய், வண்டிகளோ ஆட்களோ இல்லாத இடத்தில் படுத்தேன். தூக்கம்தான்.

என்னை மறந்த தூக்கம். திடீரென்று யாரோ என்னை எழுப்புவதற்காகக் குரல் கொடுத்துக் கொண்டிருந்த உணர்வு ஏற்பட்டது. விழிப்புற்றேன். எழுந்து உட்கார்ந்து பார்த்தால் சுற்றிலும் நெடுக்க கட்டை வண்டிகளும் கூண்டு வண்டிகளும் மாடுகளும் ஆட்களும் மொய்த்து நின்றது வியப்பு தந்தது.

'எழுந்திரு..... தள்ளிப்போ.... வண்டியை இங்கே நிறுத்தணும்' என்று ஒருவன் கூவினான். எழுந்து விலகி ரோடில் நடந்தேன். மீண்டும் படுக்க வேண்டும் என்ற நினைப்பு எனக்கு வரவில்லை. நடக்கலாம் என்ற உணர்வே உந்தியது. நடந்தேன்.

மணி என்ன இருக்கும் என்று தெரிய வழியில்லை. எங்கும் இருட்டு கவிந்து கிடந்தது. இருளோடு ஒரு நிழலாக நான் நடந்தேன். எத்தனை தூரம் நடந்திருப்பேன், எவ்வளவு நேரமாக நடக்கிறேன் என்பது எதுவும் புரியவில்லை. நடை, தூரத்தை விழுங்கிக் கொண்டிருந்தது. ஆயினும் அலுப்பும் அசதியுமாக இருந்தது. ரோட்டோரத்தில் ஒரு புளியமரத்தின் கீழே படுத்தேன். தூக்கம் சூழ்நிலையை மறக்க வைத்தது. ஆழ்ந்த தூக்கம்.

மீண்டும் விழிப்பு வந்த போதும் இருள்தான் சூழ்ந்திருந்தது. நான் இருந்தது எந்த இடம், நேரம் என்ன இருக்கும் என்று மனம் வழக்கம் போல் குழம்பியது. வானத்தில் நட்சத்திரங்கள் பிரகாசமாக ஒளிர்ந்தன. ஒரு வெள்ளி பேரொளி, தெறித்து மின்னியது. அது விடி வெள்ளியாக இருக்கும் என்றது மனம். மோசம் செய்யும் செட்டி வெள்ளியாகக் கூட இருக்கலாம் என்றது இன்னொரு நினைப்பு.

விடி வெள்ளி வருவதற்கு முன்னதாக, அதே மாதிரிப் பேரொளி கொண்ட மற்றொரு வெள்ளி தோன்றி ஒளிரும். கிராமங்களில் வயல் வேலைக்குப் போகிறவர்கள், தோட்டங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்காக ஏற்றம் இறைக்கச் செல்வோர், விடிவெள்ளி வந்துவிட்டது, சீக்கிரம் விடிந்து விடும் என்று எண்ணி வீட்டை விட்டு வெளியேறுவார்கள். உரிய இடங்களுக்குப் போய் வெகு நேரம் வேலை செய்த போதிலும் விடிவின் வெளிச்சம் வந்திராது. பின்னர்தான் கீழ் வானில் விடிவெள்ளி ஒளிமயமாக உதயமாகும். தாங்கள் ஏமாந்து போனதை மக்கள் தெரிந்து கொள்வார்கள். 'வியாழம் உறங்க வெள்ளி எழும்' என்பது பேச்சு வழக்கு. வியாழன் எனும் கிரகம் மறைந்ததும் சுக்கிரன் என்கிற விடிவெள்ளி உதிக்கும் முதலில் விடிவெள்ளி என ஏமாறச்செய்த கோளை மோசம் செய்யும் செட்டி என்று கிராமவாசிகள் குறிப்பிட்டார்கள்.

அது எனக்கு நினைவு வந்தது. பேரொளியுடன் தோன்றியது செட்டி வெள்ளியோ, அல்லது விடிவெள்ளிதானோ எதுவாகவும் இருந்து விட்டுப் போகட்டும். நான் நடக்க வேண்டியதுதான் என்று நடக்கலானேன்.

திருமங்கலம் ஊர் வந்தது. தெரு விளக்குகள் நன்றாக எரிந்து கொண்டிருந்தன. வீணாகத்தான் எரிந்தன. ஊர் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தது. ஒரு உயிர்கூட அசைவுகாட்டவில்லை. நாய்கள் கூட அங்கும் இங்கும் முடங்கித் தூங்கிக் கொண்டிருந்தன.

நாய்கள் விழித்து என்னைப் பார்த்தும் உரத்த குரலெடுத்துக் குரைக்கக் கூடாதே எனும் பயம் என்னுள் எழுந்தது. ஆகவே காலடி ஓசைப்படுத்தாமல் மெதுவாகவே நடந்தேன். பயந்தபடி எதுவும் நடந்துவிடவில்லை.

நடக்க நடக்க, இருள் விலகி விடிவின் வெளிச்சம் பரவி சுற்றுப்புறங்களை நன்கு புலப்படுத்தியது. நான் திருப்பரங்குன்றம் வந்திருந்தேன். அங்கே ரஸ்தாவை ஒட்டிப் பரந்து கிடந்த பெரியகுளம், தண்ணீர் நிரம்பிக் காணப்பட்டது. அதில் ஆண்களும் பெண்களும் நீராடிக் கொண்டிருந்தார்கள்.

நானும் குளத்தில் இறங்கிக் குளித்தேன். சுகமாக இருந்தது. வேறு வேட்டி கட்டிக்கொண்டு, ஈரவேட்டியையும் துண்டையும் அங்கேயே நின்று உலரவைத்தேன். காற்றடித்ததால் அவை விரைவில் உலர்ந்துவிட்டன.

நான் வீட்டைவிட்டு வெளியேறிய மூன்றாவது நாள் அது. முதல் நாள் திருநெல்வேலியிலிருந்து கோவில்பட்டிக்கு 35 மைல்கள் நடந்திருந்தேன். இரண்டாம் நாள் கோவில்பட்டியிலிருந்து விருதுநகருக்கு 30 மைல்கள். அங்கிருந்து மதுரைக்கு 30 மைல்கள், ஆக மூன்று நாள்களுக்குள் மதுரைக்கு நடந்து வந்தாச்சு என்று மனம் ஆனந்தப்பட்டது.

இன்னும் மதுரை நகரை அடையவில்லையே என்ற நினைப்பும் எழுந்தது. இப்பதானே மூன்றாவது நாள் விடிந்திருக்கிறது என்ற எண்ணமும் தலைகாட்டியது. சிறிதளவு எஞ்சியிருந்த அவலைத் தின்று முடித்தேன்.

மதுரை நகருக்கு வெளியே, திருப்பரங்குன்றம் சாலையில் ஒரு மைல் தூரத்தில் உள்ள அரசுக் கட்டிடங்களில் பல பயிற்சி நிலையங்களும் அலுவலகங்களும் இயங்கிக் கொண்டிருந்தன.

அங்கே ஒரு தொழிற் பயிற்சி நிலையத்தில், ராஜவல்லிபுரத்தைச் சேர்ந்த உறவினர் ஒருவர் கற்றுக் கொண்டிருந்தார். முன் எனக்கு அரசாங்க வேலை பெற்றுத் தந்து உதவிபுரிந்தவரின் தம்பி. அவரைச் சந்திக்க வேண்டும்; அவரிடம் சிறிது பணம் பெற்றுக் கொண்டு ரயில் மார்க்கமாகக் காரைக்குடி போகலாம் என்று திட்டமிட்டது மனம்.

காரைக்குடியில் 'இந்திரா' பத்திரிகை அலுவலகம் இருந்தது. அங்கே போய் முயன்று பார்க்கலாம் என்று நினைப்பு. மேலும் வெகுதூரம் நடந்து போக முடியாது என்று நன்கு புரிந்தது. இரண்டு பகல்களும் ஓரிரவும் விடாது நடந்ததில் பாதங்கள் புண்பட்டிருந்தன. செருப்பு இன்றி நடந்ததால், விரல்களுக்கிடையே வெடிப்புகள் தோன்றியிருந்தன. அடி பெயர்ந்து நடக்கும்போது வலி ஏற்பட்டது.

முதலில் உறவினர் கோபாலை சந்தித்தாக வேண்டும். இந்நினைப்புடன் திருப்பரங்குன்றம் ரஸ்தாவில் நடந்தேன். மதுரை நகருக்கு வெளியே அமைந்திருந்த பயிற்சி நிலையக்கட்டிடம் போய்ச் சேர்ந்தேன். கோபால் எங்கே இருக்கிறாரோ, அவரை எப்படிப் பார்ப்பது என்று நினைத்தபடி கட்டிடத்தின் முக்கியவாசல் அருகில் நின்றேன்.

பயிற்சி நிலையங்களும் அலுவலங்களும் வேலை செய்யத் தொடங்கியிருக்கவில்லை, பணிநேரம் நெருங்கிக் கொண்டிருந்தது என்பதை சைக்கிள்களிலும் நடந்தும் அவசரம் அவசரமாக வந்து கொண்டிருந்த ஆள்கள் புலப்படுத்தினார்கள்.

'சந்தர்ப்ப சகாயம்' என்பார்களே, அதுபோல், காலத்தின் உதவி எனக்குக் கிட்டியது. கோபால் சைக்கிளில் வந்தார். வாசல் அருகில் நின்ற என்னைக் கண்டதும் சிரித்தபடி இறங்கினார். என்ன இங்கே நிற்கிறே? எப்ப வந்தே என்று கேட்டார். அவரிடம் 'ஒரு கதை அளக்க வேண்டியது' அவசியமாயிற்று.

பத்திரிகை அலுவலகம் ஒன்றில் வேலை விஷயமாக மதுரைக்கு வந்தேன். நேற்று வந்தேன். கொண்டு வந்த பணம் தீர்ந்து போச்சு. ஊருக்குப் போகணும். ரூபாய் வேண்டும். உங்களைப் பார்த்து உதவி கேட்கலாம் என்று வந்தேன் என்றேன்.

அவர் சிறிது யோசித்தார். கைக்கடியாரத்தைப் பார்த்தார். 'இப்ப மணி பத்தரை ஆகுது. இங்கே பக்கத்திலே ஓட்டல் எதுவும் கிடையாது. நீ மதுரைக்குப் போய் சாப்பிட்டுவிட்டு, பன்னிரண்டரை மணிக்கு வா. இன்றைக்கு என் கூட ரூமில்

தங்கிவிட்டு நாளைக்குப் போகலாம்' என்று சொல்லி, ஒரு ரூபாய் கொடுத்தார். நேரமாச்சு, நான் போகிறேன் எனக் கூறி சைக்கிளில் ஏறிச் சென்றார்.

நான் மதுரை சேர்ந்தேன். டவுன் ஹால் ரோடில் ஒரு ஓட்டலில் இட்டிலி தோசை காப்பி சாப்பிட்டேன். அந்நாள்களில் உணவுப் பொருள்களின் விலை மிகவும் குறைவுதான். ஒரு ரூபாய்க்கு வயிறார உணவு சாப்பிட முடியும்.

திரும்பவும் போய் கோபாலைச் சந்திப்பதற்கு நேரம் இருந்ததால் நான் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனேன். அங்கு ஓய்வாகத் தங்கினேன். அங்கே ஒரு சுவரில் ரயில் நிலையங்களின் பெயர்கள், உரிய கட்டணங்கள் முதலிய விவரம் அச்சிட்ட பெரிய நோட்டீஸ் ஒட்டப்பட்டிருந்தது. அதில் காரைக்குடிக்கு எவ்வளவு கட்டணம் என்று பார்த்தேன். மூன்று ரூபாய் தான்.

அக்காலத்தில் ரயில்வே பயணக் கட்ட்ணங்களும் மிகக் குறைவாகத் தான் இருந்தன. திருநெல்வேலியில் இருந்து சென்னை எழும்பூருக்குக் கட்டணம் எட்டே ரூபாய் தான். (இப்போது இருநூறு ரூபாய்க்கும் அதிகம்.)

நேரமானதும் கோபாலின் பயிற்சி நிலையம் சென்று, அவருக்காக வெளியே காத்து நின்றேன். அவர் வந்ததும், 'சாப்பிட்டாயா?' என்று அன்பாக விசாரித்தார். 'வா, போவோம், நான் இருக்கிற இடம் பக்கத்திலே தான்' என்று அழைத்துப் போனார்.

அது பல அறைகள் கொண்ட அமைதியான கட்டிடம். இனிய சூழல். அறைக்குள் ஒருவராகப் பல பயிற்சி மாணவர்கள் அங்கே தங்கியிருந்தார்கள். ஒரு உணவு விடுதியிலிருந்து அவர்களுக்கு சாப்பாடு ஒவ்வொரு வேளையும் வந்தது.

அன்று அவரோடு உணவு உண்டு, இரவு அங்கேயே தங்கினேன். அவரும் பக்கத்து அறை நண்பர்களும் அவரவர் சிரமங்கள் பற்றிப் பேசிக் கொண்டார்கள். ஒவ்வொரு மாதமும் பணம் பற்றாக்குறை ஏற்படுவதையும்; எதிர்பாராத செலவுகள் வந்து சேர்வதையும் கூறி மனசுக்கு ஆறுதல் தேடிக் கொண்டார்கள். கோபாலுக்கு அந்த மாதம் 'எதிர்பாராத செலவுக்கு' வழிசெய்பவனாக நான் வந்துள்ளதை எண்ணினேன். எனக்கு வருத்தமாகத்தான் இருந்தது. என்ன செய்ய!

மறுநாள் காலையில் விழித்தெழுந்து, அங்கேயே கிணற்றில் குளித்தேன். சாப்பிட இட்டிலி கிடைத்தது. 'இன்று நீ ஊருக்குப்

போறியா? எவ்வளவு ரூபாய் வேண்டும்?' என்று கோபால் கேட்டார். மூன்று ரூபாய் போதும்' என்றேன்.

அதை அவர் தந்தார். அவரிடம் விடைபெற்றுக் கிளம்பினேன்.

அப்போது யுத்த காலம். ரயில் வண்டிகள் குறைவாகவே ஓடின. காரைக்குடி போவதற்கான ரயிலின் நேரத்தை முந்திய தினம் கவனித்திருந்தேன். மதியம் பன்னிரண்டு மணிக்கு மேல் தான் 'ட்ரெயின்' இருந்தது.

மதுரை ஸ்டேஷனில் சும்மா காத்திருப்பதை விட, அடுத்த ஸ்டேஷனுக்குப் போய் ரயிலில் ஏறலாமே என்று எண்ணி நான் மதுரை நிலையத்துக்குப் போகாமல், அடுத்த ஸ்டேஷனுக்கு நடந்தேன். அப்படியும் ரயில் வருவதற்கு அதிக நேரம் இருந்தது.

அங்கே பயணிகள் மூன்று நான்குபேர்தான் இருந்தார்கள் வண்டி வந்ததும் வசதியாக ஏற முடிந்தது. பயணம் சவுகரியமாக அமைந்தது.

காரைக்குடி சேரும்போது இரவு ஆகியிருந்தது. ஊருக்குள் போய் இரவு நேரத்தில் 'இந்திரா' அலுவலகத்தைத் தேடிக் கண்டுபிடிப்பது சிரமம்; அவ்வேளையில் ஆபீசில் யார் இருக்கப் போகிறார்கள் என்று எண்ணி, இரவை ரயில் நிலையத்திலேயே போக்கினேன். அதிகாலையில் எழுந்து ஊருக்குள் சென்று 'இந்திரா' அலுவலகத்தைக் கண்டேன்.

இரவில் யாரோ அங்கேயே தங்கியிருந்திருக்கிறார்கள். அந்நேரத்தில் தான் அவர்கள் விழித்திருக்க வேண்டும். இரண்டு பேர் எழுந்து நின்று படுக்கையை உதறிக்கொண்டிருந்தார்கள். இன்னும் நேரம் போக வேண்டும் என்ற நினைப்புடன் நான் வெளியே வீதியில் சுற்றி வேடிக்கை பார்க்கலானேன். பின்னர் மெதுவாக அந்த அலுவலகத்துக்குப் போனேன்.

'இந்திரா' மாத இதழின் வெளியீட்டாளர், உரிமையாளர் பழனியப்ப செட்டியார் என்று ஒருவர். ப.நீலகண்டன் ஆசிரியப் பொறுப்பில் இருந்தார். பிற்காலத்தில் நாடக ஆசிரியராகப் பொறுப்பேற்று, பிறகு சினிமா உலகில் பிரவேசித்து, திரைப்பட இயக்குநராக வளர்ச்சி பெற்ற அதே நீலகண்டன் தான். அப்போது சாதாரண நிலையில் இருந்தார். கோ.த. சண்முகசுந்தரம் உதவி ஆசிரியர்.

பத்திரிகை விற்பனையை அதிகப்படுத்தும் நோக்கத்துடன், விற்பனையாளர்களைக் கண்டு பேசி உரிய ஏற்பாடுகள்

செய்வதற்காக தென்னாட்டில் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்த கோ.த.ச. திருநெல்வேலிக்கும் வந்தார். அப்போது ஒருநாள் அவர் எங்கள் வீட்டுக்கு வந்து என்னைச் சந்தித்தார். 'இந்திரா' சிறு கதைப் போட்டியில் என் கதை முதல் பரிசு பெற்றிருந்த சமயம் அது. அவர் நன்கு பேசிப் பழகினார்.

நான் அலுவலகம் அடைந்தபோது ப. நீலகண்டன் இருந்தார். கோ.த.ச. இல்லை. வேறு ஒருவர் காணப்பட்டார்.

ப.நீ.யிடம் என்னை நான் அறிமுகம் செய்து கொண்டேன். எனது பயணநோக்கத்தையும் தெரிவித்தேன். என் பேச்சில் ஆர்வம் காட்டிய மற்றொருவர் பரிவுடன் என்னைப் பற்றி அதிகம் விசாரித்தார். அவர் தான் எழுத்தாளர் ஆர். சண்முக சுந்தரம், கோயம்புத்தூரில் இருந்து வந்திருக்கிறார் என்று நீலகண்டன் அறிமுகம் செய்தார்.

'மணிக்கொடி'யில் சிறுகதைகள் எழுதி கவனிப்புப் பெற்றிருந்தவர் ஆர். சண்முகசுந்தரம், அவரை நாவல் எழுதும்படி கு.ப.ராஜகோபாலன் தூண்டியதன் பேரில், அவர் 'நாகம்மாள்' என்ற நாவலை எழுதியிருந்தார். அதைப் புத்தகமாக வெளியிடுவது பற்றிப் பேசி ஏற்பாடு செய்வதற்காக, 'சக்தி'காரியாலயம் வை. கோவிந்தனை சந்திக்க அவர் காரைக்குடி வந்திருந்தார். 'இந்திரா' ஆபீசிலேயே தங்கியிருந்தார். இத்தகவல்களை சண்முகசுந்தரம் தெரிவித்தார்.

'இந்திரா'வில் என்னைச் சேர்த்துக் கொள்வதற்குத் தற்போதைய நிலைமை இடம் தராது. கோ. த. சண்முக சுந்தரமும், வீரவநல்லூர் சுந்தரம் என்பவரும் அங்கே பணிபுரிகிறார்கள். வேண்டுமானால் 'சக்தி' கோவிந்தனிடம் சொல்லிப் பார்க்கலாம் என்று ப.நீ. கூறினார்.

நான் அழைத்துப்போய் வை.கோ.விடம் சொல்கிறேன் என்று சண்முக சுந்தரம் தாமாகவே உதவ முன்வந்தார்.

முதலில் குளிப்பு வேலையை முடித்துக் கொள்வோம். பக்கத்தில் ஒரு தோட்டமும் கிணறும் இருக்கிறது. குளிக்க, துணி தோய்க்க வசதியான இடம் என்று கூறி அவர் என்னையும் கூட்டிப்போனார். அவர் எளிமையான தோற்றம் கொண்டிருந்தார். புதியவனான என்னிடம் இயல்பாக அன்போடும் பரிவுடனும் பேசிப் பழகினார்.

குளிக்குமிடம் வசதியாக இருந்தது. பலர் குளித்துக் கொண்டிருந்தார்கள். சண்முகசுந்தரம் வேட்டி சட்டைகளுக்குச் சோப்பு போட்டுத் துவைத்து அவற்றை அங்கேயே உலரவைத்தார்.

சவுகரியமாகக் குளித்தோம். உலர்ந்த உடுப்புகளை அணிந்துகொண்டு 'இந்திரா' அலுவலகம் வந்தோம். அதற்குள் கோ.த.ச. வந்திருந்தார். நேமத்தான்பட்டி என்ற பக்கத்து ஊரில் வசித்த பழனியப்பச் செட்டியாரும், உதவியாளராகப் பணிபுரிந்த வீரவல்லூர் சுந்தரமும் வந்து சேர்ந்தார்கள்.

'என்ன, வீட்டிலே சொல்லாமல் கொள்ளாமல் வந்து விட்டீர்களா? உங்க அண்ணன் கடிதம் எழுதியிருக்கிறார்' என்றார் கோ.த.ச.

நான் வீட்டை விட்டுக் கிளம்பியபின், வெகுநேரம் வரை வீடுதிரும்பாததால் அம்மாவும் சகோதரர்களும் கவலைப் படலானார்கள். நான் எழுதி வைத்த கடிதத்தை அவர்கள் ரொம்பத் தாமதமாகத் தான் பார்த்திருக்கிறார்கள். அண்ணா கோமதிநாயகம் என்னைத் தேடும் முயற்சிகளில் ஈடுபட்டார். சில பத்திரிகை அலுவலகங்களுக்குக் கடிதம் எழுதினார். காரைக்குடி கோ.த. சண்முக சுந்தரத்துக்கும், சென்னை சக்திதாசனுக்கும் எழுதி விசாரித்திருந்தார். தம்பி அங்கே வந்தால் உதவிபுரியுங்கள். அவன் சென்னைக்குப் போவதானால் போகட்டும். ஆனால் நடந்து போக வேண்டாம். எனக்கு எழுதினால் தேவையான பணம் அனுப்பிவைப்பேன். அவன் திருநெல்வேலி திரும்பி வருவதானாலும் வரட்டும்' என்று அண்ணா கோ.த.ச.க்கு எழுதியிருந்தார்.

கோ.த.ச. அந்தக் கடிதத்தை என்னிடம் காட்டினார். 'நீங்கள் இங்கே வந்திருப்பதாக அண்ணனுக்குக் கடிதம் எழுதி விடுகிறேன் நீங்கள் எழுதுங்கள் என்றார்.

ஆர். சண்முகசுந்தரம் என்னை சக்தி காரியாலயத்துக்கு அழைத்துப் போனார். யுத்தகாலத்தைக் கருதி தற்காலிகமாக 'சக்தி' பத்திரிகையும் பதிப்பகமும் காரைக்குடிக்கு இடம் பெயர்ந்திருந்தன. அலுவலகம் இருந்த இடம் சிறியது தான். வை.கோவிந்தன் இருந்தார். துணை ஆசிரியர் தி.ஜ. ரங்கநாதனும் (தி.ஜ.ர.) இருந்தார். இருவரிடமும் என்னை அறிமுகம் செய்து, எனது தேவையைத் தெரியப்படுத்தினார் சண்முகசுந்தரம்.

தி.ஜ.ர. எனது எழுத்தைப் பாராட்டினார். 'சக்தி' மாத இதழிலும் என் கதைகள் பிரசுரம் பெற்றிருந்தன.

‘சக்தியில் இப்போது ஆள் தேவையில்லை. பொதுவாக இப்போது எந்தப் பத்திரிகையிலும் புதிதாக யாரையும் வேலைக்கு எடுத்துக் கொள்ளமாட்டார்கள். யுத்தகால நெருக்கடி. பத்திரிகைகளின் விற்பனையும் பாதிக்கப்பட்டிருக்கு. இப்ப நீங்க சென்னைக்குப் போவதனாலே எவ்விதப் பயனுமிராது. திருநெல்வேலிக்குப் போய், அங்கிருந்தபடியே பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதி அனுப்பிக் கொண்டிருப்பது தான் நல்லது’ என்று தி.ஜ.ர. கூறினார்.

‘சக்தி’ விற்பனைப் பிரிவில் நிர்வாகியாக இருந்த சுப.நாராயணனையும் கண்டு பேசினேன். அவரும் எனது எழுத்தை வெகுவாகப் பாராட்டினார். நான் கடிதங்கள் எழுதுகிற நேர்த்தியைப் புகழ்ந்து எனக்கு மகிழ்ச்சி ஊட்டினார்.

சண்முகசுந்தரம் புத்தகம் வெளியீடு சம்பந்தமாக வை.கோவிந்தனிடம் பேசி முடித்த பிறகு, நாங்கள் மீண்டும் ‘இந்திரா அலுவலகம் சேர்ந்தோம். நீலகண்டனிடம் சண்முகசுந்தரம் நிலைமையை விவரித்தார்.

‘தி.ஜ.ர. சொல்வது தான் சரி. நீங்க திருநெல்வேலிக்குத் திரும்பிப் போவது தான் நல்லது. அங்கே வீட்டிலே இருந்தபடி பத்திரிகைகளுக்கெல்லாம் எழுதி அனுப்புங்க’ என்று நீலகண்டன் ஆலோசனை கூறினார்.

‘நான் உங்க அண்ணனுக்குக் கடிதம் எழுதிவிட்டேன். நீங்களும் எழுதுங்க’ என்று கோ.த.ச.என்னிடம் ஒரு கார்டும் பேனாவும் தந்தார். எழுதினேன். திருநெல்வேலிக்கு ரயிலில் வருவதற்கு தேவையான பணம் அனுப்பி உதவும்படி கேட்டுக்கொண்டேன்.

வீரவநல்லூர் சுந்தரம் என் மீது அன்பும் அனுதாபமும் காட்டினார். பிரியமாகப் பேசினார். அவர் நேமத்தான்பட்டியில் அம்மாவோடு வசித்தார். அவர் வீட்டுக்கு அருகிலேயே திருநெல்வேலியைச் சேர்ந்த சகோதரர்கள் இருவர் வசித்தார்கள். அவர்களுக்கும் சொந்த ஊர் வீரவநல்லூர் தான். வீ.தி.நடராசன், வீ.தி. சொக்கலிங்கம் என்று பேர். நேமத்தான்பட்டியில் பள்ளி ஆசிரியர்களாகப் பணிபுரிகிறார்கள். உங்களைத் தெரியும் என்று சொன்னார்கள். உங்களைப் பார்த்தால் சந்தோஷப்படுவார்கள். இன்று மாலை நீங்க என்னோடு நேமத்தான்பட்டிக்கு வாங்க. உங்கள் அண்ணணிடமிருந்து பணம் வருகிற வரை நீங்க எங்களோடு தங்கியிருக்கலாம். பணம் வந்ததும் திருநெல்வேலிக்குப் போங்க என்று சுந்தரம் என்னிடம் சொன்னார்.

அன்று மாலை நான் அவருடன் நேமத்தான்பட்டி போனேன். முதலில் அவர் என்னை அவருடைய அம்மாவுக்கு அறிமுகம் செய்தார். பிறகு பக்கத்து வீட்டுச் சகோதரர்களிடம் அழைத்துச் சென்றார். நடராசன், சொக்கலிங்கம் இருவரும், எதிர்பாராது வந்து நின்ற என்னைப் பார்த்து மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். திருநெல்வேலி நெல்லை வாலிபர் சங்கத்தில் அவர்களும் உறுப்பினர்களாக இருந்தார்கள். அதன் மூலம் பழகி நண்பர்களானவர்கள். எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் தங்களுடன் தங்கியிருக்கலாம் என்று அவர்கள் உபசரித்தார்கள்.

அவர்கள் இருவரும் தனியாக ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி, தாங்களே சமையல் செய்து சாப்பிட்டுக் கொண்டு சிக்கனமாக வாழ்க்கை நடத்தினார்கள். சில நாட்கள் நான் அவர்களோடு தங்கியிருப்பதனால் தங்களுக்கு எவ்வித சிரமமும் ஏற்படாது என்று இருவரும் அன்புடன் தெரிவித்தார்கள்.

நான் அவர்களுடன் ஆறு நாட்கள் நேமத்தான் பட்டியில் தங்க நேரிட்டது. 'இந்திரா' அலுவலகத்துக்கு என் பெயருக்கு என் அண்ணனிடமிருந்து மணியார்டர் வந்திருக்கிறது; மறுநாள் காரைக்குடி போய் நான் அதைப் பெற்றுப் கொள்ளலாம் என்று ஒருநாள் சுந்தரம் வந்து தகவல் சொன்னார்.

மறுநாள் சகோதரர்களிடமும், சுந்தரத்தின் அம்மாவிடமும் சொல்லிக்கொண்டு, நான் சுந்தரத்துடன் காரைக்குடி போனேன். மணியார்டர் ரூபாயைப் பெற்றுக் கொண்டதும் அன்றைக்கே திருநெல்வேலிக்குப் பயணமானேன்.

# 3

*பத்து நாட்களுக்குப் பிறகு நான் வீடு திரும்பினேன். வீட்டுச் சொந்தக்காரர் பரிகாசமாகக் குறிப்பிட்டதுபோல, 'போன மச்சான் திரும்பி வந்தான் வெறும்கையோடே!' என்ற தன்மையில் தான்.*

*சகோதரர்கள் என்னைச் சந்தோஷத்தோடு வரவேற்றார்கள். என் அனுபவங்களை ஆவலோடு கேட்டறிந்தார்கள். அம்மா தான் மனத்துயரத்தோடு குறை கூறினாள்.*

*நான் வீட்டைவிட்டுப் போனதும், போனது போல் வெறுமனே திரும்பி வந்ததும் எனக்கு ஏமாற்றமாகவோ தோல்வியாகவோ படவில்லை. எல்லாமே புதிய அனுபவங்கள் என்றுதான் நான் கருதினேன். பத்திரிகை அலுவலகங்களைப் பார்த்ததும், பத்திரிகைகள் சம்பந்தபட்டவர்களைக் கண்டு பழக முடிந்ததும் எனது அனுபவங்களை விசாலப்படுத்தியதாகவே நான் மதிப்பிட்டேன்.*

*எனது நாள்கள் எப்போதும்போல் நகரலாயின. படிப்பதும் எழுதுவதுமே எனது முக்கிய வேலையாக இருந்தது.*

*யுத்த காலம் என்ற பேச்சு எங்கும் அடிபட்டது. ஐரோப்பாவில் உலகமகாயுத்தம் நடந்து கொண்டிருந்தது. அது தமிழ்நாட்டைப் பெரிதாக பாதித்துவிடவில்லைதான். என்றாலும் அதன் தாக்கம் பல வகைகளிலும் உணரப்பட்டு வந்தது.*

*விலைவாசிகளின் உயர்வு, அவசியப் பொருள்களின் பற்றாக்குறை; முக்கியமான சில சாமான்கள் சந்தையில் இல்லாமல் போவது, ஆயினும் அதிகமான பணம் கொடுத்தால் 'கறுப்பு மார்க்கெட்'டில் அப்பொருள்கள் தாராளமாகக் கிடைப்பது- இப்படிப் பலப்பல.*

*படித்துவிட்டு வேலை கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருந்த இளைஞர்கள் பலர், யுத்தத்துக்குப் போகிறேன்*

என்று ராணுவத்தில் சேர்ந்தார்கள். ராணுவ வீரர்களின் நடமாட்டம் பெரிய நகரங்களில் சகஜமாகக் காணப்பட்டது. ராணுவச் செலவுகளுக்காக 'யுத்த நிதி' சேகரித்துத் தரவேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கெடுபிடி பண்ணியது. வீடுகளில் இரவு நேரத்தில் அதிகநேரம் மின்விளக்குகளை எரியவிடக்கூடாது; எரிகிற விளக்குகள் அதிக ஒளிபெற்றனவாக இருக்கக்கூடாது என்று கட்டுப்பாடுகள், தெருவிளக்குகளின் பல்புகளில் தார் பூசி வெளிச்சம் மட்டுப்படுத்தப்பட்டது. பஸ்கள், கார்களின் முகப்பு விளக்குகளில்கூட கறுப்பு வர்ணம்பூசி வெளிச்சத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பன போன்ற அடக்குமுறைகள் அமுல் படுத்தப்பட்டன.

யுத்தகாலம் பணக்கஷ்டம் என்று பேசப்பட்டு வந்தாலும், புதிய பத்திரிகைகள் தோன்றிக்கொண்டுதான் இருந்தன.

'ஆனந்த விகடன்'பத்திரிகையில் பணிபுரிந்து, அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்து வந்த 'கல்கி' ரா.கிருஷ்ணமூர்த்தி விகடனிலிருந்து பிரிந்து சென்றார். சொந்த முயற்சியாக 'கல்கி' என்ற பெயரிலேயே ஒரு பத்திரிகை ஆரம்பித்தார்.

அதன் பிறகு பத்திரிகை தொடங்கி நடத்த முற்பட்ட எழுத்தாளர்கள் சிலர் அவரவர் புனைப்பெயரைச் சூட்டி இதழ் ஆரம்பிப்பது ஒரு வழக்கமாகிவிட்டது.

சேலத்தில் வேல்சாமி கவிராயர் என்பவர் 'சண்டமாருதம்' என்ற பெயரில் ஒரு இதழைத் தொடங்கினார். சேலம் மாடர்ன் தியேட்டர் தயாரித்த திரைப்படங்களுக்குப் பாடல்கள் எழுதுவார் அவர். 'பரவால்லே ரகம்' என்ற தன்மையில் அவர் பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தார். திரைப்படங்களுக்குப் பாடல்களும் வசனமும் எழுத முற்பட்டிருந்த கவிஞர் பாரதிதாசனுடன் அவருக்குப் பழக்கம் ஏற்பட்டது. இதழ் தோறும் பாரதிதாசன் எழுதிய புதிய கவிதை வெளிவரலாயிற்று. அது 'சண்டமாருதம்' இதழுக்குப் பெருமை சேர்த்தது. எனது கதைகள் கட்டுரைகளும் அதில் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன.

வெளிநாடுகளில் தங்கி அனுபவம் பெற்ற சி.பா.ஆதித்தன் 'பார்-அட்-லா'தமிழகம் வந்து சேர்ந்தார். (அவரை ஆதித்தனார் என்று குறிப்பிடும். வழக்கம் பிற்காலத்தில் ஏற்பட்டது.) அவர் பத்திரிகைத்துறையில் ஈடுபடத்திட்டமிட்டார். 'தமிழ் ராஜ்யம்' பற்றிய கனவுகளை வளர்த்து வந்த அவர் 'தமிழ் ராஜ்யக் கட்சி'

தொடங்கினார். கட்சியை வளர்ப்பதற்குப் பத்திரிகைகள் தேவை என்று கருதிய அவர் முதலில் 'தமிழன்' வாரப்பத்திரிகையை ஆரம்பித்தார். தொடர்ந்து 'தினத்தந்தி' என்ற பெயரில் நாளிதழைத் தொடங்கினார்.

'தமிழன்' இதழ் புதுமைகள் பண்ணுவதில் மிகுந்த உற்சாகம் காட்டியது. வாரம் தோறும் இதழின் அட்டையில் சினிமா நடிகையர் அல்லது புகழ்பெற்ற கலைஉலக அழகியர் அல்லது முக்கிய பிரபலஸ்தர்கள் படங்களை 'தமிழன்' வெளியிடவில்லை. சமூகத்தில் உள்ள சாதாரணப் பெண்மணிகளைப் படம்பிடித்து அட்டையில் வெளியிட்டது. உள்ளே நி.சி.நி. (நினைத்தாலே சிரிப்பூட்டும் நிகழ்ச்சி', ம.மு.ச. (மறக்க முடியாத சம்பவம்) என்றெல்லாம் சிறுசிறு பகுதிகள். ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனி ஆசிரியர் இருப்பது போல, நி.சி.ச. ஆசிரியர், ம.மு.ச.ஆசிரியர் கேள்வி- பதில் ஆசிரியர் என்ற அறிவிப்புகள். கோ.த.சண்முகசுந்தரம் 'இந்திரா' அலுவலகத்திலிருந்து விலகி 'தமிழன்' இதழில் சேர்ந்திருந்தார். 'மேதாவி' என்ற பெயரில் அவர் பரபரப்பு ஏற்படுத்திக் கொண்டிருந்தார்.

'தமிழன்' மதுரையிலிருந்து வெளிவந்தது. மதுரையிலிருந்து வேறு சில புதிய பத்திரிகைகளும் வரலாயின.

இதனால் எல்லாம் என் மனம் மறுபடியும் குறுகுறுத்தது. புதிய பத்திரிகை எதிலாவது இடம் கிடைக்குமா என முயன்று பார்க்கலாமே என்று ஆசைப்பட்டேன். வேல்சாமிக் கவி சேலம் மாடர்ன் தியேட்டர்சின் ஆதரவோடு 'சண்டமாருதம்' இதழை மேலும் சிறப்பாகக் கொண்டுவர இருப்பதாக அறிவித்திருந்தார். அந்தப் பத்திரிகையில் எனக்கு இடம் கிடைத்தால் எனது வளர்ச்சிக்கும் பத்திரிகையின் வளர்ச்சிக்கும் உபயோகமாக இருக்கும் என்று எண்ணினேன்.

எனவே மீண்டும் வெளிஉலகப் பயணம் தொடங்கினேன். இம்முறை வீட்டில் அனைவரின் அனுமதியோடு, செலவுக்குத் தேவையான பணத்துடன் தான் புறப்பட்டேன். மதுரை சேர்ந்தேன், ரயிலில் பயணம் செய்துதான்.

மதுரையில் ரா.ஆறுமுகம், ரா.வேங்கடாசலம் என்று இரண்டு எழுத்தாளர்கள் பல பத்திரிகைகளிலும் எழுதி கவனிப்புப் பெற்றிருந்தார்கள். ரா. ஆறுமுகம் ஆண்பெண் செக்ஸ் உறவுகளை விவரிக்கும் ரசமான கதைகள் எழுதுவதில் பெயர் பெற்றவர். ரா.வேங்கடாசலம் சாதாரணமாக எழுதக்கூடியவர். காலப்போக்கில்

'பிரபல நாடக ஆசிரியர்' என்று புகழ்பெறக்கூடிய அளவுக்கு அநேக மேடை நாடகங்கள் எழுதிய பெருமை இவருக்கு உண்டு.

இவ்வாறு இரண்டு எழுத்தாளர்களும் சொந்தமாக மதுரையிலிருந்து ஒரு பத்திரிகை நடத்தத் திட்டமிட்டு, அதற்கான விளம்பரங்களை தடபுடலாகச் செய்து வந்தார்கள். முதல் இதழ் குறிப்பிட்ட தேதியில் வெளிவரும் என்று விளம்பரங்கள் கூறின.

அவர்களைக் கண்டு பேசலாம் என்று, அவர்கள் விளம்பரப்படுத்தியிருந்த முகவரியைத் தேடிக் கண்டுபிடித்தேன். பெரிய வீடுதான். உள்ளே போனேன். உயிர்ப்பின்றி வெறிச்சிட்டுக் கிடந்தது அந்த இடம். சில நாற்காலிகளும் மேஜைகளும் கிடந்தன. ஒரே ஒரு நபர் மட்டும் நாற்காலி ஒன்றில் அமர்ந்து, மேஜை மீது தலை பதித்து உறங்கிக் கொண்டிருந்தார். அப்போது பகல் மணி பதினொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது.

'சார்' என்று குரல் கொடுத்தேன். அவர் தலையை உயர்த்தி நோக்கினார். யார்? என்ன? என்ன வேண்டும் என்று கேட்டார். நான் எழுத்தாளர் ரா. ஆறுமுகத்தை பார்க்க வேண்டும் என்றேன்.

ஆசிரியர் ஊரில் இல்லை. சென்னை போயிருக்கிறார் என்று அந்த நபர் தெரிவித்தார். பத்திரிகையைப் பற்றி விசாரிக்கவும், ஒரு இதழ் தான் வந்திருக்கிறது, அடுத்த இதழ் எப்போது வருமோ தெரியாது, ஆசிரியர் சென்னையிலிருந்து திரும்பி வந்ததும் தான் தெரியும் என்று அவர் கூறினார்.

தமிழன் ஆபீஸ் எங்கே இருக்கிறது? எப்படிப் போகவேண்டும் என்று அவரிடம் கேட்டேன். இடமும் வழியும் சொன்னார்.

அவர் சொன்ன வழியில் நடந்து, தமிழன் அலுவலகம் சேர்ந்தேன். சாதாரணக் கட்டிடம் தான். அருகில், வசதிக்காக பிரப்பம்பாய்த் தட்டிகள் வைத்து அறைகள் அமைத்து, கூரை வேய்ந்த அமைப்பு ஒன்று காணப்பட்டது. அங்கேதான் தமிழன் ஆசிரியப் பகுதி செயலாற்றியது. கோ.த.சண்முகசுந்தரம் இருந்தார். இன்முகத்தோடு வரவேற்றார்.

அவர் ஒருவர் மட்டுமே அங்கு வேலை செய்து கொண்டிருந்தார். ஆனால் பலபேர் இருந்து வேலை செய்வதற்கு வேண்டிய நாற்காலிகளும் மேஜைகளும் அந்த அறையில் இருந்தன. ஒவ்வொரு நாற்காலி அருகிலும் தனி அலமாரி, அதில் சில ஃபைல்கள் காணப்பட்டன. அலமாரி மீது 'நி.சி.நி. ஆசிரியர்', 'ம.மு.ச. ஆசிரியர் 'நகைச்சுவை ஆசிரியர்' 'கேள்வி பதில் ஆசிரியர்' என்றெல்லாம் லேபிள் அச்சிட்டு ஒட்டப்பட்டிருந்தது.

கோ.த.ச. தான் இந்த இருக்கையில் இருந்து இன்னொன்றுக்கும், அங்கிருந்து அடுத்ததற்கும் என்று, தேவைப்பட்ட குறிப்புகள்- காகிதங்களை எடுப்பதற்காகவும், ஃபைலை எடுத்துப் பார்ப்பதற்காகவும் போய் வந்து கொண்டிருந்தார். மேதாவி- மேல்தாவி குரங்கு என்று ஒருவாரம் அவர் தன் பெயருக்கு விளக்கம் கொடுத்திருந்தார். இப்போது அவர் சிரித்துக் கொண்டே, 'நான் மேதாவி- மேல் தாவி என்பது சரிதானே? அங்கும் இங்கும், இந்த மேசைக்கும் அந்த மேசைக்கும் என்று தாவித் தாவி வேலை செய்கிறேன் அல்லவா?' என்று தமாஷ் பண்ணினார்.

'எல்லாப் பிரிவுகளுக்கும் தனியே ஆட்கள் நியமிக்க வில்லையா?' என்று கேட்டேன்.

'இன்னும் சரியாக ஆட்கள் சேர்க்கவில்லை. இப்போதைக்கு எல்லாவற்றையும் நான் தான் கவனித்துக் கொள்கிறேன் என்றார் கோ.த.ச.

'எனக்கு இங்கே வேலை கிடைக்குமா?'

'இப்போ புதுசா ஆட்கள் சேர்க்கிறதாக இல்லை. மேலும் உங்களுக்கு இங்கே சரிப்பட்டு வராது' என்று நண்பர் சொன்னார்.

'ஆசிரியர் ஆதித்தனைப் பார்க்கலாமா?'

'ஓ, தாராளமா! என்னோடு வாங்க' என்று அவர் என்னை ஆதித்தன் இருந்த இடத்துக்கு அழைத்துச் சென்றார். அவரிடம் என்னைப் பற்றிக் கூறிவிட்டுத் தனது இடத்துக்குப் போய்விட்டார்.

ஆதித்தன் என்னைப் பற்றி விசாரித்தார். திருநெல்வேலியில் தமிழன் இதழுக்கு எப்படி வரவேற்பு இருக்கிறது என்று கேட்டார். தமிழ் ராஜ்யம். தமிழ் ராஜ்யக் கட்சி பற்றிச் சிறிது விவரித்தார். அது சம்பந்தமான துண்டுப் பிரசுரங்களை எனக்குத் தருமாறு ஒருவருக்கு உத்தரவிட்டார்.

அவை கிடைத்தன. பத்திரிகையில் எனக்கு ஒரு வேலை வேண்டும் என்பது பற்றி நான் அவரிடம் எதுவும் கூறவில்லை. சிறிது நேரத்தில் விடைபெற்றுக் கொண்டு வெளியேறினேன்.

மதுரையைச் சிறிது சுற்றிப் பார்த்தேன். ரயில் நிலையம் போனேன். திருச்சிராப்பள்ளிக்கு ரயில் வண்டி எப்போது போகும் என்று பார்த்தேன். டிக்கெட் வாங்கிக் கொண்டு ரயிலில் பயணமானேன்.

திருச்சியில் மட்டக்காரத் தெருவில் இருந்தது 'கலாமோகினி' அலுவலகம். ஒரு சிறு அறை தான். அதை ஒட்டிய வீட்டில் வி.ரா. ராஜகோபாலன் குடும்பத்தோடு வசித்தார்.

நான் போனபோது இரவு ஆரம்பித்திருந்தது. அப்போது ராஜகோபாலன் அங்கு இல்லை. அவருடைய தம்பி வி.ரா. சந்தானம் தான் இருந்தார். நான் என்னை அறிமுகம் செய்து கொண்டதும், மிகுந்த மகிழ்ச்சியோடு அவர் வரவேற்றார். பையை இங்கேயே வைத்துவிட்டு வாங்க, முதலில் ஓட்டலுக்குப் போய் காபி சாப்பிடுவோம் மற்றதெல்லாம் அப்புறம்தான் என்றார். அவர் என்னைப் போலவே ஒல்லியாய், ஒரு பையன் போன்ற தோற்றமே கொண்டிருந்தார்.

ஓட்டல் வெகு அருகிலேயே இருந்தது. 'கலாமோகினி' ஆபீசுக்கு வருகிறவர்களுக்கெல்லாம் இங்கே தான் காப்பி, சாப்பாடு என்று சந்தானம் கூறினார். அங்கு சிற்றுண்டியும் காப்பியும் சாப்பிட்டோம்.

அறைக்கு வந்து பல விஷயங்கள் பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். நான் எனது 'இதயஒலி' கையெழுத்துப் பத்திரிகையின் ஆண்டு மலர் தயாரித்திருந்தேன், பலவகையான கதைகள், கட்டுரைகள், கவிதைகள், ஓரங்க நாடகங்கள். எல்லாம் நானே எழுதியவை.

சந்தானம் அதைப் பார்த்து அதிசயித்தார். 'கையெழுத்துப் பத்திரிகைன்னாலும் பிரமாதமா இருக்கு. இதுவரை நான் கையெழுத்துப் பத்திரிகை எதையும் பார்த்ததில்லை. இப்பதான் முதன் முதலாகப் பார்க்கிறேன். கையெழுத்திலும் இப்படி பத்திரிகை உருவாக்க முடியும் என்பது வியப்பாகத்தான் இருக்கு' என்று புகழ்பாடினார்.

அப்போது வி.ரா.ரா.வந்து சேர்ந்தார். தம்பி சந்தானம் அவரிடம் என்னைப் பற்றிக் கூறினார். 'காப்பி சாப்பிட்டாச்சா?' என்று அன்புடன் விசாரித்தார் ராஜகோபாலன்.

'கலாமோகினி' எழுத்தாளர்களான ந.பிச்சமூர்த்தி, கு.ப.ராஜகோபாலன், வ.ரா., சிட்டி, க.நா.சு. மற்றும் பல எழுத்தாளர்கள் பற்றிப் பேசி மகிழ்ந்தோம். கலாமோகினியை மேலும் சிறப்பாகக் கொண்டு வருவது பற்றி அவர் விவரித்தார்.

வி.ரா.ராஜகோபாலன் லட்சிய வேகத்தோடு, மணிக்கொடி மாதிரி மறுமலர்ச்சி இலக்கிய இதழ் ஒன்று நடத்த வேண்டும் என்ற

குறிக்கோளோடு, கல்லூரிப் படிப்பை பாதியில் விட்டுவிட்டு, 'கலா மோகினி'யை நடத்த முன் வந்தவர். தாம் இலக்கிய உலகில் ஒரு புதிய சகாப்தம் படைக்கப் போவதான ஒரு எண்ணம் - நம்பிக்கை- அவருக்கு இருந்தது. அதனால் 'சாலிவாகனன்' என்றும், விக்கிரமாதித்தன் என்றும் அவர் தனக்குப் புனைப்பெயர்கள் வைத்துக் கொண்டார். சாலிவாகனன் என்ற பெயரில் சிறப்பாகக் கவிதைகள் எழுதினார். சிறுகதைகள், விமர்சனக் கட்டுரைகள் முதலியவற்றை விக்கிரமாதித்தன் என்ற பெயரில் எழுதிக் கொண்டிருந்தார். விறுவிறுப்பாகவும், கிண்டலாகவும், சூடாகவும் விமர்சனங்கள் எழுதுவதில் அவர் ஆர்வம் கொண்டிருந்தார்.

அவர் பேச்சோடு பேச்சாக, 'நீங்க இங்கே எங்கு வந்தீங்க என்று கேட்டார். நான் என் எண்ணத்தைச் சொன்னேன். இரவு இங்கே தங்கிவிட்டு, காலையில் முதல் பஸ்சில் சேலம் போகலாம்னு நினைக்கிறேன். அங்கே சண்டமாருதம் பத்திரிகையில் சேரமுடியுமா என்று பார்க்கணும் என்றேன்.

வி.ரா.ரா.என்னையே கூர்ந்து நோக்கினார். வேல்சாமிகவியை உங்களுக்குத் தெரியுமா என்று கேட்டார்.

'தெரியாது'

'சண்டமாருதத்துக்கு வரும்படி அவர் எப்பவாவது உங்களுக்குக் கடிதம் எழுதினாரா?'

'இல்லை. நானாகத்தான் போய் முயற்சி பண்ணலாமே என்று புறப்பட்டேன்.'

'இப்படி வேலை தேடி பத்திரிகை பத்திரிகையாகப் போவது சரியில்லை. உங்கள் மதிப்பை நீங்களே குறைத்துக் கொள்கிற செயல்தான் அது. நீங்க சேலம் போக வேண்டாம். திருநெல்வேலிக்கே திரும்பிப் போங்க. வாய்ப்புகள் உங்களைத் தேடி வரும். நான் என்னாலான உதவிகளைச் செய்வேன்' என்று உறுதியாகச் சொன்னார் வி.ரா.ரா.

ஆகவே, அன்று இரவு அங்கே தங்கிவிட்டு, மறுநாள் காலையில் எழுந்ததும் வி.ரா.ரா.விடமும் தம்பி சந்தானத்திடமும் சொல்லிவிட்டு, திருச்சிராப்பள்ளி ரயில் நிலையம் சேர்ந்தேன். உரிய நேரத்தில் ரயிலில் பயணம் தொடங்கினேன். மீண்டும் திருநெல்வேலிக்கே வந்து சேர்ந்தேன்.

# 4

அரசியல் நிகழ்வுகள், அரசியல் கட்சிகள், அவற்றின் செயல்பாடுகளில் எல்லாம் நான் ஆர்வமோ அக்கறையோ கொண்டதில்லை. ஆயினும் முக்கிய நிகழ்ச்சிகள் அவ்வப்போது என் கவனத்தில் பட்டுக்கொண்டிருந்தன என்று சொல்லவேண்டும்.

இரண்டாவது உலகமகாயுத்தம் வளர்ந்து கொண்டிருந்தது ஜெர்மானிய சர்வாதிகாரி ஹிட்லர் பேராசையோடு போரிட்டு ஐரோப்பிய நாடுகளை ஒவ்வொன்றாக வென்று கொண்டிருந்தான். இத்தாலிய சர்வாதிகாரியான பெனிட்டோ முசோலினி ஹிட்லருக்கு, துணையாகச் செயல்பட்டு வந்தான். அவர்களுடைய தாக்குதலை சமாளிக்க முடியாமல் பிரிட்டன் திணறிக் கொண்டிருந்தது.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியினர் யுத்தநிதி வசூலிப்பதில் கெடுபிடியாக இருந்தனர். விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருந்த அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியினர் யுத்தத்துக்காக வெள்ளையருக்கு நிதி கொடுக்கக்கூடாது என்று பிரசாரம் செய்தனர்.

யுத்தத்தை ஆதரித்து, யுத்த நிதி வழங்கும்படி பிரசாரம் செய்யும் நாடகங்கள் அங்கங்கே அரசு உதவியுடன் நடத்தப்பட்டன. யுத்தத்துக்காகப் பிரசாரம் செய்யும் சினிமாப் படங்களையும் சினிமாத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களில் சிலர் தயாரித்தனர். சேலம் மாடர்ன் தியேட்டர்சார், இந்த வகையில், 'பர்மாராணி' என்றொரு படம் தயாரித்து வெளியிட்டார்கள்.

ஐரோப்பாவில் யுத்தம் நடந்து கொண்டிருந்தபோதே, ஆசியாவில் ஜப்பானும் போர் துவக்கியது. வெற்றிகரமாக அண்டை நாடுகளை ஆக்கிரமித்தது. இந்தியாவில் ஜப்பானியருக்கு எதிரான துவேஷப் பிரசாரங்கள்- ஜப்பானியரை வெறுக்கத் தூண்டும் கோஷங்கள் - தீவிரமாகப் பரப்பப்பட்டு வந்தன.

இந்தியாவிலிருந்து திறமையாகத் தப்பிச் சென்ற சுபாஷ் சந்திரபோஸ், ஐரோப்பாவில் சிறிது காலம் தங்கியிருந்த பின், துணிச்சலாக ஜப்பான் வந்து சேர்ந்தார். இந்தியாவிலிருந்து பிரிட்டிஷாரை வெளியேற்றுவதற்காக, இந்திய தேசிய இராணுவம் அமைத்தார். ஜப்பானியர் அவருக்கு உதவிகள் புரிந்தார்கள்.

உலக மகாயுத்ததில் அமெரிக்காவும் பங்கு கொண்டது. சோவியத் ரஷ்யா விலகிநின்றது.

இந்தியாவில் உள்ள கம்யூனிஸ்டுக் கட்சியினர், இது முதலாளிவர்க்கத்துக்கு சாதகமான ஏகாதிபத்தியவாதிகளின் யுத்தம், நாம் யுத்தத்தை ஆதரிக்கக் கூடாது, பிரிட்டிஷாருக்கு உதவக்கூடாது என்ற பிரசாரம் செய்து வந்தார்கள்.

ஹிட்லரின் சேனை வேகமாக ஐரோப்பாவில் முன்னேறி சோவியத் ரஷ்யாவைக் குறிவைத்துச் சென்றது. தங்கள் நாட்டைக் காப்பதற்காக சோவியத் ரஷ்யா போரில் ஈடுபட வேண்டியதாயிற்று.

உடனேயே அது 'மக்கள் யுத்தம்' என்று கம்யூனிஸ்டுக்கட்சியினர் முழக்கமிடலாயினர். ஹிட்லரை எதிர்த்து நடக்கும் யுத்தத்தில் நம்மாலியன்ற ஆதரவும் உதவிகளும் புரிய வேண்டும் என்று அவர்கள் மக்களிடையே பிரசாரம் செய்தார்கள்.

'நேதாஜி' என்று சிறப்புப் பெயர் பெற்றுவிட்ட சுபாஷ் சந்திரபோஸ், 'டில்லி சலோ'! என்ற கோஷத்துடன், பிரிட்டிஷாருக்கு எதிராக இந்தியாவை நோக்கிப் படையெடுக்க ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்தார்.

இந்தியாவிலும், காந்திஜி தீவிர எதிர்ப்பைக் காட்டி வெள்ளையரை எதிர்க்க அனுமதி அளித்தார். 'வெள்ளையனே, வெளியேறு'! எனும் பேரொலி நாடு நெடுகிலும் பரவியது. 'க்விட் இண்டியா மூவ்மென்ட்' வேகம் பெற்றது. காந்திஜியே எதிர்பாராத விதத்தில் நாடு முழுவதும் மக்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டார்கள். தபால் பெட்டிகளை தகர்த்தார்கள். தந்திக் கம்பிகளை அறுத்தார்கள். தந்திக் கம்பங்கள் முறிக்கப்பட்டன. போலீஸ் ஸ்டேஷன்கள், ரயில்வே நிலையங்கள் போன்ற அரசாங்க அலுவலகங்களுக்குத் தீவைத்துக் கொளுத்தினார்கள். 1942 ஆகஸ்டுப் போராட்டம் வரலாற்று முக்கியத்துவம் பெற்றதாயிற்று.

ஏராளமான பேர் கைது செய்யப்பட்டு, சிறைகளில் அடைக்கப்பட்டார்கள். கிளர்ச்சிகள் அடக்கி ஒடுக்கப்பட்டன.

வழக்கமான காரியங்கள் வழக்கம் போல் நடந்து கொண்டிருந்தன. நானும் என் இயல்புப்படி படிப்பது, எழுதுவது, கதைகளை பத்திரிகைகளுக்கு அனுப்புவது என்று மாதங்களை கழித்துக் கொண்டிருந்தேன்.

டிசம்பர் மாதம் ஒரு நாளில் நான் எதிர்பாராத விதத்தில் கடிதம் ஒன்று வந்தது. திருச்சியில் இருந்து வி.ரா. ராஜகோபாலன் எழுதியிருந்தார். நேரில் அவர் வாக்களித்தபடி அவர் எனக்கு உதவ முன்வந்திருந்தார்.

'புதுக்கோட்டையில் இருந்து வெளிவரும் 'திருமகள்' உங்களுக்குத் தெரிந்த பத்திரிகைதான். அதன் வெளியீட்டாளரான ராசி. சிரம்பரம் என்னைக் கண்டு பேசி யோசனைகள் பெற வந்திருந்தார். திருமகளை மணிக்கொடி வழியில் தரமான மறுமலர்ச்சி இலக்கிய இதழாக வளர்க்க அவர் விரும்புகிறார். அதற்கு தனக்குத் துணைபுரியக் கூடிய ஒருவரை சிபாரிசு செய்யும்படி என்னைக் கேட்டார். நான் உங்கள் பெயரைக் கூறினேன். அவருக்கும் திருப்திதான். அவர் உங்களுக்குக் கடிதம் எழுதுவார். நீங்கள் தயங்காமல் புதுக்கோட்டை போய் 'திருமகள்' பணியை ஏற்றுக் கொள்ளலாம். உங்களுக்குத் தேவையான வசதிகளை எல்லாம் ராசி. சிதம்பரம் செய்து தருவார். அவர் கடிதம் கிடைத்த உடனேயே புறப்பட்டு விடுங்கள்' என்று வி.ரா.ரா. எழுதியிருந்தார்.

இரண்டு நாள்களில் ராசி. சிரம்பரம் கடிதமும் வந்தது. ஆகவே நான் 1943 ஜனவரியில் புதுக்கோட்டை போய்ச் சேர்ந்தேன். பிறந்த புதுவருடம் என் வாழ்க்கையில் புதிய அனுபவங்கள் வந்து சேர்வதற்கு உதவுகிற காலஆரம்பமாக அமைந்ததில் எனக்கு மகிழ்ச்சியே ஏற்பட்டது.

நான் முதல்முறையாக அந்தப் பாதையில் ரயிலில் சென்றது 1942 மே மாதத்தில். அதன் பிறகு தான் ஆகஸ்டுப் போராட்டம் தலை தூக்கி, நெடுகிலும் சேதங்களை ஏற்படுத்தியது. அதன் எச்சங்களை இப்போது பல இடங்களில் காண முடிந்தது.

தமிழ்நாட்டில் சில இடங்களில் 'வெள்ளையனே வெளியேறு' போராட்டத்தின் செயல்பாடுகள் வெகு மும்முரமாக இருந்தன. அவற்றில் தேவகோட்டைப் பகுதியும் ஒன்று ஆகும். ரயில் நிலையங்கள், தபால் நிலையங்களுக்குத் தீ வைப்பது, தந்திக் கம்பியை அறுத்து, தந்திக்கம்பங்களை முறித்து வீழ்த்துவது போன்ற அழிவு வேலைகள் அந்த வட்டாரத்தில் அதிகம்

நிகழ்ந்திருந்தன. காரைக்குடிக்கு அருகில் உள்ள பள்ளத்தூர் ரயில் நிலையம் தீயிட்டு எரிக்கப்பட்டு முற்றிலும் சிதைவுண்டது.

இச்செய்திகளை நான் பத்திரிகைகளில் படித்திருந்தேன். ஜனவரி மாதப் பயணத்தின்போது, அத்தகைய அழிபாடுகளின் சொச்சங்களைக் காணமுடிந்தது. முதல் முறை சென்றபோது பசுமையாய் குளுமையாய் காட்சி தந்த சில இடங்கள் இப்போது கருகிச் சிதைந்து காணப்பட்டன. அழகான சூழ்நிலையில் அமைதியாக நின்ற சிறிய கட்டிடம் பள்ளத்தூர் ரயில் நிலையம். இம்முறை, அந்த இடத்தில் கருகிச் சரிந்த கூரையும், இடிந்து தகர்ந்த - கரி படிந்த - சுவர்களும், கட்டை மண்ணும் குட்டிச் சுவருமாய் என்பார்களே அத்தன்மையில், கண்களை உறுத்தும் காட்சிகளாக நின்றன. என் மனசிலும் உறுத்தல் ஏற்படுத்தியது பாழ்பட்ட அந்தத் தோற்றம்.

புதுக்கோட்டையில் ராசி. சிதம்பரம் மகிழ்ச்சியோடு என்னை வரவேற்றார். செல்வந்தர் வீட்டு இளைஞர் என்பது அவருடைய நடை உடை பாவனைகளில் புலப்பட்டது. தனவைசிய இளைஞர்கள் பத்திரிகைப் பிரசுரத்திலும், புத்தக வெளியீட்டிலும் ஆர்வம் காட்டத் தொடங்கியிருந்த காலம் அது.

சிதம்பரம் இனிய கனவுகள் வளர்த்து வந்தார். 'திருமக சிறப்பான இதழாக வளர்க்க வேண்டும். பேர் சொல்லக்கூ பத்திரிகையாக திருமகள் விளங்க வேண்டும். இராம. மருதப் இப்போது ஆசிரியராக இருக்கிறார். அவரும் இருக்கட்டும். அவ சாதாரணமானவர். நீங்கள் உங்கள் திறமையை எல்லாம் காட்டி, திருமகளை வளர்ச்சிப் பாதையில் கொண்டு செலுத்த வேண்டும்' என்று அவர் என்னிடம் கூறினார்.

இந்த மாடியிலேயே தங்கிக் கொள்ளலாம்; சாப்பாட்டுக்கு பக்கத்தில் ஒரு ஓட்டல் இருக்கு; அதில் ஏற்பாடு செய்கிறேன் என்றும் சொன்னார்.

அந்த இடம் நீளமும் விசாலமுமான ஒரு மாடி அறை. மேஜைகள் நாற்காலிகள் பெஞ்சுகள் அலமாரிகள் எல்லாம் மிகுதியாகவே இருந்தன. கீழ ராஜ வீதியில் இருந்த ஒரு பெரிய கட்டிடத்தின் வசதியான மாடி அது.

மறுநாள் இராம. மருதப்பர் வந்தார். பள்ளி ஆசிரியர் போல் தோற்றம் பெற்றிருந்தார். திடீரென அங்கு 'முளைத்திருந்த' என்னை வியப்புடன் பார்த்தார். என்னை நானே அறிமுகம் செய்து கொண்டேன். மகிழ்ச்சி காட்டினார் அவர். 'சரி, இருங்க. எனக்கு நல்ல துணையாக இருக்கும்' என்றார்.

பத்திரிகை சம்பந்தமான அலுவல்கள் பலவற்றை இராம. மருதப்பன் எனக்குக் கற்றுத் தந்தார். முக்கியமாக, அச்சுக் கோர்த்து வந்த பிரதிகளைச் சரிபார்த்து பிழைகளைத் திருத்தும் முறையை - புரூஃப் பார்ப்பதை - அவர் விளக்கமாகச் சொல்லிப் புரிய வைத்தார். அவர் நல்ல நண்பனாகவும் சீரான வழிகாட்டியாகவும் விளங்கினார்.

மாலை நேரங்களில் அமைதியான இடங்களுக்கு உலாவ அழைத்துப் போனார் அவர். பல விஷயங்கள் பற்றியும் பேசினார்; ஊரின் பெருமைகள், அண்டை அயல் ஊர்களின் 'புரவோலங்கள்', நாட்டு நடப்புகள் பற்றி எல்லாம் தெரிவித்தார். 'செட்டியாருக்கு ஆசை அதிகம் இருக்கு. அதெல்லாம் நடைமுறையில் எவ்வளவு சாத்தியப்படும் என்பது போகப் போகத் தான் தெரியும்' என்று இராம. மருதப்பன் சொல்லி வைத்தார்.

விரைவிலேயே எனக்கு அது புரிவதற்கு சந்தர்ப்பம் உதவியது.

நான் அங்கு வந்து சேர்ந்து பத்து நாள்கள் ஆகியிருந்தன. ஒருநாள் இரவு ஒரு ஏழு மணி இருக்கும். ராசி. சிதம்பரம் வந்தார். என்னைத் தேடி யாராவது வந்தார்களா என்று கேட்டார். யாரும் வரவில்லை என்றேன். பொதுவான விஷயங்களைப் பேசியபடி அவர் நின்றார். சற்று நேரத்தில் வெளியே நின்று யாரோ அவரை அழைத்தார்கள். உடனே அவர் 'சரி. நான் வாறேன். சும்மாதான் வந்தேன்' என்று கூறிவிட்டு வெளியேறினார். அங்கு நின்று அவரை அழைத்தது யார், அவர் யாருடன் சென்றார் என்பது எதுவும் எனக்குத் தெரியாது. இருட்டில் ஒன்றும் தெரியவுமில்லை. அது அவர் சொந்த விஷயம், எனக்குத் தெரிந்து என்ன ஆகப்போகிறது என்று இருந்து விட்டேன்.

ஆனால் மற்றவர்கள் என்னை அப்படி இருக்க விடமாட்டார்கள் என்பது சிறிது நேரத்திலேயே புரிய வந்தது. செட்டியார் வந்து சென்ற சற்று நேரத்தில் ஒரு ஆள் வந்து, 'ஆச்சி உங்களைக் கூப்பிடுறாக' என்றார். எந்த ஆச்சி என்று எனக்கு விளங்கவில்லை. அறியாமையோடு அதைக் கேட்டேன். செட்டியார் சம்சாரம் என்று அவர் மென்குரலில் சொன்னார்.

செட்டிநாட்டில் சாதாரணமானப் பெண்கள் 'ஆச்சி' என அழைக்கப்படுவது வழக்கம் என்பது நான் அறிந்திராதது. திருநெல்வேலிப் பக்கம் வயது முதிர்ந்தவர்களை பாட்டிமாரைத்தான் ஆச்சி என்ற குறிப்பிடுவார்கள். வேலைக்காரர்கள், மற்றும் தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள், 'பெரிய வீட்டு'ப் பெண்களை உயர்மட்டத்தினரை ஆச்சி என்று

கூறுவார்கள். வயது குறைந்த பெண்களைக் கூட 'சின்ன ஆச்சி' என மரியாதையாக் குறிப்பிடுவார்கள்; அழைப்பார்கள்.

வந்தவரிடம் 'எதற்காக?' என்று கேட்டேன். செட்டியார் வீட்டில் எவரையும் நான் அதுவரை பார்த்ததில்லை, 'கையோட கூட்டிவரச் சொன்னாக' என்று அவர் அவசரப்படுத்தினார். அவரோடு நான் செட்டியார் வீட்டுக்குப் போனேன்.

ஓர் இளம் பெண், வாயில் வெற்றிலையை அதிகமாக ஒதுக்கியபடி, அமைதியின்றி அறையில் அப்படியும் இப்படியும் நடந்து கொண்டிருந்தாள். வசதிகள் படைத்த பெரிய இடத்துப்பெண் என்ற மிடுக்குடன் அவள் தோற்றம் காட்டினாள். என்னைக் கண்டதுமே 'உங்க செட்டியாரைத் தேடி யார் வந்தது?' என்று கேட்டாள்.

'யாரும் வரலியே' என்றேன்.

'பொய் சொல்ல வேண்டாம். கோகர்ணத்துக்காரி அங்கே வரலே?'

'யாரும் வரலே. செட்டியார் தான் வந்தார். என்னோட சிறிது பேசிக் கொண்டிருந்தார்' என்று சொன்னேன்.

'உங்க செட்டியாரை பாதுகாக்கணும்கிறதுக்காக மூடி மறைக்க வேண்டாம். செட்டியார் கூட ஒரு பொம்பிளை வரலே?

'ஒருத்தரும் வரலே. செட்டியார் மட்டும் தான் வந்தார்.'

'வெளியே நின்றாளா?'

'அது எனக்குத் தெரியாது. நல்ல இருட்டு. வெளியே யாரும் நின்றால் கூடத் தெரியாது' என்று நான் அறிந்ததைச் சொன்னேன்.

'உம்ம செட்டியாரைத் தேடி பொம்பிளைக வருவாக அப்படி யாராவது வந்தா எனக்குத் தெரியப்படுத்தணும். இப்ப நீங்க போகலாம்' என்று என்னை அனுப்பிவைத்தாள்.

இந்த குறுக்கு விசாரணை எனக்கு சில உண்மைகளைப் புரிய வைத்தது. கண்ணகி, கோவலன், மாதவி விவகாரம் போலிருக்கு. செட்டியார் மீது மனைவிக்கு நம்பிக்கையில்லை. அவர் தமது ஆசைநாயகியை ஆபீசில் சந்திக்கிறார் என்ற சந்தேகம் அம்மாளுக்கு. அதனால்தான் இந்த விசாரிப்பு.

புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள கோகர்ணத்தில் தாசிகள் அதிகம் என்று மருதப்பர் பேச்சோடு பேச்சாகச் சொல்லி வைத்தது என் நினைவுக்கு வந்தது. அந்த வகையில் பிரசித்தமான அந்த

இடத்துக்கும் செட்டியார்களுக்கும் தொடர்பு அதிகம்தான் என்றும் அவர் கூறியிருந்தார்.

திருமகள் அலுவலகத்துக்கு ஓர் எழுத்தாளர் வருவார். வறுமை நிலையை அவரது தோற்றமே சொல்லும். நல்ல எழுத்துத் திறமை உடையவர். தனக்கென ஒரு தனிநடை கொண்டு சிந்தனைக் கட்டுரைகள் எழுதிக் கொண்டிருந்தார். அ.ரா. என்ற பெயரில் எழுதுவார். புதுக்கோட்டையில் இருந்த காகித விற்பனைக் கடை ஒன்றில் அவர் வேலை பார்த்தார். அ. ராமாமிர்தம் என்பது அவர் பெயர்.

மறுநாள் வந்த அவர் 'என்ன, ராத்திரி ஆச்சி உங்களிடம் விசாரணை நடத்தினார்களாமே?' என்று கேட்டார். அந்த வீட்டு வேலையாள் இவரிடம் சொல்லியிருப்பார் என்று எண்ணினேன். நடந்ததைச் சொன்னேன்.

'செட்டியார் கோவலன் டைப். அவர் விவகாரங்கள் ஆச்சிக்குத் தெரியும். சொத்து பணம் எல்லாம் ஆச்சிகிட்டே தான் இருக்கு. பத்திரிகை நடத்துவதற்குக் கூட ஆச்சி பணம் தந்தால்தான் உண்டு. அதனாலேதான் 'திருமகள்' மாதம்தோறும் ஒழுங்காக வரமுடியலே' என்று அ.ரா. விளக்கினார்.

பத்து மணிக்கு இராம. மருதப்பர் வந்தார். வந்ததுமே, 'ராத்திரி ஆச்சி உங்களைக் கூப்பிட்டு விசாரிச்சாங்களா?' என்று கேட்டார்.

இது போன்ற விஷயங்கள் எப்படித்தான் வேகமாகப் பரவிப் பலருக்கும் தெரிந்து விடுகிறதோ என்ற வியப்பு எனக்கு.

ஆச்சிக்கு செட்டியார் பேரில் நம்பிக்கை கிடையாது. அவர் கண்டபடி திரிகிறார், பணத்தை வீணாகச் செலவு பண்ணுகிறார் என்ற எண்ணம் ஆச்சிக்கு. பணம் சொத்து எல்லாம் ஆச்சி பேரில் தான் இருக்கு. ஆச்சி கொடுத்துத்தான் செட்டியாருக்குப் பணம் வரவேண்டும். லாபம் இல்லாத தொழிலை, இந்தப் பத்திரிகையை ஏன் நடத்த வேண்டும் என்ற நினைப்பு ஆச்சிக்கு. அதனால்தான் 'திருமகளை' சரியாக, காலம் தவறாமல், கொண்டு வரமுடியவில்லை என்று மருதப்பர் தெரிவித்தார்.

நான் அங்கு வந்து சேர்ந்த சமயம் 'திருமகள்' ஜனவரி இதழ் வெளிவந்திருந்தது பிப்ரவரி இதழ் தயாராக வேண்டும். சில பக்கங்கள் அச்சுக் கோக்கப்பட்டிருந்தன. அவற்றின் 'புரூஃப்' தாள்களை நான் திருத்தினேன். வேறு சில விஷயங்கள் தேர்வு செய்யப்பட்டுக் காத்திருந்தன. அச்சடிக்கத் தாள் வாங்க வேண்டும். அது தள்ளிப் போடப்பட்டு வந்தது.

பத்திரிகைக்குப் பல இடங்களில் இருந்தும் எழுத்தாளர்கள் அனுப்பிய கதைகள் படித்துப் பார்க்கப்படாமலே கட்டுக்கட்டாக இருந்தன. அவ்வெழுத்துப் பிரதிகளைக் கொஞ்சம் கொஞ்சமாகப் படித்து, பத்திரிகையில் வெளியிடலாம் என்று தோன்றிய கதைகளைத் தனியாக எடுத்து வைத்தேன்.

அந்தச் சமயத்தில் அகிலன் புதுக்கோட்டையில் இருந்தார். ஒரு நாள் அவர் வந்து என்னை சந்தித்தார். சிறிது நேரம் மகிழ்ச்சியுடன் பேசிக்கொண்டிருந்தார். க. நாராயணன் என்ற எழுத்தாளரும் புதுக்கோட்டையில் வசித்தார். காகித விற்பனைக் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். காண்டேகர் பாணியில் 'வாழ்க்கைத் தோணி' எனும் நாவலை எழுதிப் பெயர் பெற்றார். 'தாய்நாடு' என்ற சிற்றிதழைச் சிறிது காலம் நடத்தினார். இவை பிற்காலத்திய நிகழ்வுகள்.

'அணிகலம்' பத்திரிகை ஆசிரியர் கதிரேசன் செட்டியாரை ஒருநாள் அவர் வீட்டில் சந்தித்தேன். எனது வளர்ச்சிக்கு உதவிய பத்திரிகைகளில் 'அணிகலம்' இதழும் ஒன்று.

கதிரேசன் செட்டியார் நடுத்தர வயதினர். வெகு எளிமையாகக் காணப்பட்டார். 'அணிகலம்' இதழைத் தரமான சிறுபத்திரிகையாக உருவாக்கிய அவர் அதை ஒரு குடிசைத் தொழிலாகவே நடத்தினார் என்று சொல்லலாம். பத்திரிகை சம்பந்தப்பட்ட அனைத்துப் பணிகளையும் அவர் ஒருவராகவே கவனித்துக் கொண்டார். சிக்கனத்தில் கருத்து உடையவர். தபால் கார்டில் எவ்வளவு அதிகம் எழுத முடியுமோ அவ்வளவு வரிகளை நுணுக்கமாக எழுதுவார்.

'எதையும் வீணடிக்கக் கூடாது. துண்டுக் காகிதத்தைக்கூட ஏதாவது எழுதப் பயன்படுத்த வேண்டும். சில பேர் தபால் கார்டில் இரண்டு வரி மூன்று வரிகள் மட்டும் எழுதி அனுப்புகிறார்கள். அது பெரிய வீணடிப்பு. கார்டுகளை வீணடிப்பது தப்பு' என்று அவர் கூறுவது உண்டு.

ஒருநாள் மாலை வி.ரா. ராஜகோலன் புதுக்கோட்டைக்கு வந்தார். இரவில் என்னோடு தங்கினார். 'திருமகள்' நிலைமை பற்றி விசாரித்தார். நான் உள்ள நிலவரங்களைச் சொன்னேன்.

'திருமகள்' நிலைமை சிரமம் என்று தான் தெரிகிறது. கூடிய வரை சமாளியுங்கள். வேறு வாய்ப்பு ஏதாவது கிட்டுமா என்று பார்க்கலாம்' என்று சொல்லிவிட்டு, மறுநாள் காலையில் அவர் திருச்சி சென்றார்.

வாய்ப்பு சில நாள்களிலேயே தேடி வந்தது.

'சமயம் வருகிறபோது நானே உங்களை சினிமா உலகம் பத்திரிகைக்கு அழைத்துக் கொள்வேன்' என்று முன்னர் கூறியிருந்த ஆசிரியர் பி.எஸ். செட்டியார் என் பெயருக்குத் திருநெல்வேலிக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதை என் அண்ணா புதுக்கோட்டைக்கு அனுப்பி வைத்தார்.

'சினிமா உலகம் பணிகளில் எனக்கு உதவியாக இருந்த ஜீவன் என்ற நண்பர் விலகிக் கொண்டார். நீங்கள் உடனே புறப்பட்டு வந்தால் சினிமா உலகத்துக்கு உதவியாக இருக்கும் என்று பி.எஸ். செட்டியார் எழுதியிருந்தார்.

அந்தக் கடிதத்தை நான் மருதப்பரிடம் காட்டினேன். 'நீங்கள் இதை ஏற்றுக் கொள்வது தான் நல்லது. இங்குள்ள நிலைமைகள் உங்களுக்கே தெரியும். 'திருமகள்' பிப்ரவரி இதழ் எப்ப தயாராகி என்றைக்கு வெளிவரும் என்றே தெரியவில்லை. ஒவ்வொரு மாதமும் இதே நிலைமையும் சிரமங்களும் தான் இருக்கும். அதனாலே நீங்கள் பி.எஸ். செட்டியார் அழைப்பை ஏற்றுக் கோயம்புத்தூர் போங்கள்' என்று அவர் யோசனை கூறினார்.

அதுதான் சரி என்று எனக்கும் பட்டது. ஆகவே, ராசி. சிதம்பரத்திடம் பி.எஸ். செட்டியார் கடிதத்தைக் காட்டி, நான் கோயம்புத்தூர் போகிறேன் என்று தெரிவித்தேன்.

போகப் போகிறீர்களா என்று வருத்தத்துடன் கேட்டார் அவர். 'இப்ப கொஞ்சம் சிரமம்தான். இன்னும் சில மாதங்களில் நிலைமை சரிப்பட்டுவிடும். திருமகளை நல்ல முறையில் கொண்டு வரலாம். இப்ப நீங்க கோவை போவதும் நல்லதுதான். நிலைமைகள் சீரானபின் நான் உங்களை அழைத்துக் கொள்கிறேன்' என்றார். செலவுக்குப் பணம் தந்து வழிஅனுப்பி வைத்தார்.

நல்ல மனிதர் தான். நம்பிக்கையோடு கனவுகள் வளர்த்தார் அவர். ஆயினும் அவரது கனவுகள் மெய்ப்பட வழிபிறக்கவேயில்லை. மார்ச் இறுதியில் பிப்ரவரி இதழ் 'திருமகள்' வந்தது. அதன்பிறகு ஓரிரு இதழ்களே பிரசுரம் பெற்றன. இதழ் வெளிவரக்கூடிய நிலைமை இல்லை எனத் தெரிந்ததும், இராம. மருதப்பர் கதர்க்கடையில் வேலைக்குச் சேர்ந்துவிட்டார். என்ற தகவல் எனக்குக் கிடைத்தது.

மனிதர்கள் ஆசைக் கனவுகள் வளர்த்துச் செயல்பட முனைவதும், காலம் அவற்றைச் சிதைத்து விடுவதும் வாழ்வில் நடந்தவாறே இருக்கின்றன.



# 5

1943 ஜனவரி ஆரம்பத்தில் நான் புதுக்கோட்டை 'திருமகள்' அலுவலகம் வந்து சேர்ந்தேன். பிப்ரவரி இறுதியில் அங்கிருந்து நான் புறப்பட்டுச் செல்ல வேண்டியதாயிற்று. அங்கே நான் தங்கியிருந்த சுமார் இரண்டு மாதங்களில் 'திருமக'ளின் ஒரு இதழ்கூட வெளிவரவில்லையே என்ற வருத்தம் எனக்கு இருந்தது.

ஆயினும், பத்திரிகை அலுவலகம் ஒன்றில் தங்கிப்பயிற்சி பெற முடிந்ததே என்ற திருப்தி எனக்கு ஏற்பட்டது. மேலும், மனிதர் சிலரின் இயல்புகளை ஓரளவு தெரிந்து கொள்வதற்கான வாய்ப்பு கிட்டியதே எனும் மகிழ்ச்சியும் என்னுள் தோன்றியது. இனி கோயம்புத்தூர் என்ற பெரிய நகரத்தில் என் வாழ்க்கை எப்படி அமையுமோ என்றொரு எண்ணமும் தலைகாட்டியது.

கோவை வெரைட்டி ஹால் ரோடில் ஒரு சிறிய வீட்டிலிருந்து 'சினிமா உலகம்' வெளிவந்து கொண்டிருந்தது. அதுவேதான் ஆசிரியர் பி.எஸ். செட்டியார் குடும்பத்துடன் வசித்த வீடாகவும் இருந்தது. அதில் தனியாக இருந்த ஒரு சிறு அறைதான் 'சினிமா உலகம்' அலுவலகம்.

பலவகையான புத்தகங்கள், பழைய பத்திரிகைகளின் பைண்டு செய்யப்பெற்ற தொகுப்புகள் கொண்ட அலமாரிகள், மேஜை, நாற்காலிகள், டைப்ரைட்டிங் மிஷின் முதலியன நிறைந்த நெருக்கடியான இடம் அந்த அறை. அதுவே நான் தங்கும் இடமாகவும் ஆயிற்று.

அருகில் இருந்த உடுப்பி ஓட்டல் ஒன்றில் எனது சாப்பாட்டுக்கும் சிற்றுண்டிக்கும் வேண்டிய ஏற்பாடுகள் செய்தார் செட்டியார்.

பக்கிரிசாமி செட்டியார் என்பது அவருடைய முழுப்பெயர். பத்திரிகை ஆரம்பிப்பதற்கு முன்பு அவர் சென்னையில் உயர்நிலைப்

பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணிபுரிந்து வந்தார். அந்நாள்களில் தமிழாசிரியர்களைத் தமிழ்ப் பண்டிதர் என்று குறிப்பிடுவது வழக்கம்.

சினிமாப் படத்தயாரிப்பு ஒரு தொழிலாக வளர்ந்து வந்த காலம். சினிமாப் படம் தயாரிக்க வேண்டும் என்கிற ஆசையும் வசதியும் பெற்றிருந்தவர்கள் பம்பாய், கல்கத்தா என்று போய் படங்கள் பிடித்து வந்தார்கள். காலப்போக்கில் சென்னையிலேயே தேவையான வசதிகளும் வாய்ப்புகளும் ஏற்படலாயின. ‘என் தமிழர் படமெடுக்கலானார்; எடுத்தார்கள் ஒன்று பத்து நூறாக’ என்று கவிஞர் பாரதிதாசன் பாடியது போல, திரைப்படத் தொழில் வேகம் பெற்று வளர்ந்து கொண்டிருந்தது தமிழ்நாட்டில்.

தமிழ்ப் பண்டிதர் பக்கிரிசாமி செட்டியாரையும் சினிமாத்துறை ஈர்த்தது. அவர் பள்ளிக்கூட வேலையைத் துறந்துவிட்டு, சினிமா உலகத்தில் புகுந்தார். தனது பெயரை நாகரிகமாக பண்டிட் பி.எஸ். செட்டியார் என்று மாற்றிக் கொண்டார். ராஜாதேசிங்கு, காளமேகம் போன்ற சில படங்களின் தயாரிப்பில் பொறுப்பேற்றுச் செயல் புரிந்தார். அந்நாளைய சினிமா வட்டாரத்தில் ஒரு முக்கியப் புள்ளியாகத் தெரிய வந்திருந்தார்.

ஏற்கனவே அவருக்குக் கல்யாணமாகி மனைவியும் மக்களும் இருந்தனர். இருப்பினும், காளமேகம் படத்தயாரிப்பு காலத்தில், அந்தப் படத்தில் துணை நடிகையாக நடித்துக் கொண்டிருந்த ஒரு பெண்ணை துணை மனைவியாக ஏற்று, குடும்பத்தில் ஒருத்தி ஆக்கிக் கொண்டார்.

நான் போய்ச் சேர்ந்த காலத்தில் இரு மனைவியரும், முதல் மனைவியின் மூன்று பெண் குழந்தைகளும், செட்டியாருக்கு மருமகன் உறவுமுறையான இளைஞன் ஒருவனும், செட்டியாரோடு, அந்த வீட்டில் வசித்தார்கள்.

வளர்ந்து கொண்டிருந்த சினிமாத் தொழிலைச் சார்ந்து சினிமாப் பத்திரிகைகளும் தோன்றி வளர்ந்து கொண்டிருந்தன. வட இந்தியாவில் இந்திமொழிப் பத்திரிகைகளும், இங்கிலீஷ் பத்திரிகைகளும் வெளிவந்து கொண்டிருந்தன. இந்தியா முழுவதும் பெயர் பெற்ற சினிமா இதழாக பாபுராவ் பட்டேலின் ‘பிலிம் இந்தியா’ எனும் ஆங்கிலப் பத்திரிகை விளங்கியது. அவருடைய வேகமும் விறுவிறுப்பும் நிறைந்த இங்கிலீஷ் நடையும், முரட்டுக் கிண்டலும், கேள்விகளுக்கு அவர் அளித்த தடாலடிப் பதில்களும்,

சூடும் சுவையும் கலந்த திரைப்பட விமர்சனங்களும் பாபுராவ் பட்டேலுக்கும், அவருடைய 'பிலிமிந்தியா' இதழுக்கும் பரபரப்பான கவனிப்பைப் பெற்றுத் தந்தன.

பாபுராவ் பட்டேல் பாணியில் தமிழ்நாட்டிலும் சில ஆங்கில இதழ்கள் தோன்றின; ஒரு மாதிரியாக வளர்ந்து கொண்டிருந்தன. இவற்றை எல்லாம் பார்த்த சினிமா உலகப் பிரபலஸ்தர் பி.எஸ். செட்டியாருக்கும் தமிழில் சினிமாப் பத்திரிகை நடத்தலாமே என்ற ஒரு உந்துதல் ஏற்பட்டது. ஆகவே, 'சினிமா உலகம்' - 'சினிமா ஓர்ல்ட்' - என்ற மாதம் இருமுறை வெளிவரும் இதழை ஆரம்பித்து நடத்தலானார்.

வெகுகாலம் வரை இதழ்ப் பிரதியின் விலை அரையணாவாகத் தான் இருந்தது. சாதாரண நியூஸ் பிரின்ட் தாளில், ரோஸ் நிறக்காகித அட்டையுடன் 'சினிமா உலகம்' பத்திரிகை வெளிவந்து கொண்டிருந்தது. அட்டையிலும், உள்ளேயும் திரைப்படக் காட்சிகள், முக்கிய நடிகர்கள் படங்கள் அச்சிடப்படும். பிற்காலத்திய சினிமா சஞ்சிகைகளில் சகஜமாக இடம்பெற்ற மினுமினுப்பான அட்டை, நடிகையரின் கவர்ச்சிப் படங்கள், நடிக நடிகையர் பேட்டி, அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகள் முதலிய எதுவுமே 'சினிமா உலகம்' பத்திரிகையில் தலைகாட்டியதில்லை.

'தமிழின் முதல் சினிமாப் பத்திரிகை' என்ற பெருமையான அறிவிப்பு இதழ்தோறும் எடுப்பாக இடம் பெற்றிருக்கும். ஸ்டுடியோச் செய்திகள், எங்கே என்ன படம் தயாராகிறது எனும் தகவல், தமிழ் இந்தி ஆங்கிலப் படங்கள் பற்றிய சுவாரசியமான செய்தித் துணுக்குகள், பட விமர்சனங்கள், வாசகர்களின் கேள்விகளுக்கான பதில்கள் முதலிய அம்சங்கள் காணப்படும்.

'சினிமா உலகம்' இதழுக்குத் தனிச்சிறப்பு பெற்றுத் தந்த முக்கிய விஷயம், அந்தப் பத்திரிகைக்காக அவ்வப்போது உழைத்த துணை ஆசிரியர்களின் எழுத்தாற்றல் ஆகும். சினிமாத் துறையில் வாய்ப்புகளை நாடி வந்து, பி.எஸ். செட்டியாரின் உதவியைக் கோரியவர்கள் 'சினிமா உலகம்' பத்திரிகையின் வளர்ச்சிக்காகத் தங்கள் உழைப்பை உதவியிருந்தார்கள்.

திரைப்பட வசனகர்த்தாவாகப் புகழ்பெற்ற இளங்கோவன் (ம.க. தணிகாசலம்) ஒரு சமயம் 'சினிமா உலகம்' இதழுக்காக உழைத்திருந்தார். மகாகவி பாரதியாருக்குப் பின் வந்த கவிஞர்களில் தனித்தன்மை பெற்றிருந்தவர்களில் ஒருவரான ச.து.சு. யோகியார்

(ச.து. சுப்ரமணிய யோகி) சிறிது காலம் அந்தப் பத்திரிகைக்குத் தனது எழுத்துக்கள் மூலம் சிறப்புச் சேர்த்திருந்தார். கவிஞர் பாரதிதாசனும் ஒரு காலகட்டத்தில் அந்தப் பத்திரிகைக்காக உழைத்துள்ளார்.

இவற்றால் எல்லாம் 'சினிமா உலகம்' தனி மதிப்பும் ஒரு தரமும் பெற்று வளர்ந்திருந்தது. வெகுகாலம் சென்னையிலேயே வளர்ந்த அது, யுத்தகால நெருக்கடி காரணமாக, கோயம்புத்தூருக்கு மாற்றப்பட்டிருந்தது.

அந்நாள்களில் கோவை, சென்னைக்கு அடுத்த முக்கிய சினிமாத் தயாரிப்புக் கேந்திரமாக விளங்கியது. பல ஸ்டுடியோக்களும் படத்தயாரிப்பு நிறுவனங்களும் அங்கு செயலாற்றிவந்தன.

நான் அங்கு போய்ச் சேர்ந்த காலத்தில் கோவை நகரம் பரபரப்பு மிகுந்திராத, நெருக்கடிகள் சேர்ந்திராத, அமைதி நகரமாகத்தான் இருந்தது. வெரைட்டி ஹால் ரோடு அமைதியும் அழகும் நிலவிய பிரதேசமாக விளங்கியது. வீடுகள், கடைகள் நெருக்கமாய் மிகுதியாய் இருந்ததில்லை, நெடுகிலும். ஆர்.எஸ். புரம் என்கிற ரத்தின சபாபதிபுரமும் தனித்த பகுதி போல் அமைதிப் பிரதேசமாக இருந்தது. ஜனப்பெருக்கமும் போக்குவரத்து வாகனங்களின் நெரிசலும் இல்லாதிருந்த நாள்கள் அவை.

யுத்தகால பீதிதான் அவ்வப்போது பரபரப்பு ஏற்படுத்தும். அனைத்து முக்கிய நகரங்களிலும், விமானத் தாக்குதலை எதிர்பார்த்து முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன. ஏ.ஆர்.பி. வார்டன்கள் (ஏர் ரெய்ட் ப்ரிகாஷன்) எங்கும் எப்போதும் தென்படுவர். திடீரென்று அபாயச் சங்கு நெடுங்குரலில் அலறும். உடனே, ரோடுகளில் போகிற வாகனங்கள் பலவும் நின்றுவிட வேண்டும். நடந்து போகிறவர்கள் ஓரங்களுக்கு ஒதுங்கி எங்காவது பதுங்கி நிற்க வேண்டும். அரை மணி நேரத்துக்குப் பிறகு மீண்டும் சங்கு அலறும், அபாயம் நீங்கிவிட்டது என்று அறிவிப்பது போல. பழையபடி அனைத்து வாகனங்களும் இயங்கும்; ஜனங்கள் நடமாடத் துவங்குவர்.

அவசர அலுவலாக எங்கேயாவது போகிறவர்களுக்கு ஒத்திகை நாடகம் தொல்லையாகத்தான் தோன்றும். தேவையில்லாத எச்சரிக்கைப் பயிற்சி என்றுகூட அநேகர் எண்ணினர். யுத்தகாலத்தை நினைவூட்டும் விதத்தில் வெள்ளைக்கார ராணுவ வீரர்கள் நெடுகிலும் தென்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

நடுரோட்டில் விறைப்பாக நடந்து போவார்கள். அடிக்கடி ஆங்கிலோ இந்தியப் பெண்களோடும், ராணுவத்தில் பெண்கள் பிரிவில் சேர்ந்திருந்த பெண்களோடும் (அவர்கள் ராணுவச் சீருடை அணிந்திருப்பார்கள்) உல்லாசமாகச் சுற்றித் திரிவதையும் காண முடிந்தது.

அக்காலத்தில் கோயம்புத்தூரைக் கலவரப்படுத்திக் கொண்டிருந்த மற்றொரு விஷயம் பிளேக் நோய். எலிகளால் இந்நோய் பரவுவதாகக் கண்டறிந்திருந்தார்கள். எலிகளின் உடலில் ஒருவகைக் கிருமிகள் புகுந்து வளரும். ஒரு கட்டத்தில் கிருமிகளால் தாக்குண்ட எலி கிறுகிறுவெனச் சுற்றி, தொப்பெனக் கீழே விழுந்து சுழலும்; சாகும். அந்த எலியிலிருந்து பிளேக் கிருமிகள் வெளிப்பட்டு மனிதர்களைப் பற்றிக் கொள்ளும். முதலில் தேகத்தில் கட்டி தோன்றும். பிளேக் கட்டி என்று பெயர். அடுத்து வேகமாக ஜுரம் ஏற்படும். பலவித பாதிப்புகள் உண்டாகும். சிகிச்சைகள் பலனளியா, நோயால் பீடிக்கப்பட்டவர்கள் இறந்து போவார்கள்.

இதனால் ‘பிளேக்’ என்றாலே மனிதர்கள் வெகுவாக அஞ்சினார்கள். ஒரு வீட்டில் உயரே இருந்து எலி சுழன்று விழுந்து தரையில் சுற்றி செத்துப் போவதைப் பார்த்த உடனேயே, அந்த வீட்டில் இருக்கும் அனைவரும் பயந்து அலறி வெளியே தெருவுக்கு வந்துவிடுவார்கள். சுகாதாரப் பிரிவைச் சேர்ந்த அதிகாரிகளும் பணியாளர்களும் உடனடியாக வந்து, வீடு நெடுகிலும் உரிய மருந்தைப் பாய்ச்சுவார்கள். அதற்கான கருவி மூலம் மருந்தைத் தெளித்து விட்டு (மருந்தடித்து) சன்னல்கள் கதவுகள் அனைத்தையும் சிக்கென அடைத்து சீல் வைத்து விடுவார்கள். அதன் பிறகு பலநாள்கள் வரை அந்த வீட்டில் மனிதர்கள் வசிக்கக் கூடாது.

விஷயம் தெரிந்தவர்கள் அதன்பிறகு கூட அப்படிப்பட்ட வீடுகளில் வசிப்பதற்காகச் செல்ல மாட்டார்கள். இவ்வாறு அடைத்துக் கிடந்த வீடுகள் கோவையின் ஒவ்வொரு தெருவிலும் தென்பட்டன.

வெரைட்டி ஹால் ரோடு - அந்த ரோடில் வெரைட்டி ஹால் என்ற பிரசித்தி பெற்ற சினிமாத் தியேட்டர் இருந்தது. அதனால் அதுக்கு அந்தப் பெயர்கூட அடிக்கடி ‘பிளேக்’ அனுபவம் பெற்றது. ‘சினிமா உலகம்’ அலுவலகம் இருந்த வீட்டுக்குச் சில வீடுகள் தள்ளியிருந்த ஒரு வீட்டில் ஒருநாள் எலி செத்து விழுந்தது. உடனே பீதியும் அலறலும் மனிதர் வெளியேற்றமும் வந்தது. உரிய அதிகாரிகள் வந்து மருந்து தெளித்து, புகை மூட்டம் போட்டு,

வீட்டை அடைத்துப் பூட்டி விட்டுப் போனார்கள். பிறகு நீண்ட காலம் அந்த வீடு பூட்டப்பட்டே கிடந்தது.

கோவையிலும் சுற்று வட்டாரத்து ஊர்களிலும் அந்நாள்களில் பிளேக் நோய் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தது. அரசு உரிய நடவடிக்கைகள் எடுத்து அந்த நோயை ஒழித்துக் கட்டியது. காலப் போக்கில் பிளேக் நோய் என்றால் என்ன என்பதே தெரியாமல் போயிற்று.

பிளேக் நோய் பரவியிருந்த காலத்தில், இதர பல அசௌகரியங்களையும் மனிதர்கள் அனுபவிக்க வேண்டியிருந்தது. சான்றாக, வெளியூர்களுக்குப் பார்சல்கள் அனுப்ப வேண்டும் என்றால், ரயில் நிலையத்துக்குப் போய் உடனடியாக அவற்றை உரியவர்களிடம் சேர்ப்பித்து, ரசீது பெற்று வந்து விட முடியாது. பார்சல் அனுப்ப வேண்டிய பொதியை அல்லது மூட்டையை அல்லது பெட்டியை ஒரு மணி நேரம் வரை நல்ல வெயிலில் காயவைக்க வேண்டும். அவை நன்கு சூடேறப் பெற்றால், அவற்றில் கண்ணுக்குப் புலனாகாமல் இருக்கக்கூடிய கிருமிகள் செத்துப் போகும். கிருமி ஒழிப்புக்காகத் தான் இந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கை.

'சினிமா உலகம்' பத்திரிகைக் கட்டுகளை வெளியூர் விற்பனையாளர்களுக்கு ரயில்வே பார்சல் மூலம் அனுப்புகிற போது, கட்டுகளை வெயிலில் காயப்போட்டு விட்டு - அரைமணிக்குப் பிறகு அவற்றைத் திருப்பி, மறுபுறம் வெயிலில் படும்படி வைக்க வேண்டும் காத்திருக்க வேண்டும். இவ்விதம் ஒரு மணி நேரம் காத்திருப்பது அலுப்பேற்படுத்துகிற வெட்டி வேலையாகத் தான் தோன்றும்.

வீணாகக் காத்திருக்க வேண்டிய வெட்டி வேலை ஏ.ஆர்.பி. சங்கு ஊதப்படுகிறபோதும் கட்டாய நிகழ்வாகிவிடும். தபால் பீசுக்கோ, ரயில் நிலையத்துக்கோ, அல்லது வேறு எங்காவது அலுவலாகப் போகிறபோது, திடீரென்று அபாயச் சங்கு அலறினால், உடனடியாக ஓடி ரோடோரத்துக் கடைகள் பக்கமோ வீடுகளின் அருகிலோ பம்மி நிற்க வேண்டும். ஏ.ஆர்.பி. வார்டன்கள் விசில் ஊதிக் கொண்டு அங்குமிங்கும் அலைவார்கள். வேடிக்கையாக இருக்கும்.

வெரைட்டி ஹால் ரோடில் நடக்கிறபோது, சங்கு ஊதப்பட்டால், அங்கே இருந்த ஒரு டீ ஓட்டலில் புகுந்து கொள்ள வசதியாக இருக்கும். நாகரிகமான பெரிய டீக்கடை அது. கூட்டம்

இராது. அமைதியாக அமர்ந்து டீ குடித்தபடி எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் காத்திருக்கலாம். தெரு நிகழ்ச்சிகளை வேடிக்கை பார்க்கவும் முடியும்.

வெரைட்டி ஹால் ரோடில் குறிப்பிடத்தகுந்த இன்னொரு இடமும் இருந்தது. பிரியாணிக் கடை. பிரியாணிக் கடையை பொதுவாக முஸ்லிம்கள் நடத்துவது வழக்கம். இந்தக் கடை பிராமணர் ஒருவரால் நடத்தப்பட்டு வந்தது. பிராமணாள் பிரியாணிக் கடை! சுத்தமாக இருந்ததுடன் அங்கு பிரியாணியும் இதர உணவுப் பொருள்களும் ருசியாக இருந்தன என்று அனுபவஸ்தர்கள் புகழ்ந்து பேசினார்கள். அதனால் அந்தக் கடைக்கு நல்ல வியாபாரம். எப்பவும் கூட்டம் மொய்க்கும் இடமாக விளங்கியது அது.

'பிராமணன் பிரியாணிக் கடை நடத்துகிறானே! ஆச்சர்யமாக இருக்குதே!' என்று சிலர் சொல்வது உண்டு. இதிலென்ன அதிசயம்! இந்தக் காலத்தில் பிராமணர்கள் நடத்தும் செருப்புக் கடை கூட இருக்கிறது என்று விஷயம் தெரிந்தவர்கள் விளக்கம் கூறுவதும் உண்டு.

கோவையில் 'கொங்குநாடு' என்றொரு பத்திரிகை சிறு அளவில் நடந்து கொண்டிருந்தது. செய்திப் பத்திரிகை. வேறு சில இதழ்களும் வெளிவந்தன. கவனிப்புப் பெறாதவை அவை. புதிதாக 'பேசும் படம்' என்ற சினிமா இதழ், ராம்நாத் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டிருந்தது. பெரிய சைஸ் பத்திரிகை. வழவழப்பான அட்டை வசீகரமான நடிகையின் படம் அட்டையில். இதர பல கவர்ச்சி அம்சங்களும் கொண்டு வியாபார வெற்றியாக வளர்ந்து கொண்டிருந்தது.

சேலத்திலும் சென்னையிலும் சினிமாவுக்கென்று வேறு சில இதழ்கள் தோன்றியிருந்தன. சாதாரணத் தோற்றம் கொண்டவைதான். சினிமாத் துறையினரின் ஆதரவு பெற்று, வளர்வதற்காகப் போட்டி போட்டுக் கொண்டிருந்தன.

இருப்பினும் 'சினிமா உலகம்' இதழுக்குத் தனி மதிப்பு இருந்தது. இந்தச் சமயத்தில் அதன் விலை இரண்டணா ஆகியிருந்தது. ஸ்டுடியோச் செய்திகள், திரைப்படத் தகவல்கள், பட விமர்சனம், கேள்வி பதில் முதலிய அம்சங்கள் போக, கதை கட்டுரை கவிதைகளும் அதில் இடம் பெறுவது வழக்கம். படிப்பதற்கு சுவாரசியமான விஷயங்கள் அதில் அதிகமிருந்தன.

வருடம் தோறும் 'சினிமா உலகம்' இரண்டு மூன்று சிறப்பு மலர்கள் வெளியிடுவது உண்டு. தீபாவளி மலர், புதுவருட மலர், தமிழ்ப்புத்தாண்டு (சித்திரை) மலர் என்று. அதிகப் பக்கங்களுடன் முக்கிய எழுத்தாளர்களின் கதை கட்டுரைகளுடன் மலர்கள் வெளிவரும். விளம்பரங்களும் அதிகம் இருக்கும்.

மலர்கள் வெளியிடுவது விளம்பரங்கள் மூலம் பணவருவாய் பெறுவதற்காகத்தான். மலர்களுக்கு விளம்பரங்கள் சேகரிப்பதற்காகச் செட்டியார் சேலம், திருச்சி, சென்னை என்று சுற்றிக் கொண்டேயிருப்பார். அப்போது அங்கே உள்ள எழுத்தாளர்களுடன் தொடர்புகொண்டு விஷயங்கள் பெற்றும் வருவார். அதனால், விளம்பர பலத்துடன் விஷயகனம் கொண்டதாகவும் 'சினிமா உலகம்' மலர்கள் அமைந்திருந்தன. ஆயினும் சிறப்பு மலர்களை விசேஷமான சித்திரங்கள் அழகுபடுத்துவதில்லை.

கதை கவிதைகளுக்குப் படங்கள், பொதுவான சினிமா சம்பந்தப்பட்ட படங்கள் இணைக்க வேண்டுமென்றால் பணம் தேவைப்படும். செட்டியார் பத்திரிகையின் வளர்ச்சியில் ஆர்வம் கொண்டிருக்கவில்லை. ஒவ்வொரு தடவையும் ஐந்நூறு பிரதிகள் அச்சிட்டாலே போதும். விற்பனையை அதிகப்படுத்தலாம் என்று அதிகமான பிரதிகள் அச்சிடுவதானால் செலவுகள் மிகும். தாள் விலை, அச்சுக்கூலி, பத்திரிகைகளை அனுப்புகிற செலவு என்று எல்லாமே அதிகப்படியாகிவிடும். விளம்பர வருவாய் இப்போது திருப்திகரமாக இருக்கிறது; பத்திரிகைக்கு நல்ல பெயரும் இருக்கிறது; இந்த நிலையில் செலவுகளைக் கூட்டி நஷ்டத்தை உண்டாக்குவானேன் என்பது அவருடைய எண்ணம். அதை அவர் மாற்றிக் கொள்ள விரும்பவில்லை.

சில மாதங்களில், எனது உழைப்பையும் ஈடுபாட்டையும் உணர்ந்து மகிழ்ச்சி அடைந்த செட்டியார், ஆசிரியர் பி.எஸ். செட்டியார் என்று அச்சிடும் இடத்தில் அதை அடுத்து, துணை ஆசிரியர் வல்லிக்கண்ணன் என்று அவராகவே அச்சிடச் செய்தார்.

பொருளாதார பலம் பெற்றிராது, சிறு அளவில் நடைபெறும் பத்திரிகைகளில் உதவி ஆசிரியர் - துணை ஆசிரியர் என்ற பெயரில் உழைக்கிறவர்களை பத்திரிகை சம்பந்தப்பட்ட அனைத்து வேலைகளையும் கவனித்துக் கொள்கிறவர்களாகத்தான் இருப்பார்கள். இதழுக்குத் தேவையான பல்வேறு விஷயங்களையும் ('மேட்டர்') எழுதுவது, தபாலில் வரும் விஷயங்களைப் பரிசீலித்துத் தகுந்தவைகளை இணைத்துக் கொள்வது,

அச்சாபீசுக்குப் போவது, புரூஃப் பார்த்துத் திருத்திக் கொடுப்பது, தபால்களைக் கவனிப்பது, இதழ் தயாரானதும் பிரதிகளைப் பல இடங்களுக்கும் அனுப்புவதற்குத் தேவையான சகல பணிகளையும் செய்வது - இப்படி ஏகப்பட்ட வேலைகள் செய்தாக வேண்டும்.

'சினிமா உலகம்' பத்திரிகை சம்பந்தப்பட்ட கணக்குகளை எழுதுவதற்கு ஓர் அன்பர் (தொழில் நிறுவனம் ஒன்றில் பணி புரிந்தவர்) உதவிக் கொண்டிருந்தார். அதற்காக அவர் ஏதோ சன்மானம் பெற்று வந்தார். ஆங்கிலத்தில் கடிதங்கள் எழுதி டைப் செய்து உரிய இடங்களுக்கு அவற்றை அனுப்புகிற பணியை வேறு ஒருவர் பகுதி நேர வேலையாக ஏற்றுச் செய்து கொண்டிருந்தார்.

நான் வந்த பிறகு, அவ்வேலைகளையும் நானே செய்ய முடியும் என்பதால் செட்டியார் அவ்விரு அன்பர்களையும் வேண்டாம் என்று நிறுத்திவிட்டு, அப்பொறுப்புகளையும் என்னிடம் ஒப்படைத்தார்.

எனக்குச் சம்பளம் என்று எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை சாப்பாடு ஓட்டலில், தங்குமிடம் வீட்டில் அவசியச் செலவுக்குத் தேவைப்படுகிற பணத்தை அவ்வப்போது கேட்டு வாங்கிக் கொள்ளலாம் என்ற நிலைமை. அது திருப்திகரமாக இருந்தது எனக்கு.

ஸ்டுடியோக்களுக்குப் போவது, பட உலகம் சம்பந்தப்பட்ட நபர்களைச் சந்திப்பது, விழா, விசேஷம் என வரும் நிகழ்ச்சிகளுக்குச் செல்வது முதலியவற்றைச் செட்டியாரே கவனித்துக் கொண்டார். இவ்வட்டாரங்களில் நான் அறிமுகமாக வேண்டும், பலரையும் பழக்கம் பிடித்துக் கொண்டு முன்னேற வேண்டும் என்ற ஆசை எனக்கு இருந்ததில்லை. படப்பிடிப்பைப் பார்க்க வேண்டும், படத்தில் நடிக்கிற நடிகையர் நடிகர்களைக் காண வேண்டும் என்ற ஆசையும் எனக்கு இருந்ததில்லை.

அப்படி விருப்பம் கொண்டு தெரிவித்திருந்தாலும், அவை நிறைவேறுவதற்கு ஆசிரியர் உதவியிருக்கமாட்டார் என்றே எனக்குத் தோன்றியது.

பத்திரிகை தொடர்பான சிறுசிறு வேலைகளையும், வெளி உலக அலுவல்கள் தொடர்புகளையும், செட்டியாரின் உறவினரான எஸ்.பி. கிருஷ்ணன் என்ற இளைஞர் கவனித்துக் கொண்டார். அவரும் அக்குடும்பத்தில் ஒருவராக வசித்து வந்தார். அவர் 'சினிமா உலகம்' பத்திரிகை மானேஜர் என்று சொல்லிக்கொண்டு சுயமுனைப்பில் பல வேலைகள் செய்து மகிழ்ந்தார்.

இந்த சந்தர்ப்பத்தில் டி.கே.எஸ். சகோதரர்களின் நாடக சபை பாலக்காடு ஊரில் முகாமிட்டு நாடகங்கள் நடத்திக் கொண்டிருந்தது. அந்த ஊருக்குப் போய் 'நாடக நால்'வரைப் பேட்டி காணவும், பத்திரிகைக்கு விளம்பரம் பெற்று வரவும் செட்டியார் என்னையும் எஸ்.பி. கிருஷ்ணனையும் அனுப்பினார் அதன் விளைவாக டி.கே. சண்முகமும் அவருடைய மூத்த சகோதரர்களான டி.கே. சங்கரன், டி.கே. முத்துசாமி மற்றும் இளைய சகோதரர் டி.கே. பகவதி ஆகியோர் எனக்கு அறிமுகமாயினர். பின்னர் நல்ல நண்பர்களானார்கள்.

கம்பெனி நடிகர்களாக டி.வி. நாராயணசாமி, எஸ்.வி. சுப்பையா முதலியோரும் பிரியமுடன் பேசிப் பழகினார்கள். கடிதத் தொடர்பு கொண்டு நட்பை வளர்த்தார்கள்.

கம்பெனியில் விருந்தினர்களாக இரண்டு நாள்கள் தங்கினோம். நாடகங்கள் பார்த்தோம். நான் திருநெல்வேலியிலிருந்து அவர்களுக்கு எழுதிய கடிதத்தை டி.கே. சண்முகம் நினைவுகூர்ந்தார். நீங்கள் கம்பெனியில் தங்கி, நேரடி அனுபவம் பெற்று, நாடகங்கள் எழுத ஆசைப்பட்டது நல்ல விருப்பம்தான். ஆனால் நாங்கள் வழக்கமான நாடகங்களையே மேடை ஏற்றிக் கொண்டிருக்கிறோம். வளர்கிற திறமையுள்ள ஒரு எழுத்தாளரை நம்ம கம்பெனியில் சேர்த்துக் கொண்டு என்ன வேலை கொடுக்க முடியும் என்று பெரிய அண்ணாச்சி (டி.கே. சங்கரன்) சொன்னாங்க. அதனாலே தான் நான் உங்களுக்குக் கடிதம் எழுதினேன் என்று அவர் தன்னிலை விளக்கம் தந்தார்.

நாடகக் கலைஞர் டி.கே. சண்முகம் சிறந்த நடிகர். நன்கு பாடக்கூடியவர். நல்ல இலக்கிய ரசிகர். கட்டுரைகள் எழுதுவதிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். 'மணிக்கொடி' பத்திரிகை, பாரதிதாசனின் 'சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம்', சக்தி, கலாமோகினி போன்ற ஆழ்ந்த இலக்கியப் பத்திரிகைகளிலும், ஆனந்தவிகடன், கல்கி முதலிய பத்திரிகைகளிலும் ஆர்வம் கொண்டு, படிப்பதில் விசேஷ நாட்டமும் பெற்று, தனது ரசனையை வளர்த்து வந்தார். வளர்ந்து வந்த திராவிட இயக்கக் கொள்கைகளிலும், அவர்களின் எழுத்துக்களிலும் அக்கறை காட்டி வந்தார். கம்யூனிஸ்ட் கட்சி இலக்கியங்களிலும் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார். நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் மனிதநேயமும் நல்ல உள்ளமும் பெற்றிருந்த கலைஞர் அவர்.

'சினிமா உலகம்' பணிகளைக் கவனித்து வந்ததுடன், நான் என் விருப்பம்போல் கதைகள் கட்டுரைகள் கடிதங்கள் எழுதுவதற்கும்

காலமும் வசதியும் இருந்தன. எப்போதும்போல் நவசக்தி, கலாமோகினி இதழ்களுக்கு நான் எழுதிக் கொண்டிருந்தேன்.

அச்சந்தர்ப்பத்தில் தான், திருச்சிக்கு அப்பால் 28 மைல்கள் தள்ளியிருந்த சிற்றூரான துறையூரில் இருந்து, மறுமலர்ச்சி இலக்கிய மாதம் இருமுறை இதழாக 'கிராம ஊழியன்' என்ற பத்திரிகை வரத் தொடங்கியது. 1943 ஆகஸ்ட் மாதம் முதல் அதுக்கும் கதைகள் எழுதி அனுப்பலானேன்.

அக்காலகட்டத்தில் பத்திரிகைப் பிரசுரத்துறையில் ஒரு புது உதயம் ஏற்பட்டது. யுத்தகால நெருக்கடி காரணமாகக் காகிதக் கட்டுப்பாட்டுச் சட்டம் நடைமுறையில் இருந்தது. அதனால் புதிய பத்திரிகைகள் ஆரம்பிக்கப்படுவதற்கு அரசாங்கம் அனுமதி மறுத்து வந்தது.

பத்திரிகை ஆரம்பித்து நடத்துவதற்கு அரசு அனுமதி அவசியம் தேவை. அரசு அனுமதி வழங்க உறுதியாக மறுத்துக் கொண்டிருந்ததால், 'சட்டத்தில் ஓட்டை கண்டு' புதிய முறையில் பத்திரிகை போன்ற வெளியீடு கொண்டு வரும் யுக்தியை 'உலகம் சுற்றும் தமிழன்' எனப் பெயர் பெற்ற ஏ.கே. செட்டியார் கண்டார். 'குமரி மலர்' என்ற பெயரில் 'மாதம் ஒரு புத்தகத்தை, அவ' வெளியிடலானார்.

ஏ.கே. செட்டியார் உலக நாடுகள் பலவற்றிலும் சுற்றி அனுபவம் பெற்றவர். தனது பயணங்கள் குறித்து சுவாரசியமான கட்டுரைகளை பல பத்திரிகைகளிலும் எழுதி வந்தார். அவை 'உலகம் சுற்றும் தமிழன்' என்ற புத்தகமாக சக்தி வெளியீடாகப் பிரசுரம் பெற்றன. அவரே ஒரு பத்திரிகை நடத்தத் திட்டமிட்ட போது தான் தடை குறுக்கிட்டது. ஆகவே அவர், பத்திரிகை அல்லாத ஆயினும் பத்திரிகையின் அம்சங்கள் பலவும் கொண்ட - 'மாதம் ஒரு புத்தகம்' ஆன 'குமரி மலர்' வெளியீட்டைப் பிரசுரித்துப் புதுவழி காட்டினார். அது தரமான சிறப்பிதழாக விளங்கியது.

பின்னர், ஏ.கே. செட்டியார் காட்டிய வழியில் தொடர்ந்து அநேகர் 'மாதம் ஒரு புத்தகம்' வெளியிடுவதில் முனைந்தார்கள். கதை மலர், தமிழ் மலர், புதுமலர், கதைக் கொடி என்றெல்லாம் பலப்பல பெயர்களில் வெளியீடுகள் கொண்டு வரலானார்கள். சில தரமான தொகுப்புகளாக அமைந்திருந்தன. பல சாதாரண வெளியீடுகளாகவே இருந்தன.

சிறிது காலத்திலேயே அவை ஓய்ந்தும் போயின. 'குமரி மலர்' நீண்டகாலம் வெற்றிகரமாக வெளிவந்து, நிலையான பெயர் பெற்றுத் திகழ்ந்தது.

இவ்வாறு காலம் போய்க்கொண்டிருக்கையில் என்னுள் அதிருப்தி தோன்றியது. மனஉறுத்தலாக அது வளர்ந்தது. நான் இங்கே வந்து ஆறு மாதங்கள் ஆகின்றன. தடம் விழுந்த நொடியில் வண்டி தள்ளாடி நகர்வதுபோல் தான் இருந்தது வாழ்க்கை. முன்னேற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் வாய்ப்பே இல்லை என்று நிச்சயமாகப்பட்டது. எழுத்துலகில் மேலும் வளர்வதற்காக நான் இங்கிருந்து போக வேண்டியதுதான் என்றது மனம்.

செட்டியாரிடம் இதை நேரடியாகச் சொல்லத் தயக்கம். அவர் பரிவோடும் பாசத்தோடும் பழகி வந்தார். குடும்பத்தாரும் என்னிடம் அளவிலா அன்பு காட்டினார்கள். இருப்பினும் எனது எதிர்காலத்தைக் கருத்தில்கொண்டு நான் வெளியேற வேண்டியது அவசியம் என்று மனக்குரல் திடமாகக் கூறிவந்தது.

எனவே எனது ஆசைகளையும், திருப்தி தராத நிலையையும் விவரித்து ஒரு நீண்ட கடிதம் எழுதினேன். சமயம் பார்த்து அதை செட்டியாரிடம் அளித்தேன். அதைப் படித்த அவர் யோசனையில் ஆழ்ந்தார். சாயங்காலம் அமைதியாகப் பேசலாம் என்று சொல்லிவிட்டு வழக்கமான அலுவல்களைக் கவனிக்க வெளியே போனார்.

அன்று மாலை என்னை அழைத்துக் கொண்டு செட்டியார் வெளியே புறப்பட்டார். வழியில் ஓர் ஓட்டலில் சிற்றுண்டி சாப்பிட்டோம். ஊரில் ஓர் ஓரமாக இருந்த வாலாங்குளம் என்கிற பெரிய குளத்தின் நீண்ட அகலமாக கரைக்கு இட்டுச் சென்றார். என்னுடைய எண்ணங்களையும் விருப்பத்தையும் மனம் திறந்து எழுதித் தெரிவித்ததற்காகப் பாராட்டினார். இலக்கியப் பத்திரிகை ஒன்றும் நடத்தும் எண்ணம் தனக்கு நெடுநாட்களாக உண்டு என்றார். கவிஞர் பாரதிதாசன் தன்னோடிருந்து சினிமா உலகத்துக்குத் துணை புரிந்த நாள்களில், அவருக்காக 'நிலா' என்ற பெயரில் ஓர் இதழ் தொடங்க முன்னேற்பாடுகள் செய்ததையும், அத்திட்டம் நிறைவேறாமல் போனதையும் விவரித்தார்.

'நிலாவுக்காகச் செய்த பிளாக்குகள் எல்லாம் இருக்கின்றன. இப்போது குமரி மலர் மாதிரி நிலா என்று மாதம் ஒரு புத்தகம் கொண்டு வருவோம். அத்துடன் உங்கள் எழுத்துக்களைப் புத்தகமாக வெளியிடலாம். அதற்கான விளம்பரத்தை சினிமா உலகம் வருகிற இதழிலேயே அச்சிடலாம் என்று கூறினார்.

வீடு திரும்பியதும் செட்டியார், பழைய பிளாக்குக் குவியல்களில் தேடி எடுத்து நிலா சம்பந்தமான பிளாக்குகளைச் சேகரித்தார். அவற்றை என்னிடம் காட்டினார். 'பொற்காலப் பிரசுரலாயம்' என்ற தலைப்பில் வெளிவர இருக்கும் புதிய புதிய புத்தகங்கள் என்று சில நூல்களின் பெயர்களை எழுதினார். பி.எஸ். செட்டியார் எழுதிய ராஜா தேசிங்கு நாடகம், மற்றும் இரண்டு நூல்கள், இவற்றுடன் இளங்கோவன் கதைகள், வல்லிக் கண்ணன் கதைகள் என்பவற்றையும் சேர்த்தார்.

அந்த விளம்பரம் சினிமா உலகம் இதழில் வெளிவந்தது.

இளங்கோவன் (ம.க. தணிகாசலம்) எழுத்தாளர் புதுமைப்பித்தனுடன் 'தினமணி'யில் பணியாற்றியவர். நல்ல சிறுகதைகள் எழுதியிருந்தார். ஆஸ்கார் ஒயில்டு எழுத்துக்களில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இலக்கியவாதி. அவருடைய கதைகளிலும் கட்டுரைகளிலும் ஒயில்டு எழுத்துக்களின் - தத்துவங்களின் சாயை தென்படும். 'தினமணி' 1937ஆம் வருட ஆண்டுமலரில் இளங்கோவன் 'சாவே வா' என்றொரு அருமையான கட்டுரை எழுதியிருந்தார். ஆழ்ந்த சிந்தனைகளைக் கொண்டிருந்தது அது.

அப்புறம் இளங்கோவன் சினிமாத் துறையில் ஈடுபட்டு, திரைப்பட வசனத்தில் புதுமைகளும் இலக்கிய நயமும் சேர்த்து, புகழ்பெற்றார். பி.எஸ். செட்டியாருக்கு நல்ல நண்பர். இளங்கோவனின் எழுத்துக்கள் அதுவரை புத்தகமாக வெளிவந்திருக்கவில்லை. அவற்றை வெளியிட வேண்டும் என்ற ஆசை செட்டியாருக்கு இருந்தது. இளங்கோவனின் தயவும் உதவியும் அவருக்குத் தேவைப்பட்டன. தனது எழுத்துக்களை நூல் வடிவில் வெளியிடுவதற்கான அனுமதியை இளங்கோவன் செட்டியாருக்கு வழங்கினார்.

மனிதர்களது ஆசைகள் கனவுகள் எல்லாம் செயல்வடிவம் பெற்றுவிடக் கூடும் என்ற சாத்தியப்பாடு வாழ்க்கையில் இருக்குமானால், எத்தனை எத்தனையோ அற்புதங்களும் மகத்தான சாதனைகளும் விளைந்து கொண்டே இருக்குமே!

எண்ணியவை அனைத்தும் அல்லது அவற்றில் பெரும் பகுதியேனும் எங்கே நிறைவேறுகின்றன? சினிமா உலகம் செட்டியாரின் ஆசைகள் பலவும் செயல் மலர்ச்சி பெற முடியாத நிலைமையே நீடித்தது. சிறிதளவாவது செயலுருவம் பெறுவதற்குக் கூட அவரது பொருளாதாரம் இடம் கொடுக்கவில்லை.

வழக்கமான காரியங்கள் வழக்கம் போல் நடந்தன. காலம் மாறுதலற்று ஓடிக் கொண்டிருந்தது.

என் மனக்குறை தீர வழி எதுவும் பிறந்துவிடவில்லை.

மேலும் மூன்று மாதங்கள் ஓடிப்போயின. இனியும் இங்கேயே இருப்பதில் பயனில்லை என்ற முடிவுக்கு வந்தேன். நல்ல விதமாகச் செட்டியாரிடம் சொல்லிக் கொண்டு பிரிந்து போவது நடக்கக்கூடிய காரியமாக இல்லை. ஆகவே, 'ஒரு வழி சொல்லிப் பெருவழி போவதே' நான் செய்ய வேண்டிய செயல்முறையாகும் எனத் தீர்மானித்தேன்.

நான் திருநெல்வேலியை விட்டு வந்து பத்து மாதங்களாகி விட்டன; அம்மாவுக்கு உடல்நலம் சீராக இல்லை; என்னைப் பார்க்க விரும்புகிறாள் என்று சொல்லிவிட்டு திருநெல்வேலி போவதாகப் பெயர் பண்ணி, சென்னைக்கு ரயில் ஏற வேண்டியதுதான் என்று திட்டமிட்டேன்.

எனவே என் அண்ணாவுக்கு உண்மை நிலைமை விளக்கிக் கடிதம் எழுதினேன். நான் உடனே ஊருக்கு வரவேண்டும் என்று குறிப்பிட்டு ஒரு கடிதம் எழுதி எனக்கு அனுப்பும்படி கேட்டேன். அவ்வாறே கடிதம் வந்தது. அதைச் செட்டியாரிடம் காட்டி, ஊருக்குப் போவதற்கு அனுமதி பெற்றேன். பணமும் பெற்றுக் கொண்டேன்.

இரவு 12 மணி அளவில் கோவையிலிருந்து திருநெல்வேலிக்கு ஒரு ரயிலும், சென்னைக்கு ஒரு ரயிலும் புறப்படுவதை ஏற்கனவே தெரிந்து வைத்திருந்தேன். புறப்பட வேண்டிய நாளில் இரவு பத்து மணி வரை, எழுத வேண்டிய - டைப் செய்ய வேண்டிய கடிதங்கள் பலவற்றையும் எழுதி முடித்து, மேஜையில் சீராக வைத்தேன்.

வீட்டில் எல்லோரும் தூங்கிவிட்டார்கள். 11 மணி அளவில், பெட்டியை எடுத்துக் கொண்டு வெளியேறினேன். ரயில் நிலையம் தூரத்தில் இல்லை. வீட்டைவிட்டு மெதுவாக வெளியில் வந்து வேகமாக நடந்து ஸ்டேஷனை அடைந்தேன். கிருஷ்ணன் என்னைத் தேடிக் கொண்டு வந்துவிடக்கூடாது என்று மனம் உருப்போட்டவாறு இருந்தது.

சென்னைக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு உரிய ரயிலில் ஏறி, மறைவாக உட்கார்ந்து கொண்டேன். வண்டி புறப்படும் வரையில், 'கிருஷ்ணன் வந்து விடுவாரோ! என்னைக் கண்டுபிடித்து விடுவாரோ?' என்ற உள்ளப்பதைப்பு எனக்கு இருந்தது?

நல்ல வேளை! சென்னை போகிற ரயில்வண்டி முதலில் புறப்பட்டது. இனி யார் வந்து தேடினாலும் கவலையில்லை என்று மனம் நிம்மதி அடைந்தது.

திருநெல்வேலியில் இருந்து நான் எழுதுவதுபோல், என் நிலைமையையும் பிரயாணத்தையும் விரிவாகக் கூறும் ஒரு கடிதம் செட்டியாருக்கு எழுதி, ஏற்கனவே அதை என் அண்ணாவுக்கு அனுப்பியிருந்தேன். மூன்று நாள்கள் ஆனபிறகு அதைச் செட்டியாருக்குத் தபாலில் அனுப்பி வைக்கும்படி கேட்டிருந்தேன். அப்படியே செய்யப்பட்டது.

கோயம்புத்தூரிலிருந்து நான் கிளம்பிய இரவில் எஸ். கிருஷ்ணன் என்னை வழி அனுப்புவதற்காக ரயில் நிலையத்துக்கு வருவதாக இருந்தார். ஆனால் அவர் தூங்கி விட்டார். திடீரென விழித்துக்கொண்டு, நேரமாகிவிட்டதே என்று உணர்ந்தார். நான் ஏற்கெனவே போய்விட்டேன் என்று கண்டதும் வேகம் வேகமாக நடந்து ரயிலடிக்கு வந்தார். திருநெல்வேலி போகிற ரயில் நின்றது. அவர் ஒவ்வொரு பெட்டியினுள்ளும் சன்னல் வழியாக எட்டிப் பார்த்து வல்லிக்கண்ணன் என்று கூவியபடி பிளாட்பாரத்தில் அங்குமிங்குமாக நடந்து தேடியுள்ளார். ரயில் கிளம்பிவிட்டது. சரி, வண்டியில் கூட்டத்துக்கு நடுவிலே சிக்கியிருப்பார் என்று எண்ணிக் கொண்டு வீடு திரும்பினார். பின்னர் ஒரு சமயம் அவரைச் சந்திக்க நேரிட்டபோது கிருஷ்ணன் இதை என்னிடம் தெரிவித்தார்.

மேலும் அவர் தமாஷாகக் குறிப்பிட்டார். 'அன்றைக்கு ராத்திரி ரயிலை ஒட்டி பிளாட்பாரத்திலே காப்பி - காப்பி வடை முறுக்கு என்று கூவி விற்கிவர்கள் மாதிரி நான் வல்லிக்கண்ணன் - வல்லிக்கண்ணன் என்று சத்தமிட்டபடி அங்கும் இங்குமாக அலைந்தேனா! இவன் என்னடா புதுசா என்னமோ விற்கிறானே என்று மற்றவங்க எண்ணியிருப்பாங்க!' என்றார். இதைக் கூறிவிட்டு உரக்கச் சிரித்தார் நண்பர்.

கோயம்புத்தூரில் நான் ஒன்பது மாதங்கள் வசித்தேன். வாழ்க்கை பற்றியும் மனிதர்கள் குறித்தும் எனது அனுபவ ஞானம் ஒரு சிறிது வளர்வதற்கு அந்தக் காலகட்டம் உதவியிருந்தது.

என் அண்ணா கோமதிநாயகம் ஒரு சந்தர்ப்பத்தில் கோவை வந்தார். அங்கே அவருக்கு ஒரு வேலை கிடைக்கும் என்று அன்பர் தெரிவித்திருந்தார். வேலை இருந்தது. ஆனால் அந்த வேலையும், வேலை செய்ய வேண்டிய இடமும், கடும் குளிரில் அதிகாலையிலேயே எழுந்து வேலை இடத்துக்குப் போக வேண்டும்

என்கிற கட்டாயமும் அவருக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவர் அந்த வேலையை ஏற்றுக் கொள்ளவில்லை.

கோவையில் நான்கு நாள்கள் தங்கிவிட்டு, திருநெல்வேலிக்கு திரும்பிச் செல்ல வேண்டியது தான் என்று அண்ணா எண்ணினார். வேறொரு இடத்தில் வேலையில் சேர்த்து விடுகிறேன் என்று பி.எஸ். செட்டியார் உதவ முன் வந்தார். வேலையும் கிடைத்தது.

ஆயத்த ஆடைகள் (ரெடிமேட் டிரெஸஸ்) தயாரித்து விற்பனை செய்கிற ஒரு நிறுவனம் அது. பெரிய அளவில் உற்பத்தி நடந்து கொண்டிருந்தது. வெளியூர்களுக்கும் அந்நிறுவனம் தனது தயாரிப்புகளை அனுப்பிக் கொண்டிருந்தது. முதலாளிகள் வட இந்தியாவைச் சேர்ந்தவர்கள். செட்டியாருக்கு வேண்டிய ஒருவர் அங்கு முக்கிய பொறுப்பு வகித்தார். அவர் தயவால் நல்ல சம்பளத்தில் அண்ணாவுக்கு கணக்கு எழுதும் வேலை கிடைத்தது.

அண்ணா அந்த நிறுவனத்தில் பதினைந்து நாள்கள் தான் பணிபுரிந்தார். தனது மனசுக்குப் பிடிக்காத காரியங்களை செய்ய வேண்டியிருக்கிறது என்று அவர் வேதனைப்படலானார். அவர்கள் மூன்று கணக்குகள் வைத்திருக்கிறார்கள். உள்ளது உள்ளபடி எழுதப்பட வேண்டிய கணக்கு ஒன்று. விற்பனைகள், ஏற்றுமதியாகிறவை முதலியவற்றை மறைத்தும் குறைத்தும் எழுத வேண்டிய பொய்க் கணக்கு ஒன்று. வருமான வரிக்காரர்களை ஏமாற்றுவதற்காக இது. செலவுகளை அதிகரித்துக்காட்டி, நஷ்டத்தை மிகுதியாகக் காட்டக்கூடிய மற்றுமொரு கணக்கு தொழிலாளர்களையும் பங்குதாரர்களையும் ஏமாற்றுவதற்காக இருக்கும் இந்தக் கணக்கு.

நேர்மை, நியாயம், உண்மை முதலிய உயர்பண்புகளைப் போற்றியும் கடைப்பிடித்தும் வந்த அண்ணா கோமதிநாயகத்துக்கு முதலாளிகளின் இந்தப் போக்கு பிடிக்கவில்லை. தனது மனஉறுத்தலைச் செட்டியாரிடம் சொன்னார். அவரோ சிரித்துக் கொண்டே, முதலாளிகள் எத்தனை கணக்கையும் வைத்துவிட்டுப் போறாங்க! அதனாலே உங்களுக்கு என்ன? அவங்க எதிர்பார்க்கிறபடி கணக்கை எழுதிக் கொடுத்தால், உரிய சம்பளம் கிடைக்கிறது அல்லவா? நீங்க ஏன் மனக்கஷ்டப்படணும்? வியாபார உலகம் அப்படித்தான் இருக்கும். பலதும் நடக்கும். நாம கண்டு கொள்ளக்கூடாது என்று உபதேசம் கூறினார்.

ஆனால் என் அண்ணாவின் மனம் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. எனக்கு வேலை செய்யப் பிடிக்கலே, ஊருக்கே போறேன் என்று சொல்லிவிட்டு, விடை பெற்றுச் சென்றார்.

நாடகக் கலைஞர் டி.கே. சண்முகத்தின் நாடகக் கம்பெனியின் முதலாளித்துவப் போக்குகள் தங்களுக்குப் பிடிக்கவில்லை என்று, கம்பெனி நடிகர்களான டி.வி. நாராயணசாமி, எஸ்.வி. சுப்பையா, மற்றும் ஒரு சிலர் உரிமைக்குரல் எழுப்பினார்கள். அவர்கள் கம்பெனியை விட்டு வெளியேற நேரிட்டது.

நண்பர்கள் நாராயணசாமியும், எஸ்.வி. சுப்பையாவும் கோயம்புத்தூருக்கு வந்து, 'சினிமா உலகம்' செட்டியாரைக் கண்டு பேசினார்கள். என்னுடனும் பேசி மகிழ்ந்தார்கள்.

டி.வி. நாராயணசாமி திராவிட இயக்கக் கொள்கைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அதனால், அந்த இயக்கத்தில் சேர்ந்து பணிபுரிய விரும்புவதாகச் சொல்லி அவர் சென்னைக்குப் போனார்.

எஸ்.வி. சுப்பையா சினிமாத் துறையில் நடிகராக முன்னேற ஆசைப்பட்டார். அதற்கு பி.எஸ். செட்டியாரின் உதவியை நாடினார். திரைஉலகில் ஒளி மிகுந்த நட்சத்திரமாகப் பிரகாசித்து வந்த எம்.கே. தியாகராஜ பாகவதர், அந்தச் சமயத்தில், கோயம்புத்தூரில் தங்கியிருந்தார். ஏதோ படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. அவரைப் பார்த்து சிபாரிசு செய்ய முடியுமா என்று சுப்பையா, செட்டியாரைக் கேட்டார். அவரும் ஆசாரி குலத்தைச் சேர்ந்தவர். நானும் செங்கோட்டை ஊரில் ஆசாரி இனத்தைச் சேர்ந்தவன் தான். எனக்கும் நன்றாகப் பாட வரும் என்று சுப்பையா தெரிவித்தார்.

செட்டியார் சிரித்தார். உங்களுக்கு எம்.கே.டி. பாகவதரின் குணம் தெரியாது. பொதுவாக மற்றவர்களுக்கு அவருடைய இயல்புகள் தெரியாதுதான். முதலில், நடிகன் என்று சொல்லிக் கொண்டு, அவரைப் போலவே தலைமுடியை தோள்வரை வளரும்படி தொங்க விட்டுக் கொண்டிருப்பவர்களை அவருக்கு அறவே பிடிக்காது. அப்படி வருகிறவர்களைக் கண்டாலே முகம் சுளிப்பார். இரண்டாவது, அவரும் ஆசாரி - நானும் ஆசாரி என்ற குலமுறை பேசிக் கொண்டு அணுகுகிறவர்களையும் அவருக்குப் பிடிக்காது. அப்படி சொல்லியபடி உதவி கேட்டு வருகிறவர்களை அவர் வெறுப்பார். ஒவ்வொருவரும் அவரவர் திறமையினாலும் உழைப்பினாலும் முன்னுக்கு வரவேண்டும் என்று நினைப்பவர் அவர். அதை வெளிப்படையாகவே சொல்லுவார் என்று செட்டியார் கூறினார்.

இருந்தாலும் பார்ப்போம், சமயம் வரும்போது நான் பாகவதரிடம் அழைத்துச் சென்று உங்களை அறிமுகம் செய்கிறேன். வேறு இடங்களிலும் முயற்சி பண்ணலாம் என்றும் பி.எஸ். செட்டியார் சொன்னார். கொஞ்ச நாள் கோயம்புத்தூரிலேயே இருங்கள், முயற்சி பண்ணலாம் என்றும் தெரிவித்தார்.

நடிகர் சுப்பையா கலை உள்ளமும் நடிப்புத் திறமையும் பெற்றிருந்தார். நடிகனாக முன்னேறி, நடிப்புக் கலையில் பெயர் சொல்லும்படி விளங்க வேண்டும் என்ற துடிப்பு அவருக்கு இருந்தது.

ஒருநாள் அவர் தனியாகவே பாகவதரைப் பார்த்துப் பேசுவதற்காகச் சென்றார். பாகவதர் சரியாக வரவேற்கவில்லை என்றும், நல்லபடியாகப் பேசவில்லை என்றும் என்னிடமும் எஸ்.பி. கிருஷ்ணனிடமும் அவர் பின்னர் கூறினார்.

தியாகராஜ பாகவதர் அப்போது ராஜபோக வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தார். ஆதியில் திருச்சியில் தெருவில் அவர் பாடித் திரிந்தவர். நாடகக் கம்பெனியில் சேர்ந்து, பாட்டுத் திறத்தால் கவனிப்புப் பெற்றார். சினிமா வாய்ப்பு கிட்டியது. படிப்படியாக முன்னேறி, வெகுவேகமாக புகழ் வானில் உயர்ந்து விட்டார். பெயரும் புகழும் செல்வமும் அதிகரிக்க அதிகரிக்க அவர் ஆளே மாறிப்போனார் என்று அவரை அறிந்திருந்தவர்கள் பேசிக் கொண்டார்கள்.

அவர் கோயம்புத்தூரில் ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தது பற்றிப் பலரும் வியப்புடன் பேசினர். 'சினிமா உலகம்' செட்டியாரும் அவ்வப்போது பாகவதர் பெருமைகளைச் சொல்வது உண்டு. எஸ்.பி. கிருஷ்ணனும் சொன்னார்.

பாகவதர் நடிக்கும் படத்தைத் தயாரித்து வந்த கம்பெனி அவருக்கென்று வசதிகள் நிறைந்த தனிவீடு கொடுத்திருந்தது. நடுவில் கம்பெனிக்கான வீடு. அதன் ஒரு புறத்தில் பாகவதர் தங்கியிருந்த வீடு. மறுபக்கம், அவரைக் காதலித்து, அவரைத் தேடிவந்த ஒரு அழகி வசித்த வீடு.

பாகவதரின் வசீகரத் தோற்றம், பாடும் திறமை, இனிய குரல் இவற்றால் ஈர்க்கப்பட்டு. அநேக பெண்கள் அவரைத் தேடி வந்தார்கள். அப்படி வந்த ஒரு பிராமணத்தியை அவர் தன்னுடன் சேர்த்துக்கொண்டு, அவளுக்கெனத் தனியாக வீடு ஏற்பாடு செய்திருந்தார் என்று சொல்லப்பட்டது.

பாகவதர் கந்தர்வன் மாதிரி இருப்பதாகச் சொன்னார்கள். கந்தர்வனை யார் பார்த்தார்கள்? அழகில் சிறந்த ஒரு உருவம் கந்தர்வம் என்று காலம்காலமாகக் கற்பிக்கப்பட்டு வருகிறது.

தியாகராஜ பாகவதர் ராஜா மாதிரி வாழ்கிறார். அவர் சாப்பிடுவது தங்கத் தட்டிலே தான். சாப்பிட்டானதும் அவரே எழுந்து போய் தன் கையைக் கழுவிக் கொள்ள மாட்டார். இருந்தபடியே வலது கையை நீட்டுவார். தயாராகக் காத்து நிற்கும் ஒரு ஆள் விரைந்து வந்து ஒரு வெள்ளிப் பாத்திரத்தை கைக்குக் கீழே பிடித்து நிற்பான். இன்னொரு ஆள் தண்ணீரைச் சிறிது சிறிதாக ஊற்றி பாகவதரின் சாப்பிட்ட கையை நன்கு கழுவி விடுவான். அவ்வளவு பவிசு அவருக்கு. இப்படி 'சினிமா உலகம்' பத்திரிகை ஆசிரியர் செட்டியார் ஒரு சமயம் விவரித்தார்.

பாகவதர் கையில் விலை உயர்ந்த வாட்ச் கட்டியிருக்கிறார். அதற்கான செயின் தங்கத்தினால் ஆனதாக இருக்கும் என்று தானே நினைக்கிறீர்கள்? இல்லை. விலை உயர்ந்த வைரக் கற்களாலான வாட்ச் செயினை பாகவதர் கட்டியிருக்கிறார். அவர் கையை அப்படியும் இப்படியும் ஆட்டி அசைக்கிறபோது வைரங்கள் டாலடிக்கின்றன. விளக்கு வெளிச்சம் இருக்கிற போது கேட்கவே வேண்டாம். கண்களைக் கூசச் செய்கிறது வைரஒளி. பிரகாசிக்கிற வைரங்களினூடே இருக்கிற வாட்ச்சில் மணி பார்க்க முடியாது! ஆனால் பாகவதர் மணி பார்ப்பதற்காகவா வாட்ச் கட்டியிருக்கிறார்? பகட்டுக்கும் படாடோபமாகவும் தான் அவர் வாட்ச் அணிந்திருக்கிறார்.

இதுவும் செட்டியார் சொன்னது தான். ஆனால் ஏனோ இவற்றை எல்லாம் பத்திரிகையில் சுவையான செய்திகளாக வெளியிடலாமே என்ற நினைப்பு அவருக்குத் தோன்றவில்லை. அந்நாளைய சினிமாப் பத்திரிகையாளர் எவருக்குமே தோன்றவில்லை. காலப்போக்கில், சினிமா இதழ்களின் போக்கு எவ்வளவோ மாறிவிட்டது. கிசுகிசு, வம்புகள், வதந்திகள், அக்கப்போர் சமாச்சாரங்கள் என்று எவ்வளவோ என்ன என்னவெல்லாமோ எழுதி மகிழத் தொடங்கிவிட்டன. அவற்றை வாசகர்கள் விரும்பிப் படிக்கிறார்கள் என்று தெரிந்துகொண்ட இதர வணிக நோக்கு அதிக விநியோகமுள்ள வாரப் பத்திரிகைகளும் சினிமா நடிகையர், நடிகர்கள் பற்றி விசேஷ செய்திகளை வாரி வழங்குகின்றன.

எம்.கே.டி. பாகவதர் ஆரம்ப கால ஏழ்மை நிலையை மறந்து, பகட்டும் படாடோபமும் ஆடம்பரமும் ஆணவமும் கொண்டு

வாழ்ந்தார். இறுதியில் தேய்ந்த நிலவு ஆகி, அநாதை மாதிரி வாழ்ந்து, கவனிப்பாரின்றி செத்துப்போனார். வாழ்க்கையும் காலமும் எவ்வளவோ பாடங்களைப் புகட்டியவாறே நகர்கின்றன.

ஒருநாள் பி.எஸ். செட்டியார் என்னிடம் சொன்னார், இளங்கோவன் கோயம்புத்தூர் வந்திருக்கிறார். ராயல் இந்து ரெஸ்டாரன்ட் மாடியில் தங்கியிருக்கிறார். உங்களைப் பார்த்துப் பேசவேண்டும் என்று சொன்னார். போய் பார்த்துவிட்டு வாங்க என்றார்.

போனேன். திரைப்பட வசனகர்த்தா என்று பெயரும் புகழும் பிரமாதமான பணவருவாயும் பெற்றிருந்த நிலை அப்போது அவருக்கு.

அந்தக் காலத்திலே நம்ம ஆபீசுக்கு வந்து போகையிலே இளங்கோவன் ரொம்ப மெலிந்து, சாதாரண ஆளாகத் தென்பட்டார். வேர்க்கடலையை வாங்கித் தின்று ஜமீன்தார் மாதிரி இருக்கிறார். பழைய காலம் அவருக்கே நினைப்பிலே இராது என்று பி.எஸ். செட்டியாரின் மனைவி ஒருமுறை சொன்னார்.

வசதியற்ற எழுத்தாளராக இருந்த இளங்கோவன் தோற்றத்தை நான் போட்டோக்களில் பார்த்திருக்கிறேன். இப்போது கோவையின் பெரிய ஓட்டலின் வசதியான மாடியில் தங்கியிருந்த இளங்கோவன் கவலையில்லாத மனிதனாய், 'தண்டியும் சதையுமாக' அளவுக்கு மீறிய பருத்த உடலராய், காட்சியளித்தார்.

தரையில் பரப்பிய விரிப்பின் மீது சம்மணமிட்டு அமர்ந்து மதிய உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தார். நான் என்னை அறிமுகம் செய்து கொண்டதும், 'சாப்பிடுறியா?' என்று உபசரித்தார். வேண்டாம்; நான் சாப்பிட்டாச்சு என்று தெரிவித்தேன்.

பத்திரிகைகள், எழுத்தாளர்கள், புத்தகங்கள் பற்றி அவர் விசாரித்தார். அவரும் தன் எண்ணங்களைச் சொன்னார். திடீரென்று, நீ ஏன் சினிமா உலகம் பத்திரிகையிலேயே இருக்கிறே? வேறே நல்ல பத்திரிகை எதிலாவது சேர்ந்து வேலை பார்க்கிறது தானே? சென்னையிலே தினமணி பத்திரிகைக்குப் போய் சேரு. ஒழுங்கா சம்பளமும் கிடைக்கும். நல்ல எதிர்காலமும் கிட்டும். சினிமா உலகம் பத்திரிகையிலே வளர்ச்சிக்கே இடம் கிடையாது. செட்டியார் என்ன சம்பளம் தந்திடப்போறாரு என்று இளங்கோவன் பேசினார்.

அவர் பேச்சு எனக்கு வியப்பு தந்தது. இளங்கோவன் நெருங்கிய நல்ல நண்பர். உதவிகள் செய்யக்கூடியவர். அவர் தயவு எப்பவும் நமக்குத் தேவை என்று ஒரு சந்தர்ப்பத்தில் செட்டியார் என்னிடம் சொல்லியிருந்தார். செட்டியார் உறுதியாக நம்புகிற நண்பர் என்னிடம் இப்படிப் பேசுகிறாரே என்று எண்ணிக் கொண்டேன்.

அவரிடம் விடைபெற்றுப் பிரியும்போது கூட, நீ தினமணியிலே வேலைக்குச் சேர முயற்சி செய். அது தான் உனக்கு நல்லது என்று இளங்கோவன் உபதேசித்து அனுப்பினார்.

இளங்கோவனை நினைக்கிற போதெல்லாம், அவரது இளமையில் 1937ல் அவர் எழுதிய 'சாவே வா!' என்ற சிந்தனைக் கட்டுரை என் மனசில் மேலெழுந்து அலைபாயும். தத்துவரீதியில் அவர் தனது சிந்தனைகளை வெளிப்படுத்தியிருந்தார். அந்தக் கட்டுரையில். இப்போது எனக்கு வயது இருபத்து எட்டு ஆகிறது. இன்று நான் நல்லவனாக, யோக்கியனாக வாழ்ந்து கொண்டிருக்கிறேன். என்றும், இவ்விதமே இருப்பேன் என்று நான் சொல்ல முடியாது, குடிகாரனாக, சூதாடியாக, ஏமாற்றுகிறவனாக, கொடியவனாக, காமாந்தகாரனாக நான் மாறிவிடலாம். இப்போது கூட கோயிலில் சந்நிதியில் நின்று அம்மனைக் கும்பிடுகிறபோது, அழகான பெண்போல அலங்கரிக்கப்பட்டு காட்சி தருகிற அம்பாளின் திருஉருவம் என்னுள் காம நினைப்புகளை எழுப்புகிறது....

இத்தன்மையில் அவர் தனது எண்ண ஓட்டங்களைப் பதிவு செய்திருந்தார் அந்தக் கட்டுரையில். நீ என்ன நினைக்கின்றாயோ அதுவே ஆகின்றாய் என்று கூறியுள்ளார் ஒரு ஞானி. வாழ்க்கை வசதிகள் கிட்டாத நிலையில் ஒரு சாதாரண எழுத்தாளனாகத் திரிந்து கொண்டிருந்த இளங்கோவன் பணமும் அந்தஸ்தும் கிடைத்தால் இப்படி எல்லாம் வாழலாம் என்று கற்பனை செய்திருக்கக் கூடும். அந்த நினைப்பு அவர் எழுதிய கட்டுரையில் வெளிப்பட்டிருந்தது. காலப்போக்கில் பணமும் புகழும் அந்தஸ்தும் வந்து சேர்ந்ததும் அவருடைய வாழ்க்கை முறைகளும் மாறிப்போயின.

கதை வசனம் எழுதுவதற்கு மன எழுச்சி வேண்டும். மன எழுச்சி பெறுவதற்கு உதகமண்டலத்தில் உல்லாச ஓட்டலில் அறை எடுத்துத் தங்க வேண்டும். குடிப்பதற்கு மது வகைகளும் கூடிக் களிக்க மங்கையரும் வேண்டும் என்றெல்லாம் ஆணையிட்டு, விரும்பியவாறே அனைத்தையும் பெறக்கூடிய அந்தஸ்தை அவர் அடைந்திருந்தார். அவரது திறமையும் உழைப்பும் தங்களுக்குப்

பயன்பட வேண்டும் என்று ஆசைப்பட்ட படத் தயாரிப்பாளர்கள் அவர் கேட்டதை எல்லாம் உரிய முறையில் நிறைவேற்றித் தர எப்பவும் தயாராக இருந்தார்கள். சில வருடங்கள் உல்லாச வாழ்வு வாழமுடிந்தது அவரால்.

பிறகு, சொந்தமாகப் படம் பிடிக்க வேண்டும் என்ற ஆசை இளங்கோவனையும் பற்றியது. சொந்தக் கம்பெனி ஆரம்பித்து, படத்தயாரிப்பில் ஈடுபட்டார். ஊதாரித்தனமான செலவுகளும் ஆடம்பர வாழ்க்கை முறைகளும் விரைவிலேயே அவரைக் கடனாளியாக்கின. ஆயிரம் ஆயிரமாகப் பணத்தை அலட்சியமாகச் செலவு செய்த அவர் பின்னாளில் பத்துக்கும் பதினைத்து ரூபாய்க்கும் பிறர் உதவியை எதிர்பார்க்க வேண்டிய ஒரு நிலை ஏற்பட்டது.

'ஆறிடும் மேடும் மடுவும் போலாம் செல்வம்' என்று பழங்காலத்திலேயே புலவர்கள் பாடிவைத்திருக்கிறார்கள். 'பெருமையும் சிறுமையும் தான் தர வருமே' என்றும் பாடியிருக்கிறார்கள். மனிதர்கள் அவரவர் எண்ணங்களினாலும் செயல்களாலும் தங்களைத் தாங்களே ஆக்கியும் கொள்கிறார்கள்; அழித்துப் பாழ்படுத்தியும் கொள்கிறார்கள். வாழ்க்கை இதை எடுத்துக்காட்டியவாறே இருக்கிறது.

# 6

சென்னை போய்ச் சேர வேண்டும் என்று நெடுநாள்களாக எண்ணம் வளர்த்து வந்த நான் ஒருவாறு சென்னைக்கு வந்து விட்டேன். 1943 டிசம்பர் மாதம் ஒருநாளில்.

ரயிலை விட்டு இறங்கியதும் எப்படிப் போவது என்ற திகைப்பே எனக்கு எழுந்தது. மயிலாப்பூர் நடுத்தெருவில் இருந்த 'நவசக்தி' அலுவலகத்துக்குப் போக வேண்டும்.

அந்தக் காலத்தில் டிராம் வண்டிகள் ஓடிக்கொண்டிருந்தன. ரோடின் நடுவே இரும்புத் தண்டவாளங்கள் பதிக்கப் பட்டு, மேலே உயரத்தில் அமைக்கப்பட்டிருந்த மின்கம்பிகளில் இணைக்கப்படும் சாதனத்தின் மூலம் மின்சக்தி பெற்று டிராம்கள் ஓடின. கட்டணம் வெகு மலிவு தான்.

ஆனால், மயிலாப்பூர் எங்கே இருக்கிறது? அங்கே நடுத்தெருவை எப்படிக் கண்டுபிடிப்பது? எந்த டிராமில் ஏறிச் செல்ல வேண்டும் என்பது எதுவும் எனக்குத் தெரியாது.

அந்தநேரத்தில் குதிரை வண்டிக்காரர் ஒருவர் என் அருகில் வந்தார். எங்கே போக வேண்டும்? என்று விசாரித்தார். சொன்னேன் வாங்க, ஜட்காவிலே போகலாம் என்றார். இரண்டு ரூபாய் கொடுங்கள் என்றார்.

நானிருந்த நிலையில் அவர் மூன்று ரூபாய் - நாலு ரூபாய் என்று கேட்டிருந்தால் கூட கொடுக்க முன்வந்திருப்பேன். உரிய இடத்தை நான் தனியாக எப்படிக் கண்டுபிடிக்க முடியும். வண்டிக்காரர் நம்பக்கூடிய மனிதராகத்தான் தோன்றினார். அவருடைய 'ஜட்கா' விலேயே பயணம் செய்தேன்.

டிராம் வண்டி ஓடுகிற பெரிய ரஸ்தாக்கள் வழியாகச் செல்லாமல் வண்டிக்காரர் சிறு தெருக்களின் வழியே குதிரைவண்டியை நிதானமாகச் செலுத்தி, மயிலாப்பூர்

நடுத்தெருவில் கொண்டுவந்து சேர்த்தார். 'நவசக்தி' அலுவலகம் இருந்த வீட்டைக் கண்டு அதன் முன் வண்டியை நிறுத்தினார். இரண்டு ரூபாயைப் பெற்றுக் கொண்டு திருப்தியோடு சென்றார்.

அது வசதியான தனி வீடு. நவசக்தி அச்சகம் அங்கே இருந்தது. அச்சகத்துக்கு உரிய பலவிதமான சாமான்களும், ஒரு டிரெடில் மிஷினும் இருந்தன. ஆள்கள் யாரும் அங்கு வசிக்கவில்லை. சக்திதாசன் சாலைத் தெருவில் ஒரு வீட்டில் வசிப்பதாகத் தெரியவந்தது.

ஆனால் நான் வந்து சேர்ந்த நாளில், சக்திதாசன் சுப்பிரமணியன் சென்னையில் இல்லை. நவசக்தியின் வளர்ச்சிக்காக நிதிவசூல் செய்யும் நோக்கத்துடன் அவர் இலங்கை போயிருந்தார்.

அந்த வீட்டில் அப்போது 'கிராம ஊழியன்' பத்திரிகையின் ஆசிரியரான கவிஞர் திருலோக சீதாராம் தங்கியிருந்தார். அவர் தான் என்னை இன்முகத்துடன் வரவேற்றார்.

'கிராம ஊழியன்' திருச்சி நகரிலிருந்து இருபத்தெட்டு மைல்களுக்கு அப்பாலிருந்த துறையூர் என்ற சிற்றூரிலிருந்து வெளிவந்தது. ஆரம்பத்தில் சமூக அரசியல் பத்திரிகையாக நடந்து வந்த 'கிராம ஊழியன்' சிறிது காலமாக மறுமலர்ச்சி இலக்கிய மாதம் இருமுறை இதழாக, சிறு அளவுப் புத்தக (கிரௌன் சைஸ்) வடிவத்தில் வந்து கொண்டிருந்தது. திருலோக சீதாராம் நிர்வாக ஆசிரியர் என்றும் கு.ப. ராஜகோபாலன் ஆசிரியர் என்றும் அறிவிக்கப்பட்டிருந்தது. (முதலில் ஆறுமாத காலம் கு.ப.ரா.கௌரவ ஆசிரியர் ஆக இருந்தார்.) அ.வெ.ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் டதிப்பாளர். பத்திரிகை, கிராம ஊழியன் பிரஸ் லிமிட்டெட் என்ற நிறுவனத்தின் சார்பில் வெளியிடப்பட்டது. ரெட்டியார் தான் லிமிட்டெட் கம்பெனியின் செயலாளர்.

கிராம ஊழியன் பொங்கல்மலர் வெளியிடத் திட்டமிட்டிருந்தது. அதற்கான வேலைகள் நடந்து கொண்டிருந்தன. மலருக்கு விளம்பரங்கள் சேகரிக்கவும், சென்னை எழுத்தாளர்களிடமிருந்து கதைகள், கட்டுரைகள் கேட்டுப் பெறவும் கு.ப.ராஜகோபலனும் திருலோக சீதாராமும் வந்து, நவசக்தி அலுவலகத்தில் தங்கியிருந்தார்கள். பதினைந்து நாள்களுக்கு மேலாகி விட்டதால் கு.ப.ரா கும்பகோணம் போய் விட்டார். திருலோகம் மட்டும் சென்னையில் இருந்தார்.

இவ்விவரங்களை சீதாராம் என்னிடம் தெரிவித்தார். என் எழுத்துக்கள் கிராம ஊழியனில் வந்திருந்தன. எனினும் நாங்கள்

இதுவரை சந்தித்ததில்லை. இப்போது தான் நேரில் அறிமுகமானோம். திருலோகம் 'மந்தஹாசன்' என்ற பெயரில் கவிதைகள் எழுதிவந்தார்.

திருலோக சீதாராம் பல வருடங்களுக்கு முன்பு விழுப்புரத்தில் உபாத்தியாயர் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அங்கே இராம. சடகோபன் என்பவர் 'தியாகி' என்ற இதழை நடத்திவந்தார்.மிக எளிய முறையில் நடந்த சிற்றிதழ் அது. திருலோகம் அதில் உதவி ஆசிரியராகப் பணியாற்றினார். நாமே ஏன் ஒரு பத்திரிகை நடத்தக்கூடாது என்ற நினைப்பு அவருக்கு எழுந்தது. 'ஆற்காடு தூதன்' (ஆற்காட் ஹெறரால்ட்) எனும் பெயரில் அவர் ஒரு பத்திரிகை நடத்தினார். அது வெகுகாலம் வளரவில்லை. பிறகு இலக்கிய நோக்குடன் 'பால பாரதம்' என்ற இதழைத் தொடங்கினார். மகாகவி பாரதியார், வள்ளலார் இராமலிங்கம் ஆகியோர் பாடல்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் அவர். தனி ரகமான ஒரு குரலில் அவர் பாரதியார் பாடல்களைப் பாடுவது வழக்கம். வள்ளலார் பாடல்களையும் பாடுவார். சொற்பொழிவும் ஆற்றுவார். அதனால் அவருக்கு விழுப்புரம் வட்டாரத்தில் நல்ல பெயர் கிட்டியிருந்தது.

திருலோக சீதாராமின் மனைவி ஊர் துறையூர். எனவே அவர் அடிக்கடி அந்த ஊருக்குப் போய் வருவார். அங்கும் சுற்று வட்டார கிராமங்களிலும் பாரதியார் பாடல்களைப் பாடியும், வள்ளலார் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் செல்வம் பெற்றிருந்தார். துறையூருக்கு அருகிலிருந்த ஒரு ஊரில் பணக்காரராக வசதிகளோடு வாழ்ந்த கிருஷ்ணசாமி ரெட்டியார் சீதாராமின் நண்பரானார். அவருக்கும் பாரதி பாடல்களில் மிகுந்த ஈடுபாடு இருந்தது.

அந்நாள்களில் துறையூரில் 'கிராம ஊழியன்' என்ற பெயரில் சமூகம் மற்றும் அரசியல் நோக்கு கொண்ட காங்கிரஸ் பத்திரிகை வார இதழாக வெளிவந்து கொண்டிருந்தது. பூரணம் பிள்ளை என்ற காங்கிரஸ்காரர் அதை நடத்திவந்தார். பல பிரமுகர்களின் ஆதரவு அதற்கு இருந்தது. அந்தப் பத்திரிகை தோன்றி வளர்ந்ததற்கு முக்கியமான ஒரு காரணம் இருந்தது.

அக்காலகட்டத்தில் திருச்சியிலிருந்து 'நகரதூதன்' பத்திரிகை வாரம் தோறும் வெளியாகி பரபரப்பு ஏற்படுத்திக் கொண்டிருந்தது. அது காங்கிரசுக்கு எதிர்க்கட்சியான நீதிக் கட்சியை (ஜஸ்டிஸ் பார்ட்டி) ஆதரித்தது. அதன் ஆசிரியர் ரெ. திருமலைசாமி சிறப்பான எழுத்தாற்றல் பெற்றிருந்தார்.

விறுவிறுப்பான நடையில் காரசாரமான கட்டுரைகளை அவர் எழுதினார். காங்கிரஸ் கட்சியையும், அந்த வட்டாரத்து எம்.எல்.ஏ, மற்றும் காங்கிரஸ் பிரமுகர்களையும் கடுமையாகத் தாக்கி எழுதிக் கொண்டிருந்தார். 'பேனா நர்த்தனம்' என்ற தலைப்பில் அவர் எழுதிய கட்டுரைகள் சூடும் சுவையும் வேகமும் விறுவிறுப்பும் நிறைந்தவை. வாசகர்களின் கவனத்தை வெகுவாகக் கவர்ந்த பகுதி அது.

'நகர தூதன்' தாக்குதல்களுக்கு எதிர்த்தாக்குதல் கொடுக்க வேண்டும், திருமலைசாமியின் சாடல்களுக்கு பதிலடி தரவேண்டும் என்று திருச்சி மாவட்ட காங்கிரஸ்காரர்கள் கருதினார்கள். எனவே 'கிராம ஊழியன்' என்ற பெயரில் ஒரு பத்திரிகையை துறையூரில் ஆரம்பித்து நடத்தினார்கள். சிறு அச்சகம் வைத்திருந்த பூரணம்பிள்ளை பொறுப்பில் அது வளர்ந்தது.

ஆசிரியர் பூரணம் பிள்ளை இறந்துபோனார். பத்திரிகையை எப்படி நடத்துவது என்ற நெருக்கடி எழுந்தது. திருலோக சீதாராமின் உதவியை நிர்வாகிகள் வேண்டினார்கள். விழுப்புரத்தில் சொந்தமாகப் பத்திரிகைகள் நடத்தி வெற்றிபெறாமல் போயிருந்த சீதாராம் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள சில பிரமுகர்களைச் சேர்த்துக் கொண்டு லிமிட்டெட் நிறுவனம் ஒன்றை உருவாக்கினார்கள். அது அச்சாபீசை பெரிய அளவில் நடத்த முனைந்தது. சிலிண்டர் மிஷின், டிரெடில் மிஷின், மற்றும் அச்சகத்துக்குத் தேவையான சாமான்கள் பலவும் சேகரிக்கப்பட்டன. ஆட்கள் பலர் வேலைக்கு அமர்த்தப்பட்டார்கள். கிராம ஊழியன் பிரஸ்லிமிட்டெட் 'கிராம ஊழியன்' பத்திரிகையையும் வெளியிட்டது. திருலோக சீதாராம் அதன் ஆசிரியரானார். அவர் துறையூருக்கே வந்துவிட்டார்.

அரசியல் வார இதழாக கிராம ஊழியன் வெற்றிகரமாக வளர முடியவில்லை. நஷ்டத்தில் தள்ளாடிக் கொண்டிருந்தது. இச் சமயத்தில், திருச்சியில் வி.ரா. ராஜகோபாலன் நடத்திக்கொண்டிருந்த மறுமலர்ச்சி இலக்கிய இதழான 'கலாமோகினி' எழுத்தாளர் வட்டாரத்திலும் பத்திரிகை உலகிலும் நல்ல கவனிப்பைப் பெற்று வந்தது. நாமும் இது மாதிரி இலக்கியப் பத்திரிகை ஒன்றை நடத்தலாமே என்ற எண்ணமும், நடத்த வேண்டும் எனும் ஆசையும் திருலோகம், அ.வெ.ர.கி. இருவருக்கும் ஏற்பட்டது.

பத்திரிகைக் காகிதக் கட்டுப்பாடு அமுலில் இருந்த காலம். புதிய பத்திரிகைகள் தொடங்குவதற்கு அரசு அனுமதி

வழங்குவதில்லை என்ற நிலைமை. ஆகவே இருவரும் யோசனை செய்தபடியே இருந்தார்கள்.

இச்சந்தர்ப்பத்தில் இந்தியாவில் ஆங்கிலேய அரசு பத்திரிகைக் கட்டுப்பாட்டுச் சட்டம் ஒன்று கொண்டு வந்தது. அதன்படி பத்திரிகைகள் இன்னின்ன விஷயங்களை வெளியிடக்கூடாது. பத்திரிகைகள் வெளியிடும் செய்திகளை அரசு தணிக்கை செய்த பிறகே அச்சிட வேண்டும். அரசு அதிகாரிகள் பத்திரிகைகளைக் கண்காணிப்பார்கள் என்றெல்லாம் விதிகளை வகுத்தது பிரிட்டிஷ் ஆட்சி. பத்திரிகைச் சுதந்திரத்தில் தலையிட்டு, அதன் உரிமைகளைப் பறிக்கின்ற இத்திட்டத்தை எதிர்த்து இந்தியப் பத்திரிகைகள் பல தங்கள் வெளியீட்டை நிறுத்திக் கண்டனம் தெரிவித்தன.

தமிழ்நாட்டில் தினமணியும் மற்றும் சில பத்திரிகைகளும் பிரசுரிப்பதை நிறுத்தி, அரசின் போக்கிற்கு எதிர்ப்புக் காட்டின. இதையே காரணமாகக் கூறி கிராம ஊழியன் இதழும் வெளி வருவதை நிறுத்திக் கொண்டது.

புதிய பத்திரிகை தொடங்குவதற்கு அனுமதி பெற முடியாத நிலையில், கிராம ஊழியன் இதழையே, கலாமோகினி போல இலக்கிய மாதம் இருமுறை இதழாக மாற்றி, புத்தக வடிவத்தி வெளியிடலாமே என்று திருலோக சீதாராமு அ.வெ.ர.கி.ரெட்டியாரும் எண்ணினார்கள். திருச்சி இலக்கிய நண்பர்களும் அதை ஆதரித்தார்கள்.

மறுமலர்ச்சி இலக்கிய எழுத்தாளர் கு.ப.ராஜகோபாலன் கும்பகோணத்தில் சும்மாதான் இருக்கிறார். அவர் ஆண்பெண் உறவு பற்றி, உளவியல் ரீதியில் சிறுகதைகள் எழுதுவதில் தீவிரம் காட்டினார். அதுவரை அவரது கதைகளை வரவேற்று வெளியிட்டு வந்த 'கலைமகள்' முதலிய சென்னைப் பத்திரிகைகள், சோதனை ரீதியான அவருடைய கதைகளை ஏற்றுக்கொள்ள மறுத்தன. கு.ப.ரா.வின் எழுத்துக்கள் எந்த இதழிலும் வெளிவர முடியாத நிலைமை ஏற்பட்டிருந்தது. இந்நிலையில் அவரை 'கிராம ஊழியன்' மறு மலர்ச்சி இலக்கிய இதழின் கௌரவ ஆசிரியர் ஆக்கி, அவருடைய எழுத்துக்களை இதழ்தோறும் வெளியிட்டு வந்தால், பத்திரிகைக்குத் தனி மதிப்பும் இலக்கிய வாசகர்களிடையே நல்ல வரவேற்பும் கிட்டும் என்று திருச்சி இலக்கிய நண்பர்கள் யோசனை கூறினார்கள்.

திருலோக சீதாராமும், ரெட்டியாரும் அந்த யோசனையை ஏற்றுச் செயலாற்றினார்கள். கு.ப.ரா.வுக்கு மாதம் தோறும் ஐம்பது ரூபாய் சன்மானம் அளிக்க லிமிட்டெட் நிறுவனம் முன்வந்தது.

கு.ப.ரா., தமக்கிருந்த இலக்கிய ஆர்வத்தினாலும், சோதனை ரீதியான தமது படைப்புகள் அச்சில் வர வாய்ப்பு ஏற்படுகிறதே என்ற உற்சாகத்தினாலும், தமது பத்திரிகைப் பணி சன்மானம் தேவையில்லை என்று தாராள மனசுடன் மறுத்தார் அவர் கும்பகோணத்தில் தங்கியிருந்தவாறே கதை, கட்டுரை, ஓரங்க நாடகம் என்று பத்திரிகைக்கான விஷயங்கள் பலவற்றையும் அனுப்பினார். மற்றும் கும்பகோணம் எழுத்தாளர்கள் சிலரிடமிருந்தும் படைப்புகள் பெற்று ஊழியனுக்கு அனுப்பி உதவினார்.

கு.ப.ரா எனக்குப் பணம் வேண்டாம் என்று மறுத்திருந்த போதிலும், ஊழியன் நிர்வாகம் அவருக்கு மாதம்தோறும் ஐம்பது ரூபாய் அனுப்பிக் கொண்டிருந்தது. ஆறுமாதங்களுக்குப் பிறகு கு.ப.ரா.பெயரை 'ஆசிரியர்' என்றும், திருலோக சீதாராம் பெயரை 'நிர்வாக ஆசிரியர்' என்றும் அச்சிடலானார்கள். அது முதல் கு.ப.ரா.வுக்கு நிர்வாகம் நூறு ரூபாய் வழங்கியது.

அந்நிலையில்தான் கு.ப.ரா.வும் திருலோகமும் சென்னை வந்திருந்தார்கள். அவர்கள் வந்த பின்னர்தான் சக்திதாசன் சுப்பிரமணியன் இலங்கை சென்றார்.

இவ்விவரங்கள் அனைத்தையும் திருலோகம் எனக்குச் சொன்னார். கிராம ஊழியன் இலக்கிய இதழை இன்னும் சிறப்பாக நடத்த வேண்டும். அதற்கு நீங்கள் துறையூருக்கு வந்தால் உதவியாக இருக்கும். நீங்கள் துறையூரிலேயே இருந்து பத்திரிகையைக் கவனித்துக் கொண்டால், நான் வெளியூர்களில் சுற்றி விளம்பரங்கள் சேகரிக்கவும், விற்பனையை அதிகப்படுத்தவும் வசதியாக இருக்கும் என்று அவர் விருப்பம் தெரிவித்தார்.

'நவசக்தி' பொருளாதார பலம் இல்லாது சிரமப்படுகிறது. சக்திதாசனிடம் பணம் கிடையாது. அவருடன் சேர்ந்திருக்கிற ராதாமணி அம்மா தான் பணம் கொடுத்து உதவுகிறார். பத்திரிகை வளர்ச்சிக்காக நிதி சேகரித்து வரும் நோக்கத்துடன்தான் சக்திதாசன் இலங்கை போயிருக்கிறார். ஓரளவு நிதி அவருக்குக் கிடைக்கக் கூடும். ஆனால் அதை வைத்துக் கொண்டு எத்தனை காலத்துக்கு அவர் பத்திரிகை நடத்தமுடியும் என்றும் திருலோகம் குறிப்பிட்டார்.

சக்திதாசனும், ராதாமணியும், அந்த அம்மாளின் சகோதரிகள் இரண்டு பேரும் சாலைத் தெருவில் உள்ள வசதியான வீட்டில் வசிக்கிறார்கள். சகோதரிகள் இசைப்பயிற்சி, நாட்டியம் என்று ஈடுபட்டிருக்கிறார்கள். கே.ராமநாதனும் அவர்களோடு தான் வசிக்கிறார் என்றும் திருலோகம் தெரிவித்தார்.

கே.ராமநாதன் தான் இப்போது 'நவசக்தி'யைக் கவனித்து கொள்கிறார். அவர் இலக்கிய நோக்கே வேறு. அதை நீங்களே தெரிந்து கொள்வீர்கள் என்றும் அவர் சொன்னார்.

'நவசக்தி' திரு.வி.கல்யாணசுந்தரனாரின் (திரு.வி.க) பத்திரிகையாக நெடுங்காலம் வளர்ந்தது. ஒரு காலத்தில் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி, வெ.சாமிநாத சர்மா முதலியவர்கள் ஆசிரியர் குழுவில் இணைந்து பணியாற்றியுள்ளனர். பின்னர், அதன் இறுதிக் கட்டத்தில் கே. ராமநாதன், சக்திதாசன் சுப்பிரமணியன் முதலியோர் உதவி ஆசிரியர்களாக உழைத்தார்கள். ஒரு கட்டத்தில் கே.ராமநாதன் இலங்கை போய் விட்டார். கம்யூனிஸ தத்துவத்தில் ஈடுபாடு கொண்ருந்த அவர் அங்கே 'தேசாபிமானி' என்ற பத்திரிகையில் சேர்ந்து பணியாற்றினார். அங்குள்ள அரசு அவரைக் கண்காணித்து வந்தது. கைது செய்யப்படலாம் என்ற நிலை ஏற்பட்டதும், அவர் அங்கிருந்து தப்பி தமிழ்நாடு வந்து சேர்ந்தார். 'நவசக்தி' வேலையில் ஈடுபட்டார்.

திரு.வி.க. முதுமை காரணமாக பத்திரிகைப் பணியைத் தொடர முடியாத நிலைமை ஏற்பட்டது. கல்கி ரா.கிருஷ்ணமூர்த்தி, அவரிடமிருந்து நவசக்தியை ஏற்று நடத்த விரும்பினார் என்றும், ஆனால் இறுதிக் கட்டத்தில் நவசக்திக்காகச் சிரமங்களோடு பணிபுரிந்து வந்த சக்திதாசனுக்கே இதழ்ப்பொறுப்பை திரு.வி.க. தந்துவிட்டார் எனவும் செய்தி நிலவியது.

சக்திதாசன் சுப்பிரமணியன் ராதாமணி அம்மையார் துணையோடு, 'நவசக்தி' யைத் தனி இலக்கிய இதழாக, புத்தகவடிவத்தில் வெளியிடலானார். கே.ராமநாதன் அவருடன் சேர்ந்து இதழ்ப் பணிகளை கவனித்து உதவினார்.

டிரெடில் மிஷினை இயக்க முதியவர் ஒருவர் இருந்தார். அச்சுக்கோப்பதற்குத் தனியாக ஒரு நபர் உண்டு.

1944 ஜனவரி இதழ் வெளிவர வேண்டும். பணத்துக்காக சக்திதாசனிடமிருந்து தபாலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இதழுக்குரிய விஷயங்கள் சிறிது சிறிதாக அச்சுக் கோக்கப்பட்டு, இரண்டு இரண்டு பக்கங்களாக அச்சாகிவந்தன.

வ.ரா. (வ.ராமஸ்வாமி) நவசக்தியில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதிக் கொண்டிருந்தார். தமிழ்நாட்டில் சமூக நிலைமைகள், கல்வி வளர்ச்சி பற்றிய பொதுப்படையான சிந்தனைகளைச் சிறுசிறு கட்டுரைகளாக்கித் தந்தார் அவர். மாதம் தோறும் அவரே அலுவலகத்துக்கு வந்து கட்டுரையைக் கொடுத்துச் செல்வது வழக்கம் என்று தெரிந்தது.

அதன்படி ஜனவரியில் ஒருநாள் வந்தார். மனிதன் இழுத்துச் செல்லும் ரிக்ஷாதான் அந்நாள்களில் நடைமுறையில் இருந்தது. வரா. ரிக்ஷாவில் தான் வந்தார்.

வ.ரா.எங்கே போகவேண்டுமானாலும் மனிதன் இழுத்துச் செல்கிற ரிக்ஷாவில் தான் போவார். மனிதாபிமானம் பற்றிப் பெரிதாகப் பேசுகிற, எழுதுகிற வ.ரா.மனிதனை மனிதன் இழுத்துச் செல்லும் ரிக்ஷாவில் போகலாமா? அதைப் பற்றிக் கேட்டால், பாவம் கஷ்டப்படுகிற ஒருவனை ஆதரிப்பதே என் நோக்கம். வண்டி இழுத்துப் பிழைக்கிற அவனுக்கும் காசு வேண்டுமல்லவா என்கிறார். இருக்கட்டும். ஆனால் மாலை நேரங்களில் கடற்கரைக்கு ரிக்ஷாவில் போகிற அவர் எப்படி காற்று வாங்குகிறார் தெரியுமா? ரிக்ஷாவை விட்டு கீழே இறங்க மாட்டார். ரிக்ஷாக்காரன் வண்டியைத் தூக்கிப்பிடித்த படியே நிற்க வேண்டும். அவர் ஜம்மென்று ரிக்ஷாவில் உட்கார்ந்தபடியே காற்று வாங்குவார். இப்படி ரொம்ப நேரம் ரிக்ஷாக்காரனிடம் வேலை வாங்குவார். இது தான் மனிதாபிமானமோ? - இப்படி ராமநாதன் ஒருநாள் என்னிடம் குறிப்பிட்டது உண்டு.

நவசக்தி ஜனவரி இதழுக்குரிய கட்டுரையைத் தருவதற்காக வ.ரா. அலுவலகம் வந்தபோது நானும் ராமநாதனும் அங்கே இருந்தோம். திருலோக சீதாராமனும் இருந்தார். ராமநாதன் என்னை அறிமுகப்படுத்தினார்.

வ.ரா.என்னைக் கூர்ந்து நோக்கினார். 'முன்பே சக்திதாசன் சொல்லியிருக்கிறார். எழுத்தாளன் ஆவதற்காக வீட்டைவிட்டு வெளியேறி, நடந்தே புறப்பட்டுவிட்டீர் என்றும் சொன்னார். பேஷ். இப்படித் துணிச்சலாக வீட்டை விட்டு வெளியேறுகிறவர்கள் தான் தமிழுக்காக ஏதாவது செய்ய முடியும்' என்று கூறினார். 'நீர் முறையாகத் தமிழ் இலக்கியம் படித்திருக்கிறீரா?' என்று கேட்டார்.

'இல்லை' என்றேன்.

'அது தான் நல்லது. முறையாகப் பழந்தமிழ் இலக்கியம் படித்தவர்களால் புதுமையாக எதுவும் செய்யமுடியாது' என்று வ.ரா.குறிப்பிட்டார்.

உடனே திருலோகம் அவருடன் சண்டைபிடிக்கலானார் 'வ.ரா., நீங்கள் சொல்வது நல்ல யோசனையே இல்லை. எழுத்துத் துறையில் முன்னேற வேண்டும் என்று ஆர்வமாக இருக்கிற ஓர் இளைஞனிடம் பழந்தமிழ் இலக்கியங்களை படிக்காதே என்று சொல்வது எப்படி நல்ல ஆலோசனையாக இருக்க முடியும்? எல்லா இலக்கியங்களையும் படித்து, புதுமைகள் செய்ய முயல் என்று சொல்வதுதான் சரியான வழிகாட்டுதலாக இருக்கும்' என்று அவர் வலியுறுத்தினார்.

வரா. அது குறித்து வாதாடவில்லை.

'ஆபீசில்தான் உங்களுக்கு வேலை இல்லையே! என்னோடு வாங்க. சென்னையையும் சென்னை எழுத்தாளர்களையும் பார்த்த மாதிரியும் இருக்கும்' என்று திருலோகம் என்னிடம் சொன்னார். 'நான் இவரை அழைத்துக்கொண்டு போகிறேன். சென்னை மாநகரத்தையும் இவர் பார்க்கவேண்டும் அல்லவா!' என்று ராமநாதனிடமும் கூறினார். அவர் மறுப்பு எதுவும் சொல்லவில்லை.

ஆகவே, தினந்தோறும் டிராம் வண்டியிலும் பஸ்ஸிலும் நடந்தும் சென்னையின் பல பகுதிகளிலும் சுற்றினோம். மாநகரத்தையும், மாநகரில் வசித்த முக்கிய எழுத்தாளர்களையும் அறிந்து கொள்வதற்கு உதவிய துணைவராய், வழிகாட்டியாய் நண்பர் திருலோக சீதாராம் விளங்கினார்.

சௌகார்பேட்டை, லாயர் சின்னத்தம்பி முதலித்தெருவில் இருந்த 'பிரசண்ட விகடன்' அலுவலகம் சென்று நாரண துரைக் கண்ணனைச் சந்தித்தோம். அவரே 'ஆனந்த போதினி' மாத இதழின் ஆசிரியராகவும் இருந்தார். அதே அலுவலகத்தில் இருந்து 'சித்திரகுப்த' என்ற தெலுங்குப் பத்திரிகையும் வந்து கொண்டிருந்தது.

இப்பத்திரிகைகளின் வெளியீட்டாளர் நாகவேடு முனிசாமி முதலியார் 'ஆனந்த போதினி பஞ்சாங்க' மும் வெளியிட்டு வந்தார். ஆண்டுதோறும் பத்திரிகைகள் மூலம் கிடைத்த வருமானத்தை விட பஞ்சாங்கம் மூலம் கிடைத்த லாபமே அதிகம். அதைக்கொண்டு ஒவ்வொரு வருடமும் ஒரு வீடு வாங்கினார் அவர். புதிய ஆண்டில்

பஞ்சாங்கம் அச்சடிக்கத் தொடங்கியதுமே அந்த ஆண்டு எந்த வீட்டை விலைக்கு வாங்குவது என்று அவர் முடிவு செய்து விடுவார் என்று அவரைப் பற்றி நாரண துரைக்கண்ணன் ஒரு சந்தர்ப்பத்தில் குறிப்பிட்டார்.

நாரண துரைக்கண்ணன் முதல் சந்திப்பிலேயே என்னிடம் அன்பும் பிரியமும் காட்டலானார். அவ்வப்போது ஆபீசுக்கு வந்து போய்க்கொண்டிருக்கும்படி என்னிடம் கூறினார்.

பிராட்வேயை ஒட்டிய ஒரு தெருவிலிருந்து 'தமிழ்மணி' என்ற வாரப்பத்திரிகை வந்து கொண்டிருந்தது. ஆல்பின் பர்ணாண்டோ ஆசிரியர். தினமணி நாளிதழை இரண்டாக மடித்த அளவில் அமைந்திருந்த அந்தப் பத்திரிகையின் பதினாறு பக்கங்களையும் அவரே நிரப்பிவிடுவார். அவர் ஒரு தொடர்கதை எழுதி வந்தார். முடிவற்று, வருடக் கணக்கில் வளர்ந்து கொண்டிருந்த மிக நீண்ட கதை அது. மணிஓசை என்றொரு பகுதி ஒரு பக்கம் முழுவதும் நிறைந்திருக்கும். பலருக்கும் எழுதப்பட்ட 'பகிரங்கக் கடிதங்கள்' அந்தப் பகுதியில் இடம் பெற்றிருக்கும். விறுவிறுப்பாகவும் சுவையாகவும் ஆசிரியர் அக்கடிதங்களை எழுதியிருப்பார். ஒவ்வொரு கடிதத்தின் முடிவிலும் 'இப்படிக்கு டிங்-டாங்' என்று கையெழுத்திடப்பட்டிருக்கும். அரசியல் அக்கப்போர்களும் வம்பளப்புகளுமே அதிகம் அக்கடிதங்களில் எழுதப்பட்டிருக்கும். வாசகர்கள் விரும்பிப் படிக்கும் பகுதியாக அது இருந்தது.

சென்னையில் இருந்த முக்கியமான விளம்பர ஏஜன்சிகளுக்கும் போய் வந்தோம். அந்நிறுவனங்களில் முக்கியப் பொறுப்பில் இருந்த பிரமுகர்களை அவரவர் வீட்டுக்குப்போய் கண்டு பேசினோம். 'கிராம ஊழியன்' பொங்கல் மலருக்கு விளம்பரம் கொடுத்து உதவ வேண்டும் என்று கேட்டுக் கொள்வதற்காகத்தான்.

மலருக்குத் கதை கட்டுரை கேட்பதற்காக எழுத்தாளர்களின் வீடு தேடிச் சென்றோம். மாலைவேளை, முன்னிரவு போன்ற நேரங்களில் தான் போனோம். பகலில் அநேகர் அலுவலகம் அல்லது வேறு எங்காவது போயிருக்கக் கூடும் என்று திருலோகம் கருதினார்.

கி.வா. ஜகந்நாதன் வீட்டுக்கு இரவில் தான் போனோம். அவர் அன்புடன் உபசரித்தார். இரவு உணவை அவருடன் நாங்களும் சாப்பிடவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவர் சேகரித்துவந்த நாடோடிப் பாடல்கள் பற்றிச் சொன்னார்.

நாடோடிப் பாடல்களை சேகரிக்கும் பழக்கம் அந்நாள்களில் புதுசாகத் தமிழ்நாட்டில் தலைகாட்டியிருந்தது. வட இந்தியாவிலிருந்து தேவேந்திர சத்யார்த்தி என்பவர் மாட்டு வண்டியிலேயே நாடு முழுவதும் சுற்றித் திரிந்து, பல்வேறு மொழிகளில் வழங்கி வந்த நாடோடிப் பாடல்களை சேகரித்தார். அவற்றை எல்லாம் எழுத்தில் பதிவு செய்து கொண்டிருந்தார். அவர் தமிழ் நாட்டுக்கும் வந்தார். அவரைப் பற்றிய கட்டுரைகள் பல பத்திரிகைகளிலும் வெளியாயின.

அவர் தந்த உந்துதலில் தமிழ் நாட்டிலும் சிலர் நாட்டுப் புறப் பாடல்களை சேகரிப்பதில் ஆர்வம் காட்டலானார்கள். மு.அருணாசலம் அவ்விதம் பாடல்கள் சேகரம் செய்தார். அவற்றை ஆதாரமாக்கிக் கட்டுரைகள் எழுதினார். பின்னர் அவற்றைத் தொகுத்து 'காற்றிலே மிதந்த கவிதை' என்ற பெயரில் நூலாக வெளியிட்டார். சக்தி காரியாலய வெளியீடு அது.

கி.வா. ஜகந்நாதனும் நாட்டுப் பாடல்களை சேகரித்தார். அவை பற்றி விரிவான கட்டுரைகள் எழுதினார். அப்படி அவர் சேகரம் செய்த பாட்டுக்களை ஒரு பெரிய 'பவுண்டு நோட்டில்' எழுதி வைத்தார். பிறகு ஒரு சமயம் யாரோ அந்த நோட்டுப் புத்தகத்தை எடுத்துச் சென்றுவிட்டார்கள். அவ்வாறு எடுத்துச் சென்றவர் மனம் வருந்தி திரும்பக் கொண்டு வந்து அதைத் தம்மிடம் சேர்த்து விடுவார் என்று நம்புவதாக கி.வா.ஜ. குறிப்பிட்டு வந்தார். நம்பிக்கை தெரிவித்தும், எதிர்பார்த்தும், பத்திரிகைகளில் எழுதினார். ஆயினும், ஆசையோடு அந்தப் பெரிய நோட்டை 'அமுக்கிச் சென்றவர்' மனம் மாறவில்லை, அவருடைய மனசாட்சி அவரை உறுத்தவில்லை போலும்!

கா.. ஸ்ரீ.ஸ்ரீ.யையும் (கா.ஸ்ரீ.ஸ்ரீனிவாச ஆச்சார்யா) அவர் வீட்டிலேயே கண்டு பேசினோம். காண்டேகர் நாவல்களை ஒவ்வொன்றாக மொழிபெயர்த்து வெளியிட்டு அவர் கவனிப்பைப்பெற்று வந்த சமயம் அது. நாங்கள் கண்டேகர் நாவல்கள் பற்றிப் பேசி மகிழ்ந்தோம். காண்டேகரின் 'கருகிய மொட்டு' என்ற நாவலின் தமிழாக்கம் வெளிவர இருப்பதாகவும், அது பெரும் பரபரப்பை ஏற்படுத்தக் கூடும் என்றும் அவர் சொன்னார்.

அந்த நாவல் தமிழ் நாட்டில் பரபரப்பு ஏற்படுத்தத்தான் செய்தது. இல்லற வாழ்வில், ஒத்த உணர்வுகள் கொண்ட ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாக இணைவதில்லை, பொருந்தா ஜோடிகளே திருமணம் மூலம் சேர்கின்றன. அவர்களுடைய

தாம்பத்திய உறவு பரஸ்பரம் திருப்தி அளிப்பதில்லை. அதனால் குடும்ப வாழ்வில் மகிழ்ச்சியும் நிம்மதியும் இல்லாமல் போகிறது இதை சில ஜோடிகள், கணவன் தனியாகவும் மனைவி தனியாகவும், அவரவர் அனுபவங்களையும் உணர்ச்சிகளையும் மூடிமறைக்காமல் வெளிப்படையாகப் பேசுகிற தன்மையில் எழுதப்பட்ட நாவல் அது. கதை மாந்தர் ஒவ்வொருவரும் தனித்தனியாக உண்மைகளை எடுத்துக் கூறுவதாக அமைந்திருக்கும். அழகான உவமைகள், கற்பனைநயம், கவிதைத் தன்மை கொண்ட இனிய நடை, சுவாரசியமான கதை அமைப்பு, ரசம் மிகுந்த விவரிப்புகள் எல்லாம் வாசகர்களைப் பெரிதும் ஈர்த்தன.

'கருகிய மொட்டு' நாவல் குறித்து பாராட்டுரைகளும், கடுமையான விமர்சனங்களும் பத்திரிகைகளில் வெளிவந்தன. காண்டேகர் விஷயங்களைப் பச்சையாக எழுதியிருக்கிறார் என்று அநேகர் குறிப்பிட்டார்கள். கு.ப.ராஜகோபாலன் அந்த நாவல் குறித்து கிராம ஊழியன் இதழில் நீண்ட விமர்சனக் கட்டுரை எழுதினார்.

'பச்சையாவது, வெள்ளையாவது! வியத்தமாக எழுதியிருக்கிறார் என்று சொல்லலாம்' என்று குறிப்பிட்டு, காண்டேகர் ஆண் பெண் உணர்வுகளையும் உறவுகளையும் பற்றிய உண்மைகளைச் சரிவர எழுதவில்லை என்றும், நாவல் முழுவதும் காண்டேகர்தான் பேசுகிறாரே தவிர, பாத்திரங்கள் பேசவில்லை என்றும், இன்னும் பலவாறாகவும் கு.பரா. விமர்சித்திருந்தார். ஆண் பெண் உறவுகள், உணர்ச்சிகளை அடிப்படையாக்கி அவர் 'கருகாத மொட்டு' என்றொரு நாவல் எழுதத் திட்ட மிட்டார். அவர் எழுதத் தொடங்கிய நாவல் அரைகுறையாக நின்று போயிற்று. அதற்குள் அவர் மரணம் அடைந்தது தான் காரணம் ஆகும்.

காண்டேகர் பாணியில் தமிழில் சிலர் நாவல்கள் எழுதினார்கள். தொ.மு.சி.ரகுநாதன் எழுதிய நாவல்கள் மிகுந்த கவனிப்புப் பெற்றன. புயல், கன்னிகா, முதல் இரவு என்று அவர் எழுதிய நாவல்களில், 'முதல் இரவு' அதிகமான பரபரப்பை ஏற்படுத்தியது. அது ஆபாசமான நாவல் என்று கூறி அன்றையத் தமிழக அரசு அந்தப் புத்தகத்துக்குத் தடை விதித்தது குறிப்பிடப்பட வேண்டிய செய்தியாகும்.

'கிராம ஊழியன்' பொங்கல் மலருக்குக் கதை, கட்டுரை கேட்பதற்காக திருலோக சீதாராமும் நானும் போய் சந்தித்தவர்களுள் கா.சீ.வேங்கடரமணியும் ஒருவர். மயிலாப்பூர்

அலர்மேல் மங்காபுரத்தில் அவர் வசித்து வந்தார். 'பாரத மணி' என்ற பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தார். கிராம முன்னேற்றம், கிராம சமுதாய மறுமலர்ச்சி போன்ற இலட்சிய நோக்கத்துடன் அவர் வெகுகாலமாக எழுதிவந்தார். காந்தீய நெறிமுறைகளை ஆதரித்தார். முதலில் ஆங்கிலத்தில்தான் அவர் கட்டுரைகள், நாவல்கள் எழுதிவந்தார். அத்தகைய சிந்தனை நூல்களை லண்டன் மாநகர் வெளியீட்டாளர்களான மேக்மில்லன் கம்பெனியார் பிரசுரித்துப் பரப்பினார்கள்.

ஆரம்பத்தில் கா.சீ.வேங்கடரமணி மாயவரத்தில் இருந்தவாறே புத்தகங்கள் எழுதிக் கொண்டிருந்தார். 'பாரதமணி' பத்திகையையும் நடத்தி வந்தார். பிறகு வளர்ச்சி கருதி அவர் சென்னைக்குக் குடியேறினார். அவருடைய பாரதமணி இதழ் லாபகரமாக நடக்கவில்லை. பரவலாக அது அறியப்பட்டிருக்கவும் இல்லை. அவரே மெலிந்து தளர்ந்து தான் காணப்பட்டார்.

நாங்கள் சென்ற வேளையில் அவர் சோர்வாக ஈஸிச்சேரில் சாய்ந்திருந்தார். உற்சாகமின்றிப் பேசினார். பத்திரிகை நடத்துவதில் உள்ள சிரமங்களைச் சொன்னார்.

நான் பரமக்குடியில் வசித்த வருடங்களில் கா.சீ.வேங்கடரமணியின் ஆங்கில நூல்களைப் படித்து, அவருடைய சிந்தனைகளை ரசித்து வியந்திருந்தேன். அவர் ஆங்கிலத்தில் எழுதி, வேறு ஒருவர் தமிழில் மொழிபெயர்த்து வெளிவந்திருந்த 'முருகன் ஓர் உழவன்' நாவலையும் படித்திருக்கிறேன். அந்த நாவல் மூலம் தமிழ்நாட்டில் பிரபலமடைந்த ஆசிரியரை நேரில் பார்த்துப் பேசக்கூடிய வாய்ப்பு கிட்டியது, என் உள்ளத்தில் உவகை மலரச் செய்தது.

ஒரு நாள் பேராசிரியர் கே.சுவாமிநாதனைக் காணச் சென்றோம். மாநிலக் கல்லூரியின் ஆங்கிலப் பேராசிரியரான அவர், தமிழ் இலக்கியத்திலும் ஈடுபாடு கொண்டு, தமிழில் கட்டுரைகள் எழுதலானார். 'கட்டை வண்டி' என்று அவர் எழுதிய நாடகம் மிகுந்த கவனிப்பைப் பெற்றிருந்தது. மலருக்குக் கட்டுரை எழுதி தர அவர் இசைவு தெரிவித்தார்.

பேராசிரியர் வீட்டில் பேசிக்கொண்டிருந்தபோது, வையாபுரிப் பிள்ளையும் பெ.நா. அப்புஸ்வாமியும் அங்கு வந்தார்கள். எங்கள் இருவரையும் பேராசிரியர் அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். பி.ஸ்ரீ ஆச்சார்யாவை ஒரு நாள் அவர் வீட்டில் கண்டு பேசினோம். இப்படியாக அந்நாளில் பெயர்பெற்றிருந்த

அறிஞர்களை சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது மகிழ்ச்சியான அனுபவமாகவே இருந்தது.

சென்னையிலிருந்து காரைக்குடி சென்று தொழில் புரிந்த சக்தி காரியாலயம் மீண்டும் சென்னைக்கு வந்திருந்தது. இதன் அலுவலகம் பவளக்காரத் தெருவில் இருந்தது. ‘சக்தி’ பத்திரிகையின் ஆசிரியரான தி.ஜ.ர.வைக் காண்பதற்காக நாங்கள் அங்கேயே போனோம். அச்சமயம் மஞ்சேரி ஈஸ்வரனும் அங்கு இருந்தார். அவரிடமும் மலருக்குக் கதை கேட்டார் திருலோகம். அவருடைய வீட்டு விலாசத்தைக் கேட்டுக் குறித்துக் கொண்டார்.

அன்று இரவே மஞ்சேரி ஈஸ்வரனைப் பார்க்கப் போவோம் என்று திருலோகம் என்னையும் அழைத்துச் சென்றார். அவர் வீடு எழும்பூரில், பஞ்சவடி என்ற பகுதியில் இருந்தது. இருட்டில் சிரமப்பட்டுத் தெருவைக் கண்டுபிடித்து ஈஸ்வரன் வீட்டையும் கண்டுபிடித்தோம். அவர் வீட்டில் இருந்தார்.

அந்த நேரத்தில் எங்கள் இருவரையும் அவர் எதிர்பார்க்கவில்லை. ஆச்சர்யம் அடைந்தார். ஏது இவ்வளவு தூரம் என்று கேட்டார். கிராம ஊழியன் மலருக்குக் கதை கேட்கலாம் என்றுதான் வந்தோம் என்று திருலோகம் சொன்னார்.

‘அது தான் சக்தி காரியாலயத்தில் இருந்த போதே கேட்டீர்களே. நானும் எழுதித் தருவதாகச் சொன்னேனே’ என்றார் ஈஸ்வரன்.

‘ஏதோ பார்த்த இடத்தில் கேட்டதை மரியாதைக் குறைவாக எண்ணிவிடக் கூடாது. அதற்காகத்தான் வீட்டிற்கே வந்து உங்களிடம் கதை கேட்க வேண்டும் என்று வந்தோம்’.

ஈஸ்வரன் உளநெகிழ்ச்சி அடைந்தார். ‘அப்படி எல்லாம் நான் நினைக்க மாட்டேன்’ என்றார்.

மஞ்சேரி ஈஸ்வரன் பெரிய எழுத்தாளர். ஆங்கிலத்தில் கதைகள் எழுதிப் பெயர் பெற்றிருந்தார். தமிழிலும் அவரது கதைகள் வெளிவந்தன. ‘சக்தி’யில் அவருடைய கதைகள் அடிக்கடி பிரசுரம் பெற்றன. அவற்றை எல்லாம் தி.ஜ.ர. தமிழாக்கியதாக அவரே சொன்னார்.

மஞ்சேரி ஈஸ்வரன் கதைகள் 1930களில் தினமணி மலர்களிலும் வெளியாகியிருந்தன. மறக்க முடியாத கதைகள் அவை, அவற்றை நான் குறிப்பிட்டுச் சொன்னேன். அவர் வியப்பும் மகிழ்ச்சியும் தெரிவித்தார். ‘எப்பவோ வந்த கதைகளைப் படித்து, நன்றாக

ஞாபகம் வைத்திருந்து சொல்கிறீர்களே! எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது' என்றார்.

நாங்கள் விடைபெற்றுப் புறப்படும்போதும், 'மலருக்கு நீங்கள் அவசியம் கதை எழுதி அனுப்ப வேண்டும், மறந்துவிடக் கூடாது' என்று திருலோகம் நினைவுபடுத்தினார்.

'மறக்க முடியுமா என்ன? நல்ல இந்திய ரசிகர்களான நீங்கள் இரண்டு பேரும் இருட்டில் சிரமப்பட்டு வீடு தேடி என்னைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறீர்கள். கட்டாயம் கதை எழுதி அனுப்புவேன்' என்று ஈஸ்வரன் உறுதி கூறினார்.

ஆனாலும் மலருக்கு அவர் கதை எழுதி அனுப்பவில்லை.

எழுத்தாளர் க.நா. சுப்ரமணியத்தை கீமர் அன் கம்பெனியில் போய்ப் பார்த்தோம். அவர் அங்கு பணிபுரிந்து கொண்டிருந்தார். சரித்திரத்தில் காணப்படுகிற சிறு விஷயங்களை சின்னக்குறிப்பு அல்லது தகவலை வைத்துக் கொண்டு ரசமான கதைகள் எழுதி வந்தார் அவர். 'தோட்டியை மணந்த ராஜகுமாரி' என்ற பெயரில் அவருடைய சிறுகதைகள் புத்தகமாக வந்திருந்தன. 'கட்டபொம்மு வரலாற்றை ஆராய்ந்து ஒரு நூலும் எழுதியிருந்தார். வறண்ட தன்மையில் அமைந்த வரலாறு அது. கட்டபொம்மன் வரலாற்றுக் கதைகளில் காணப்பட்ட உணர்ச்சி வேகமும் விறுவிறுப்பும் அதில் இல்லை. எனவே அதைக் 'காயடித்த கட்டபொம்மு' என்று புதுமைப்பித்தன் குறிப்பிட்டுள்ளார்.

சென்னை எழுத்தாளர்கள் பலரையும், திருலோக சீதாராம் உதவியோடு, ஒரு முறை சந்தித்ததுதான். நான் மீண்டும் அவர்களைப் பார்த்துப் பேசவேண்டும் என்று விரும்பியதில்லை. ஆனால் புதுமைப்பித்தனைப் பல தடவைகள் அவர் வீட்டுக்குப் போய் பார்க்க நேரிட்டது. அதற்கான காரணமே வேறு.

கிராம ஊழியன் மலருக்குக் கதை கேட்பதற்காகத் திருலோகமும் நானும் புதுமைப்பித்தனைத் தேடிப் போனோம் ஒருநாள் ராயப்பேட்டை நெடுஞ்சாலையில் உள்ள ஒரு வீட்டில் அவர் மனைவியோடு குடியிருந்தார். ரோட்டடி வீடு.

திருலோகம் அவரிடம் என்னைப் பற்றிச் சொன்னார். 'ஓ, நான் இவர் எழுத்துக்களைப் படித்திருக்கிறேன்' என்றார் அவர். மலருக்குக் கதை கேட்டார் திருலோகம். 'கதையோ அல்லது வேறு எதுவோ எழுதி அனுப்புகிறேன் என்று புதுமைப்பித்தன்

சொன்னார். பிறகு பேச்சோடு பேச்சாக, திருலோகம் 'நீங்கள் ஒரு உதவி பண்ணவேண்டும். இவருடைய அண்ணன், கோமதிநாயகம் என்று பெயர், வேலை இல்லாமல் சும்மா இருக்கிறார். நன்றாக மொழிபெயர்க்கக் கூடியவர். சொந்தமாகவும் எழுதுவார். நீங்கள் அவருக்கு தினசரியில் வேலை வாங்கித் தந்தால் உதவியாக இருக்கும்' என்று கோரிக்கை வைத்தார்.

'அதுக்கென்ன! எடிட்டர் கிட்டே சொல்லி முடிந்ததைச் செய்கிறேன். ஒரு வாரம் கழித்து வந்து பாருங்க' என்று புதுமைப்பித்தன் கூறினார்.

நாங்கள் விடைபெற்று வந்தோம். ஒரு வாரத்துக்குப் பிறகு நான் மட்டும் புதுமைப் பித்தன் வீட்டுக்குப் போனேன். திருலோகம் துறையூர் போய்விட்டார்.

என்னைக் கண்டதும் புதுமைப்பித்தன், 'நான் மலருக்கு விஷயம் அனுப்பிவிட்டேனே' என்றார். 'அதற்காக நான் வரலே என் அண்ணனுக்கு தினசரியில் வேலை விஷயமாக.....'என ஆரம்பித்தேன்.

'ஓ அதுவா? நான் இன்னும் எடிட்டரிடம் பேசவில்லை, பார்த்துச் சொல்கிறேன். இன்னொரு நாள் வாங்க' என்று கூறி என்னை அனுப்பி வைத்தார்.

நானும் நாலைந்து தடவை போனேன். ஒவ்வொரு முறையும் 'எடிட்டர் ஊரில் இல்லை' 'நான் இன்னும் அது பற்றி எடிட்டரிடம் சொல்லவில்லை' என்று ஏதாவது சொல்லி, மற்று மொரு நாள் வரும்படி கூறி அனுப்பிவிடுவார். எங்கள் சந்திப்பு இந்த ரீதியில் அமைந்திருந்ததே தவிர, பத்திரிகைகள்- புத்தகம்- எழுத்து- இலக்கியம் சம்பந்தப்பட்டதாக இருந்ததில்லை. பிறகு நான் அவரைப் பார்க்கப் போகவில்லை.

பொதுவாக எந்த எழுத்தாளரையும், அல்லது பத்திரிகை ஆசிரியரையும் போய்ப் பார்க்க வேண்டும், கண்டு பேச வேண்டும் என்ற அவா எனக்கு என்றுமே இருந்ததில்லை. அவர்களுடைய எழுத்துக்களை பத்திரிகைகளிலும் புத்தகங்களிலும் படிப்பதில் தான் எனக்கு நாட்டம் அதிகமிருந்தது.

கிராம ஊழியன் பொங்கல் மலருக்கு புதுமைப்பித்தன் ஒரு கவிதை அனுப்பியிருந்தார். வேளூர் வெ. கந்தசாமிக் கவிராயர் என்ற பெயரில் அவர் அதை எழுதியிருந்தார். 'உண்டுண்டு கடவுளுக்குக் கண் உண்டு; கண்ணோ நெருப்பு வைக்க' எனத் தொடங்கி எட்டு

வரிகளில் முடிந்திருந்தது அந்தக் கவிதை. அதுதான் புதுமைப்பித்தனின் முதல் கவிதை.

திருலோக சீதாராம் சென்னையில் தங்கியிருந்தபோது, ஒவ்வொரு நாளும், நீங்கள் கிராம ஊழியனுக்கு வந்துவிடுவது தான் நல்லது. நான் துறையூருக்குப் புறப்படும்போது என் கூடவே வந்து விடுங்கள்' என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

அவர் துறையூருக்குப் புறப்பட்ட நாளன்றும் அதையே தான் சொன்னார். 'நவசக்தி சரிவர நடக்காது. கிராம ஊழியன் லிமிட்டெட் கம்பெனியால் நடத்தப்படுகிறது. அது நீண்டகாலம் நடக்கும். நீங்கள் ஊழியனில் சேர்வதே உசிதமானது' என்றும் வலியுறுத்தினார்.

நண்பர் சக்திதாசன் என்னைச் சென்னைக்கு வரும்படி அழைத்தார். நான் வந்துள்ளபோது அவர் இல்லை. அவரைப் பார்க்காது, அவரிடம் கலந்து ஆலோசிக்காது நான் வருவதற்கில்லை. அப்படி வருவது முறையல்ல என்றே எனக்குத் தோன்றுகிறது என்று சொன்னேன்.

'உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள். நன்றாக யோசித்து நல்ல முடிவெடுங்கள்' என்று கூறிப் பிரிந்தார் திருலோகம்.

நான் தனியாகவே சுற்றி சென்னை நகரைத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் கொண்டேன். பல இடங்களுக்கும் போனேன். இன்றைய ஜனப்பெருக்கமும், போக்குவரத்து வேகவாகனங்களின் மிகு எண்ணிக்கையும், அதனால் நெரிசலும் நெருக்கடியும் இல்லாதிருந்த நகரம் அது. மவுன்ட் ரோடில் கூட அங்கங்கே ஓங்கி வளர்ந்த மரங்கள் நின்ற காலம். திருவல்லிக்கேணியில் தென்னந்தோப்புகளும் கள்ளுக்கடைகளும் அதிகம் தென்பட்ட காலமும் கூட.

பக்கிங்காம் கால்வாயில் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது அந்த நீர்வழியில் படகுகள் போய் வந்தன. 'தண்ணீர்த்துறை மார்க்கெட்' டுக்குக் காய்கறிகளும், வாழை இலைக்கட்டுகளும் படகுகள் மூலம் வந்திறங்கின. தனிப்படகுகளில் அதிகம் அதிகமாக சவுக்குக்கட்டைகள் வந்தன. கால்வாய் வழியாகப் படகில் மகாபலிபுரம் போய் வர வசதியும் இருந்தது. ஒரு முழுநிலவு இரவில் கவிஞர் பாரதிதாசனும் மற்றும் சில இலக்கிய நண்பர்களும் படகில் பயணம் செய்து மகாபலிபுரம் போய் வந்தார்கள். அந்த அனுபவத்தைக் கவிஞர் ஒரு கவிதையாகப் பாடியிருக்கிறார். காலப்போக்கில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன.

திருவல்லிக்கேணி பெல்ஸ் ரோடில் 'ஜோதி நிலையம்' என்ற பதிப்பகம் இருந்தது. அ.கி. ஜயராமன் நடத்திய புத்தக வெளியீட்டு நிறுவனம் அது. அவர் இந்தியிலிருந்து மொழி பெயர்த்த நாவல்களையும் நாடகங்களையும் தொடர்ந்து வெளியிட்டார். க.நா.சுப்ரமண்யம், புதுமைப்பித்தன் முதலியவர்களது படைப்புகளையும் புத்தகங்களாக்கினார். சர்வதேசக்கதை மலர்கள் என்று பலநாடுகளின் கதைகளையும் தமிழாக்கி எட்டணா விலையில் ஜோதி நிலையம் வெளியிட்டு வந்தது. தரமான இலக்கிய வெளியீடுகள் அவை.

நான் அ.கி. ஜயராமனை சந்தித்தேன். 'சினிமா உலகம்' பி.எஸ்.செட்டியார் மூலம் அவர் என்னைப் பற்றி அறிந்திருந்தார். கலைமகளில் வந்த எனது கதைகளையும் அவர் படித்து ரசித்திருந்தார். அவர் என்னை வரவேற்று அன்புடன் உரையாடினார். புத்தகங்கள் தந்தார்.

ஜோதி நிலைய வெளியீடுகள் எனக்குத் தொடர்ந்து அன்பளிப்பாகக் கிடைத்துக் கொண்டிருந்தன. அ.கி.ஜ.வின் அன்பளிப்பு நூல்கள் வெகுகாலம் வரை வந்து எனது நூல் நிலையத்தை வளம் செய்தன.

ஆங்கில நூல்கள் படிப்பதற்கு கே. ராமநாதன் உதவி புரிந்தார். 'யுனிவர்சிட்டி லைபிரரியில் புத்தகங்கள் எடுத்துப் படிக்கலாம். ஒரு நண்பர் கார்டு வைத்திருக்கிறார். அவர் அதை உபயோகிப்பதில்லை. நான் அந்தக் கார்டை வாங்கித் தருகிறேன். நீங்கள் ரஷ்ய இலக்கியங்களை விருப்பம் போல் எடுத்துப் படிக்கலாம்' என்று கூறினார். அவ்வாறே டி. செஞ்சையா என்பவரின் லைபிரரி கார்டை வாங்கி வந்து என்னிடம் தந்தார்.

நான் யுனிவர்சிட்டி லைபிரரிக்குப் போய், டாஸ்டாவ்ஸ்கியின் 'க்ரைம் அன்ட் பனிஷ்மென்ட்' நாவலை எடுத்து வந்து படித்தேன். அடுத்து, இவான் துர்கனேவ் நாவல்களைத் தேடி எடுத்தேன். அப்புறம் புஷ்கின் படைப்பு ஒன்றை எடுத்து வந்தேன்.

திடீரென்று ஒருநாள், அப்படி புத்தகம் எடுத்து வந்தபோது 'நீங்கள் தான் டி.செஞ்சையாவா?' என்று நூலகர் கேட்டார். இல்லை; அவருக்காக நான் புத்தகம் எடுக்கிறேன் என்றேன்.

'அப்படியானால் அடுத்த முறை செஞ்சையாவிடமிருந்து கடிதம் வாங்கி வரவேண்டும்' என்று நூலகர் தெரிவித்தார்.

நான் இவ்விவரத்தை ராமநாதனிடம் சொன்னேன்.

'சிரமம் எதுவுமில்லை. செஞ்சையாவிடமிருந்து நான் கடிதம் வாங்கித் தருகிறேன்' என்றார் நண்பர்.

அவ்விதமே வாங்கித் தந்தார். 'இந்தக் கடிதம் கொண்டு வருபவரிடம் எனது கார்டுக்கு லைபிரரி புத்தகங்கள் கொடுத்து உதவும்படி கேட்டுக் கொள்கிறேன்' என்று பொதுப்படையாக அக்கடிதம் எழுதப்பட்டிருந்தது.

அதை வாங்கிக் கொண்ட நூலகர் இரண்டுமுறை எதுவும் சொல்லவில்லை. நான் போலண்ட் சிறுகதைகள், ரஷ்யச் சிறுகதைகள் நூல்களை எடுத்துவந்தேன்.

நூலகர் மீண்டும் குறுக்கிட்டார். 'டிசெஞ்சையா தான் இந்தப் புத்தகங்களை எடுத்து வரச் சொன்னாரா?' என்று கேட்டார். இல்லை என்றேன்.

'இனிமேல் ஒவ்வொரு முறையும், குறிப்பிட்ட இன்னபுத்தகம் வேண்டும் என்று செஞ்சையாவிடமிருந்து கடிதம் வாங்கி வரவேண்டும். அப்பதான் புத்தகம் தரமுடியும்' என்று அவர் உறுதியாக அறிவித்தார்.

இதையும் நான் ராமநாதனிடம் கூறினேன்.

'கொடுக்காவிட்டால் போகட்டும். தொடர்ந்து ரஷ்ய ஆசிரியர்களின் புத்தகங்களையே எடுப்பதால், நாம் ஏதோ புரட்சிக்கு ஆயத்தம் செய்கிறோம் என்று அந்த ஆள் எண்ணி விட்டார் போலிருக்கு' என்று சொல்லிச் சிரித்தார் நண்பர்.

எடுத்து வந்த புத்தகத்தைப் படித்து விட்டுத் திருப்பிக் கொடுத்ததோடு எனது லைபிரரித் தொடர்பு முற்றுப் பெற்றது. விதிகள், கட்டுப்பாடுகள் என்றெல்லாம் வைத்துக் கொண்டு, பழக விரும்புகிறவர்களின் ஆசைக்கும் ஆர்வத்துக்கும் தடை போடுகிற லைபிரரிகளின் உதவியை இனி நாடப் போவதில்லை. நான் படிக்க விரும்புகிற புத்தகங்களைப் புதுசுபுதுசாக நானே விலை கொடுத்து வாங்கிப் படித்துக் கொள்வேன் என்று உறுதிபூண்டது என் மனம்.

யுனிவர்சிட்டி லைபிரரிக்குப் போய் புத்தகம் எடுத்துக் கொண்டு திரும்புகிற ஒவ்வொரு தடவையும் நான் திருவல்லிக்கேணி பெல்ஸ்ரோடு சென்று, ஜோதி நிலையத்தில் அ.கி. ஜயராமனுடன் பேசிக் கொண்டிருப்பதை வழக்கமாக்கினேன்.

அந்நேரங்களில் அங்கே வரக்கூடிய எழுத்தாளர்கள் சிலரின் அறிமுகம் எனக்குக் கிட்டியது. ந.சிதம்பரசுப்ரமணியன் அப்படித் தான் அறிமுகமானார். சங்கீதத்தை அடிப்படையாகக் கொண்டும், உளவியல் ரீதியிலும் அழகான சிறுகதைகள் பலவற்றை அவர் எழுதியிருந்தார். 'சக்கரவாகம்' என்ற பெயரில் அவை தொகுப்பாக வந்திருந்தன. பிற்காலத்தில் 'இதயநாதம்' எனும் நல்ல நாவலை-சங்கீதத்தை நாதோபசனையாகக் கொண்டு வாழ்ந்த ஒரு இசை மேதையின் வாழ்க்கை அனுபவங்களைச் சித்தரிப்பது ஆக்கிப் புகழ்பெற்றார் அவர். 'மணிக்கொடி' சிறுகதைப் பத்திரிகை நடந்த காலத்தில் மணிக்கொடிக்கு அவ்வப்போது பணஉதவி செய்தவர் அவர் என்று மணிக்கொடி வரலாற்றில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஒரு தடவை ப.ராமஸ்வாமியை சந்திக்க நேர்ந்தது. பி.எஸ். ராமையா கால மணிக்கொடிக்குப் பிறகு, அந்த இதழின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுப் பத்திரிகையைத் தொடர்ந்து சிறிது காலம் நடத்தியவர் அவர். ப.ரா. என்று அறியப்பட்டிருந்தார், திருநெல்வேலிக்காரர். பிற்காலத்தில் திருநெல்வேலி நகரசபையில் தலைவராகி, நகரவளர்ச்சிக்குப் பல நன்மைகள் செய்த பெருமையும் அவருக்கு உண்டு. மணிக்கொடி ஆசிரியராக இருந்த சமயத்தில், மைக்கேல் காலின்ஸ், சீனா முதலிய புத்தகங்களை எழுதி, அவற்றை நவயுகப் பிரசுராலய வெளியீடுகளாகப் பிரசுரித்திருந்தார். அந்த லிமிட்டெட் நிறுவனத்தைப் பொறுப்பாகக் கவனித்து வந்தவரும் அவரே.

'சினிமா உலகம்' பொங்கல் மலருக்கு விளம்பரங்கள் சேகரிப்பதற்காகச் சென்னை வந்த பி.எஸ். செட்டியார். ஒருநாள் நவசக்தி அலுவலகத்துக்கு என்னைத் தேடி வந்தார். அங்கே இருந்தவர்களிடம் சொல்லிவிட்டு என்னை அழைத்துக்கொண்டு கிளம்பினார்.

காலை நேரம் ஒரு ஓட்டலில் பூரி கிழங்கு காபி சாப்பிட்டோம். செட்டியார் பேசிக் கொண்டே சாப்பிட்டார். 'நீங்கள் ஊருக்குப் போறதா சொல்லிவிட்டு சென்னைக்கு வந்து விட்டது எங்களுக்கெல்லாம் வருத்தம் தந்தது. அப்படிப் புறப்படுகிற அன்று கூட ராத்திரி 10 மணி வரை விழித்திருந்து கடிதங்கள் எழுதி டைப் செய்து எல்லாவற்றையும் ஒழுங்கு படுத்தி விட்டு வந்ததைப் பற்றி வீட்டிலே அடிக்கடி சொல்லுவாங்க. நான் சென்னைக்குப் போறேன், கட்டாயம் போயாகணும் என்று என்னிடம் நேரடியாகவே சொல்லியிருக்கலாம். அப்படிச் சொன்னால் நான் அதை அனுமதித்திருக்க மாட்டேன் என்கிற

நினைப்பிலே நீங்க இது மாதிரி செய்திருக்கீங்க. அதுவும் சரிதான். "சினிமா உலகத்தை" இன்னும் நல்லபடியா நடத்தணும். இலக்கியப் பத்திரிகை நடத்தணும். புத்தகங்கள் பப்ளிஷ் பண்ணணும்னு எனக்கும் ஆசையாத்தான் இருக்கு. ஆனால் பொருளாதாரம் இடம் கொடுக்கலே.'

இந்த ரீதியில் செட்டியார் பேசினார். 'நீங்க நல்லா வளர்ந்து முன்னுக்கு வரணும்கிறதுதான் என் விருப்பம். உங்களை மாதிரி நல்ல திறமையுள்ள அசிஸ்டன்ட் எனக்குக் கிடைக்க மாட்டாங்க. இருந்தாலும், உங்களுக்குத் தெரிந்த தகுதியான ஒருவரைச் சொல்லுங்க. சினிமா உலகத்துக்கு உதவியாக ஒரு ஆள் வேண்டும்' என்று கேட்டுக்கொண்டார்.

நான் என் அண்ணா கோமதி நாயகத்தைப் பரிந்துரைத்தேன். அவர் உடனடியாக ஏற்றுக் கொண்டார்.

'ஓ, உங்க அண்ணனை எனக்குத் தெரியும். உடனேயே அவருக்குக் கடிதம் எழுதி அவரை வரவழைத்துக் கொள்கிறேன் என்று செட்டியார் மகிழ்ச்சியோடு சொன்னார்.

அவ்வாறே விரைவிலேயே அவர் அண்ணா கோமதி நாயகத்தை கோயம்புத்தூருக்கு வரவழைத்து 'சினிமா உலகம்' பத்திரிகைக்கு உதவி ஆசிரியராக ஆக்கினார்.

உரிய காலத்தில் சக்திதாசன் சுப்பிரமணியன் இலங்கை யிலிருந்து திரும்பினார். மகிழ்ச்சியோடு காணப்பட்டார். இதழ் வேலைகள் உற்சாகமாக நடைபெற்றன. ராதாமணி அம்மையார் கூட, 'நவசக்தி'யை அப்படி ஆக்கணும் இப்படி ஆக்கணும் என்று பத்திரிகை வளர்ச்சி குறித்துப் பெரும் கனவுகளுடன் திட்டமிடுவார்.

ஜனவரி இதழ் வந்தது. பிப்ரவரி இதழுக்கான வேலைகள் தொடர்ந்தன. நான் தயக்கம் கொள்ளாது, காலம் கடத்தாது, துறையூருக்கு வந்துவிட வேண்டும் என்று திருலோக சீதாராம் தொடர்ந்து கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தார்.

இந்நிலையில் நாடக நடிகர் டி.கே.சண்முகத்திடமிருந்து ஒரு கடிதமும் நாடகக் கலை மாநாட்டுக்கான அழைப்பும் வந்தன. முதலாவது நாடகக் கலை மாநாட்டைப் பெரிய அளவில், ஈரோடில் சிறப்பாக நடத்த ஏற்பாடாகியிருந்தது. மாநாட்டுக்கு நான் கட்டாயம் வரவேண்டும் என்றும், அப்போது முக்கியமான ஒரு விஷயம் பற்றிப் பேசி முடிவு எடுக்க வேண்டும் என்றும் சண்முகம்

எழுதியிருந்தார். சக்திதாசனிடம் சொல்லிவிட்டு நான் ஈரோடு போனேன்.

நாடகக் கலை மாநாடு வெகு சிறப்பாக நடைபெற்றது. பொருளாதார அறிஞர் ஆர்.கே. சண்முகம் செட்டியார் தலைமை வகித்தார். நாவலாசிரியர் ஆர். சண்முகசுந்தரமும் அவர் தம்பி ஆர். திருஞானசம்பந்தமும் தொடங்கி சிரமத்துடன் நடத்திவந்த 'வசந்தம்' எனும் இலக்கிய மாத இதழை நடத்தும் பொறுப்பை செட்டியார் ஏற்றுக் கொண்டிருந்தார். அவர் பெயர் 'கௌரவ ஆசிரியர்' என்று பத்திரிகையில் அச்சிடப்பட்டு வந்தது. சிலப்பதிகாரம் காவியத்துக்கு விரிவுரை- விளக்க உரை ஆர்.கே. சண்முகம் செட்டியார் பெயரில் இதழ்தோறும் வெளிவந்து கொண்டிருந்தது. உண்மையில் அதைத் தமிழ்ப் பண்டிதர் ஒருவர் எழுதி வந்தார் என்ற பேச்சும் பரவிவந்தது. மாநாட்டின் தலைமை உரையின்போது, அவர் 'வசந்தம்' பத்திரிகை நடத்துவதையும், அதில் சிலப்பதிகாரம் விளக்க உரை எழுதுவதையும் பெருமையாகச் சொன்ன சண்முகம் செட்டியார், அந்த மாதத்திய 'வசந்தம்' இதழையும் உயர்த்திப் பிடித்து அனைவருக்கும் காட்டி மகிழ்ந்தார்.

திராவிடக் கழகப் பேச்சாளர் சி.என். அண்ணாதுரை சிறப்புரை ஆற்றினார். 'சிரிப்பு நடிகர்' என்.எஸ்.கிருஷ்ணன், நாடகங்கள் எழுதிப் பெயர் பெற்றிருந்த பேராசிரியர் சி.ஆர். மயிலேறு முதலியவர்கள் பேசினார்கள். தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. நாடகக் கலை வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டு 'நாடகம்' என்றொரு மாத இதழ் வெளியிட வேண்டும் என்பதும் ஒரு தீர்மானம்.

அது விஷயமாகப் பேசத்தான் டி.கே.சண்முகம் என்னை அழைத்திருந்தார். அந்தச் சந்தர்ப்பத்தில் முறையான பத்திரிகை புதிதாகத் தொடங்கி நடத்துவதற்கு அரசு அனுமதி கிடைக்காது. அதனால் 'குமரி மலர்' மாதிரி 'மாதம் ஒரு புத்தகம்' எனக் கொண்டு வரலாம். நிலைமை சீர்பட்டதும் அதையே பத்திரிகையாக மாற்றிக் கொள்ளலாம். டி.கே.எஸ். நாடக சபை தான் அந்த இதழின் பொறுப்பை ஏற்று நடத்தும். அதன் ஆசிரியப் பொறுப்பை நான் ஏற்றுச் செயல் புரிய வேண்டும் என்று சண்முகம் என்னைக் கேட்டுக் கொண்டார்.

நான் தயங்கினேன். நண்பர் சண்முகம் உற்சாகமூட்டினார். 'நாடகம்' இதழுக்கு வளமான எதிர்காலம் இருக்கும் என்று நம்பிக்கை அளித்தார். சரி, வருகிறேன் என்று சொல்லி வைத்தேன்

ஆரம்ப ஏற்பாடுகளை எல்லாம் செய்து விட்டு எனக்குக் கடிதம் எழுதுவதாக அவர் உறுதி கூறினார்.

நாடகக் கலை மாநாட்டுக்கு திருச்சியிலிருந்து 'கலாமோகினி வி.ரா.ராஜகோபாலனும் வந்திருந்தார். மகிழ்ச்சியோடு பேசிப்பழகினார். போகிறபோது, நீங்கள் திருச்சி வந்துவிட்டு சென்னை போகலாம் என்று என்னை அழைத்தார். நான் அவரோடு திருச்சி சென்றேன்.

பத்திரிகைகளில் கதை, கவிதை எழுதுகிறவர்களில் சிலர் சுலபமாகப் பிரசுர வாய்ப்பும் பெயரும் பெற ஆசைப்படுகிறார்கள். அதனால் ஏற்கனவே வேறு யாராவது எழுதி வெளிவந்த நல்ல விஷயங்களைத் திருடி, தங்கள் சொந்தச் சரக்குபோல் பேர் பண்ணுவது அதிகரித்து வந்தது. நான் எழுதிய சில உருவகக் கதைகளைக் கவிதையாக மாற்றிய முயற்சிகள் பத்திரிகைகளில் வந்திருந்தன. அவை கலைமகள், கலாமோகினி இதழ்களிலேயே இடம் பெற்றிருந்தன. இவை பற்றி எல்லாம் பேசியவாறு பயணம் செய்தோம்.

'இதை எல்லாம் நீங்கள் கட்டுரையாக எழுத வேண்டும். சூடாக எழுதிக் கொடுங்கள். கலாமோகினியில் அம்பலம் என்ற தலைப்பில் அதை வெளியிடலாம்' என்று வி.ரா.ரா. சொன்னார். திருச்சியிலிருந்து திருநெல்வேலி போகலாம் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. இப்போது இதைச் சாக்கிட்டு ராஜவல்லிபுரம் போய், அங்கிருந்து கட்டுரையை எழுதிமுடிக்கலாம் என்ற நினைப்பு எழுந்தது.

அவ்வாறே ராஜவல்லிபுரம் சேர்ந்தேன். இக்காலகட்டத்தில் என் அம்மாவும் தம்பியும் அவ்வூரில் வசித்தார்கள். திருநெல்வேலியில் என் அண்ணா கோமதிநாயகம் வேலை பார்த்த மெடிக்கல் ஸ்டோர்ஸ் முதலாளியின் ஆணவப் போக்கும் அதிகாரக்கெடுபிடிகளும் பிடிக்காததால், அவரும் மற்றும் சிலரும் அந்த நிறுவனத்தை விட்டு விலகியிருந்தார்கள். அண்ணா வேலையை விட்ட சில நாள்களிலேயே அம்மாவும் சகோதரர்களும் ராஜவல்லிபுரத்தில் வசிக்கச் சென்றார்கள். பின்னர், 'சினிமா உலகம்' செட்டியாரின் அழைப்பின் பேரில் அண்ணா கோயம்புத்தூர் போய்விட்டார். பெரிய அண்ணாச்சி திருநெல்வேலியிலேயே இருந்தார்.

நான் ராஜவல்லிபுரத்தில் இருந்து பத்திரிகைகள் பலவற்றைப் பயன்படுத்தி, கதைகள் திருடிய எழுத்தாளர்கள் பற்றி விரிவாக

சான்றுகளுடன் ஒரு கட்டுரை எழுதினேன். அதை எடுத்துக் கொண்டு திருச்சி வந்து வி.ரா.ரா, விடம் கொடுத்தேன்.

கட்டுரையைப் படித்துப் பார்த்த நண்பர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். வருகிற 'காலமோகினி' இதழிலேயே அதை வெளியிடத் தீர்மானித்தார். அத்துடன் 'இவர் நமது அதிதி' என்று என்னைப் பற்றி எழுதி, அட்டையில் எனது படத்தை அச்சிடுவது என்றும் முடிவு செய்தார்.

அப்போது அங்கு வந்திருந்த நண்பர் மாருதி ராவை எனது சித்திரத்தை வரையும்படி செய்தார். மாருதி தான் 'கலாமோகினி'க்கு வேண்டிய சித்திரங்களை வரையும் ஓவியராகச் செயல்பட்டார்.

இந்த வேலை முடிந்ததும் நான் மீண்டும் சென்னை சேர்ந்தேன். விரைவிலேயே 'கலாமோகினி' இதழ் வந்தது. அம்பலம் பகுதியில் 'மாரீச இலக்கியம்' என்கிற எனது கட்டுரை பிரசுரம் பெற்றிருந்தது. அட்டையில் எனது படமும், உள்ளே 'இந்த மாதரி அதிதி' என்று என்னைப் பற்றிய கட்டுரையும் வந்திருந்தன.

'சினிமா உலகம்' பத்திரிகையில், மலர்களில் வந்த கட்டுரையில் எனது ஃபோட்டோ அச்சானது உண்டு. ஆயினும் அட்டைப் படமாக எனது சித்திரம் (என்னைப் பார்த்து தஞ்சாவூர் மாருதி வரைந்தது) முதன் முதலில் வெளிவந்தது 'கலாமோகினி' எனும் மறுமலர்ச்சி இலக்கிய இதழில் தான். இது எனக்கு அளவிலா மகிழ்ச்சி அளித்தது.

அந்தக் கட்டுரை பரபரப்பு ஏற்படுத்தியது. பத்திரிகை ஆசிரியர்கள் சிலரது மனக்கசப்பையும் பெற்றுத் தந்தது. அவர்களில் 'கலைமகள்' ஆசிரியர் கி.வா. ஜகந்நாதன் அவர்களும் ஒருவர் ஆவார். அதன் பயனாக சிறிது காலம் வரை அவர் எனது கதைகளை 'கலைமகள்' இதழில் வெளியிடாது ஒதுக்கித் தள்ளினார் என்பது குறிப்பிடத் தகுந்தது.

இக்கட்டுரை வந்த பிறகு, நான் கட்டாயம் 'கிராம ஊழியன்' பத்திரிகையில் பணிபுரிவதற்காக துறையூர் வந்தே ஆகவேண்டும் என்று திருலோக சீதாராம் உறுதியாகத் தெரிவித்தார். பத்திரிகையின் நிர்வாகி அ.வெ.ர.கி.ரெட்டியார் சென்னை வருகிறார், அவர் உங்களை அழைக்க வருவார். அவருடன் நீங்களும் புறப்பட்டு வரவேண்டும் என்று திருலோகம் கடிதம் எழுதினார்.

அதே நாளில் டி.கே. சண்முகம் கடிதம் வந்தது. 'நாடகம் இதழுக்கான வேலைகள் மும்முரமாக நடைபெறுகின்றன. நாடகங்களுக்குத் திரை ஓவியங்கள் ('சீன்கள்') வரைகிற ஓவியர் மாதவனிடம் அட்டைக்கான சித்திரம் தீட்டும்படி சொல்லியிருக்கிறோம். நீங்கள் எப்போது ஈரோடு வருகிறீர்கள் என்று அவர் கேட்டிருந்தார்.

நான் யோசித்தேன். 'நாடகம்' புதிதாக ஆரம்பித்து வளர்க்கப்பட வேண்டிய இதழ். அதில் நாடகம் மற்றும் கலைகள் பற்றிய விஷயங்களுக்கே முக்கியத்துவம் இருக்கும். டி.கே. சண்முகம் விருப்பம்போல்தான் கட்டுரைகள் எழுதிப் பத்திரிகை தயாரிக்க வேண்டியிருக்கும். நான் விரும்புகிற விதமெல்லாம் கதைகள் கட்டுரைகள் எழுதி வெளியிடுவதற்கான வாய்ப்பும் வசதியும் இரா. கிராம ஊழியன் ஏற்கனவே வந்து கொண்டிருக்கும் இலக்கியப் பத்திரிகை. மாதம் இருமுறை வருவது, வாசகர்கள் எழுத்தாளர்களிடையே நல்ல கவனிப்பையும் பெற்று வருகிறது. அதனால் நான் கிராம ஊழியனுக்குப் போவதே நல்லது என்று முடிவு செய்தேன்.

என் எண்ணத்தை டி.கே. சண்முகத்துக்கு எழுதித் தெரிவித்தேன். மறுவாரம் சென்னைக்கு வந்த சண்முகமும் டி.கே. பகவதியும் நவசக்தி அலுவலகம் வந்து என்னைச் சந்தித்தார்கள் நீங்கள் நாடகத்தைச் சாகடித்துவிட்டீர்கள். நாடகம் இதழைக் கருவிலேயே சிதைத்துவிட்ட பாபம் உங்களைச் சேரும்' என்று சண்முகம் சிரித்துக் கொண்டே சொன்னார்.

'உங்கள் துணையோடு நாடகம் இதழை சிறப்பாகக் கொண்டுவர முடியும் என்று எண்ணினோம். நீங்கள் வரவில்லை என்றதுமே எங்கள் நம்பிக்கை தளர்ந்து விட்டது. இப்போதைக்குப் பத்திரிகை ஆரம்பிக்க வேண்டாம் என்று முடிவு செய்துவிட்டோம் என்றும் அவர் கூறினார்.

'உங்கள் எழுத்தார்வத்துக்கும் திறமைக்கும் இலக்கியப் பத்திரிகையில் சேர்ந்து உழைப்பது தான் நல்லது. கிராம ஊழியன் உங்களுக்கு ஏற்ற இடம் தான். உங்கள் எதிர்காலம் சிறப்பாக அமையட்டும்' என்று வாழ்த்திவிட்டுச் சென்றார் சண்முகம்.

பிப்ரவரி கடைசி வாரத்தில், அ.வெ.ர.கி.ரெட்டியார் சென்னைக்கு வந்தார். அவரோடு ஊழியன் அச்சகத் தொழிலாளர் ஒருவரும் வந்திருந்தார். 'டவுனுக்குப் போய் அச்சு எழுத்துகளுக்கு ஆர்டர் கொடுக்க வேண்டும். பிளாக்குகள் செய்யும் கம்பெனிக்கும்

போகவேண்டும். இப்படிச் சில வேலைகள் இருக்கு. அதையெல்லாம் முடித்துவிட்டு சாயங்கால ரயிலில் போகவேண்டும். நீங்கள் தயாராக இருங்கள். நான் வந்து கூட்டிக் கொண்டு போவேன்' என்று என்னிடம் ரெட்டியார் தெரிவித்தார்.

சக்திதாசன், ராமநாதன் இருவரிடமும் அவர் பேசினார். கிராம ஊழியனுக்குச் சரியான உதவி ஆசிரியர் இல்லை. வல்லிக்கண்ணனை அழைத்துப் போகலாம் என்று வந்திருக்கிறேன். இங்கு தான் அவருக்கு வேலை இல்லையே. இன்று சாயங்காலம் அவர் என்னோடு வரட்டும் என்று கூறினார்.

சக்திதாசன் மறுப்பு எதுவும் சொல்லவில்லை. அப்படியே செய்யுங்க என்ற இசைவு தெரிவித்தார்.

ரெட்டியார் தனது அலுவல்களைக் கவனிப்பதற்காகப் புறப்பட்டுச் சென்றார். அவர் போனதும், 'என்ன, நீங்க துறையூர் போகப் போறீங்களா?' என்று சக்திதாசன் என்னைக் கேட்டார்.

நான் என் நிலையைச் சொன்னேன்.

'கிராம ஊழியன்' உங்களுக்கு ஏற்ற இடம் தான். இருந்தாலும் நீங்கள் இவ்வளவு விரைவில் பிரிந்து போவீர்கள் என்று நான் நினைக்கவில்லை, நவசக்தியை இன்னும் சிறப்பாக, இலக்கியத் தரத்தோடு கொண்டு வரவேண்டும் என்ற ஆசை எனக்கு, ராமநாதன் இப்போதைக்கு இங்கே இருக்கிறார். சீக்கிரமே அவர் வேறு இடம் போய் விடுவார். உங்கள் துணையோடு இதழை மேம்படுத்தலாம் என்று எண்ணியிருந்தேன். நீங்கள் இப்பவே போகிறேன் என்கிறீர்கள். சரி. போய் வாங்க. உங்கள் எதிர்காலம் வெற்றிகரமாக விளங்கட்டும்' என்று சோக உணர்வோடு பேசினார் சக்திதாசன்.

மாலையில் ரெட்டியார் வந்து என்னை அழைத்துக் கொண்டு சென்றார்.

இப்படியாக முடிந்தது எனது சென்னை வாழ்க்கை. 1943 டிசம்பரில் சென்னைக்கு வந்தேன். 1944 பிப்ரவரி இறுதியில் சென்னையைப் பிரிந்து சென்றேன். நிறைவாக மூன்று மாதங்கள் கூட நான் சென்னையில் வசிக்கவில்லை. அதற்குள்ளாகவே காலம் எனக்கு வேறு வழியைத் திறந்துவிட்டது.

# 7

சென்னையிலிருந்து ரயில் பயணம் செய்து திருச்சி சேர்ந்தோம். அங்கு மேலப் புலிவார் ரோடில் இருந்த, ரெட்டியாருக்குச் சொந்தமான வீட்டில் தங்கினோம். மறுநாள் துறையூர் பயணம் பஸ்சில்.

துறையூர், திருச்சிராப்பள்ளியில் இருந்து 28 மைல்கள் தள்ளி அமைந்துள்ள ஒரு சிற்றூர். எல்லா இடங்களையும் போல, அந்த ஊரும் இப்போது வேக வளர்ச்சி பெற்று, பெரும் மாறுதல்களுக்கு உள்ளாகிவிட்டது. ஆனால் அந்தக் காலத்தில் அது, வளர்ந்திருந்த ஒரு கிராமம் போன்ற சாதாரணத் தோற்றமே கொண்டிருந்தது பிற்காலத்தில், திருச்சிக்கும் துறையூருக்கும் பஸ்போக்குவரத்து அதிகரித்து, பல கம்பெனிகளின் பஸ்கள் ஓடலாயின. 1940 களில் ஜெயவிலாஸ் எனும் ஒரு தனியார் கம்பெனியில் இரண்டு பஸ்களே ஓடிக்கொண்டிருந்தன.

துறையூரில் இருந்து 'கிராம ஊழியன்' என்கிற மறுமலர்ச்சி இலக்கிய மாதம்இருமுறைப் பத்திரிகையை வெளியிடப் போகிறோம், அதற்கு உங்கள் வாழ்த்து வேண்டும் என்று கு.ப. ராஜகோபாலனும் திருலோக சீதாராமும் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரை அணுகினார்கள். அவர் வியப்புடன் கேட்டாராம், 'துறையூரிலிருந்தா? அந்த ஊரில் தபாலாபீஸ் இருக்கிறதா என்ன?' என்று. அவ்வளவுக்கு சாதாரண ஊராக இருந்தது அது.

எனினும், உயர்நிலைப்பள்ளிக்கூடம் ஒன்று, சினிமாத் தியேட்டர்கள் இரண்டு, சப் மாஜிஸ்ட்ரேட் கோர்ட், பெரிய தபாலாபீஸ் முதலியவற்றை அவ்வூர் பெற்றிருந்தது.

அந்த ஊருக்கு 1944 பிப்ரவரி கடைசியில் நான் வந்து சேர்ந்தேன். காலம் என்னை அங்கே கொண்டு சேர்த்தது என்று சொல்ல வேண்டும்.

கிராம ஊழியன் அச்சகம், பெரிய கொட்டகை போன்ற நீளமாக ஓட்டுக் கட்டிடத்தில் இயங்கிக் கொண்டிருந்தது. அதன் ஓர் ஓரத்தில் ஒரு சிறு அறை. நீண்ட கொட்டகையில் தான் ட்ரெடில் மிஷின், சிலிண்டர் மிஷின், அச்சு எழுத்துக்கள் கொண்ட ஸ்டாண்டுகள், மற்றும் அச்சாபீசுக்கு உரிய பல்வேறு சாமான்களும் இருந்தன. பத்திரிகை அச்சிடுவதுடன், வேறு பல வெளிவேலைகளையும் பில் புத்தகங்கள், திருமண அழைப்பிதழ்கள், முதலியன ஏற்றுச் செய்து கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அச்சுக் கோப்பவர்கள் (கம்பாசிடர்ஸ்), டிரெடில்மேன், சிலிண்டர் மிஷினை இயக்குகிறவர்கள், எடுபிடிப் பையன்கள் என்று ஆட்கள் பலர் வேலையில் இருந்தார்கள்.

ரெட்டியாரும், திருலோகமும் நிர்வாக அலுவல்களைக் கவனித்தார்கள். பத்திரிகைக்கு உதவி ஆசிரியராக நான் அமர்த்தப்பட்டேன். இதுவரை நான் பணிபுரிந்த பத்திரிகைகளில் எனக்கு மாதச் சம்பளம் இவ்வளவு என்று பேசப்பட்டதுமில்லை நியமன உத்திரவு என்று எதுவும் தரப்பட்டதும் இல்லை. இங்கே எல்லாம் முறைப்படி செய்யப்பட்டன.

கிராம ஊழியன் பத்திரிகையின் உதவி ஆசிரியராக இன்ன தேதியிலிருந்து நியமிக்கப்பட்டிருக்கிறார் என்று 'அப்பாயின்ட் மென்ட் ஆர்டர்' என்னிடம் தரப்பட்டது. மாதம் 25 ரூபாய் சம்பளம் என்று நிர்ணயிக்கப்பட்டிருந்தது. அந்தக் கட்டிடத்திலேயே நான் தங்கிக்கொண்டேன்.

ஊருக்கு வெளியே ஒரு பெரிய ஏரி இருந்தது. மழைபெய்தால் அதில் நீர் நிறைந்து கிடக்கும். ஊராருக்கும் குடி தண்ணீர் எடுப்பதற்கு என்று தனியாக அமைக்கப்பட்ட குளம் ஒன்று இருந்தது. பெண்கள் சதா அதிலிருந்து தண்ணீர் மொண்டு செல்வார்கள். அந்தக் குளத்தைக் கடந்துதான் ஏரிக்கரைக்குப் போகவேண்டும். ஏரி விசாலமானது. கரையும் உயரமாக நீண்டதூரத்துக்கு அமைந்திருந்தது. பக்கத்து ஊர்களுக்கு இட்டுச் செல்கிற பாதையாகவும் அது இருந்தது.

ஏரியில் தண்ணீர் பெருகிக் கிடக்கிற காலத்தில் அதில் வசதியாகக் குளிக்கலாம். ஏரி வறண்டு கிடக்கும் சமயங்களில், வயல்களைத் தேடிப் போக வேண்டும். அங்கே விவசாயத்துக்காகக் கிணறுகள் வெட்டப்பட்டிருக்கும். அவற்றில் இறங்குவதற்கு வசதி செய்யப்பட்டிருக்கும். அக்கிணறுகள் எதிலாவது குளித்துவிட்டுத் திரும்பலாம்.

துறையூர் வயல்களில் புளிச்சை பயிரிடப்பட்டு வளர்ந்து நிற்கும். புளிச்சைக் கீரையை (இலைகளை) மக்கள் சமையலுக்கு பயன்படுத்தினார்கள். புளிச்சை முற்றிய பிறகு அதன் தண்டிலிருந்து நார் எடுப்பார்கள். அந்த நாரில் கயிறு முறுக்குவர். புளிச்சை நார்க்கயிறு கட்டில் பின்னுவதற்கும் இதர பல உபயோகங்களுக்கும் பயன்பட்டது.

நான் அதிகாலையில் எழுந்து, ஏரிப்பக்கம் போவேன். ஏரியில் தண்ணீர் கிடந்தால் அதில் குளிப்பேன். ஏரி வற்றிக்கிடந்த சமயங்களில், வயல் வயலாக அலைந்து, ஆள் இல்லாத வசதியான கிணறாகப் பார்த்து, குளித்து விட்டுத் திரும்புவேன்.

துறையூரில் ஓட்டல்கள் பல இருந்தன. சாப்பாட்டு வசதிக்குக் குறைவில்லை. சிறிது காலம், ரெட்டியாருக்கு அலுவலகத்துக்கு வீட்டிலிருந்து கொண்ட வரப்பட்ட சாப்பாட்டில் எனக்கும் சேர்த்து வந்தது. வீட்டில் சவுகரியப்படாது போனதும், நல்ல ஓட்டல் ஒன்றில் மாதச் சாப்பாட்டுக்கு ரெட்டியாரே பேசி ஏற்பாடு செய்தார். என்றும் உணவு விஷயம் எனக்கு ஒரு பிரச்சினையாக இருந்ததில்லை. அதே மாதிரித்தான் தங்குமிடமும். அனைத்து விதங்களையும் அனுசரித்து திருப்தி அடையக் கற்றிருந்தது என் மனம்.

மாலை வேளையில் ஏரிக்கரை மீது தனியாக வெகு தூரம் நடந்து திரும்புவதை வழக்கமாக்கினேன். அமைதியான சூழ்நிலை இயற்கை அழகு கொலுவிருந்த பிரதேசம். எனவே, மாலை உலா மனசுக்கு நலமாக இருந்தது.

'கிராம ஊழியன்' மறுமலர்ச்சி இலக்கிய இதழாக மாற்றப்பட்ட பிறகு, ஒரு வருட காலம் சிறிய அளவு (கிரவுன்சைஸ்) பத்திரிகையாக வெளிவந்தது. 1944 ஏப்ரல் முதல் அதைப் பெரிய அளவில் (டெம்மி சைஸ்- ஆனந்த விகடன் மாதிரி) கொண்டு வருவது என்று திட்டமிடப்பட்டது.

கு.ப. ராஜகோபாலன் கும்பகோணத்தில் தங்கியவாறே ஊழியனுக்கு அதிகமான விஷயங்கள் அனுப்பிக் கொண்டிருந்தார். கதை, கட்டுரை, நாடகம், வரலாறு (மகாராஷ்டிர வீரன் சத்ரபதி சிவாஜியின் கதை) என்று பலவகைப்பட்டவை அவை. கு.ப.ரா, கரிச்சான், பரத்வாஜன் போன்ற பல பெயர்களில் அவர் அவற்றை எழுதினார். ஏனோ அவர் 'கிராம ஊழியன்' இதழில் வசனகவிதை எதுவும் எழுதவில்லை. ஆனால் 'கலாமோகினி'யில் அவருடைய கவிதைகள் தொடர்ந்து வந்துகொண்டிருந்தன.

ஊழியனில் ந. பிச்சமூர்த்தி அடிக்கடி கவிதை எழுதிவந்தார். எப்பவாவது கதையும் எழுதினார்.

அந்நாள்களில் ந.பிச்சமூர்த்தியும் கு.ப.ராஜகோபாலனும் "மறுமலர்ச்சி இலக்கிய இரட்டையர்" என்று குறிப்பிடப்பட்டனர். இருவரும் ஒன்றாகக் கும்பகோணத்தில் அருகருகே வசித்ததும் ஒரு காரணம். இரண்டு பேரும் 'மணிக்கொடி எழுத்தாளர்கள்'. புதுமையான சிறுகதைகளும், தமிழில் புதுமுயற்சியான வசனகவிதையும் எழுதுவதில் ஈடுபாடும் உற்சாகமும் கொண்டிருந்தார்கள். கால ஓட்டத்தில், பிச்சமூர்த்தி வாழ்க்கை நிர்ப்பந்தம் காரணமாக ஒரு உத்தியோகம் தேடிக்கொண்டு அவ் வேலை நிமித்தமாக வெளியூர் சென்று வெவ்வேறு ஊர்களில் வசிக்க நேரிட்டது.

கு.ப. ராஜகோபலன் குடும்பத்தோடு கும்பகோணத்திலேயே தங்கியிருந்தார். அங்கிருந்தே பத்திரிகைகளுக்கு எழுதிக் கொண்டிருந்தார். கஷ்ட ஜீவனம் தான். ஆயினும் இலக்கிய ஆர்வம் அவருக்கு உற்சாகம் அளித்து வந்தது. அவரைச் சுற்றி இலக்கிய ரசிகர்களும், இளைய எழுத்தாளர்களும் கூடியிருந்து அவரது பேச்சைக் கேட்டு மகிழ்ந்தனர்.

அப்படிப்பட்டவர்களின் எழுத்து முயற்சிகளை குபரா.ஏற்று கிராம ஊழியன் இதழில் வெளியிடுவதற்காக அனுப்பி வைத்தார். தி.ஜானகிராமன், கரிச்சான்குஞ்சு என்று பெயர் சூடிக்கொண்ட ஆர். நாராயணஸ்வாமி, கி.ரா.கோபாலன், எம்.வி.வெங்கடராம் முதலானோரின் எழுத்துக்கள் குபரா.வாயிலாக ஊழியனுக்கு வந்து கொண்டிருந்தன.

தி. ஜானகிராமன் அப்போதுதான் எழுதத் தொடங்கியிருந்தார். 'அமிர்தம்' என்ற பெயரில் ஒரு நாவல் எழுதினார். அவருடைய முதல் நாவல் அது. கிராம ஊழியனில் தொடர்கதையாகப் பிரசுரம் பெற்றது. தி.ஜா.ஒரு பள்ளிக்கூடத்தில் ஆசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார்.

நாராயணஸ்வாமியும் பள்ளி ஆசிரியர் தான். அவரும் அப்போது தான் எழுத்து முயற்சியில் ஈடுபட்டிருந்தார். அவர் குபரா.வைத் தன் குருவாக வரித்துக் கொண்டார். குபரா.கரிச்சான் என்ற புனைபெயர் வைத்திருந்தார். அவருடைய சீடர் எனும் முறையில் நாராயணஸ்வாமி தனக்கு 'கரிச்சான்குஞ்சு' என்ற பெயரை வைத்துக் கொண்டார்.

எம்.வி. வெங்கட்ராம் மாணவப் பருவத்திலேயே எழுதத் தொடங்கியிருந்தார். அவருடைய சிறுகதைகள் ஏற்கனவே ‘மணிக்கொடி’யில் தொடர்ந்து வெளிவந்து அவர் பெயரைக் கவனிப்புக்கு உரியதாக்கியிருந்தன. படிப்பை முடித்ததும், அவர் பம்பாய் நகரம் சேர்ந்து ஜரிகை வியாபாரத்தில் ஈடுபட்டார். அவர் சௌராஷ்டிர இனத்தைச் சேர்ந்தவர். தொழிலை வெற்றிகரமாக நடத்தினார். பலவிதமான அனுபவங்களும் பெற்றார். பல வருடங்களுக்குப் பிறகு அவர் கும்பகோணத்துக்குத் திரும்பினார். பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதலானார். அவருடைய சிறு கதைகள் ‘கலாமோகினி’ இதழில் தொடர்ந்து வந்தன. கு.ப.ரா. அவரிடமிருந்து கதைகள் பெற்று கிராம ஊழியனுக்கு அனுப்பி வந்தார்.

கும்பகோணம் ஓவியக் கல்லூரியில் பயின்று கொண்டிருந்த கோபுலு, ஸாரதி போன்ற இளம் ஓவியர்களுக்கும் கு.ப.ரா. ஊக்கம் அளித்தார். கதைகளும் சித்திரங்கள் தீட்டச் செய்து, அவற்றையும் ஊழியனில் பிரசுரிப்பதற்காக அனுப்பிக் கொண்டிருந்தார்.

பிப்ரவரி இறுதியில் நான் துறையூர் சேர்ந்த பின்னர், மார்ச் மாதம் நடுவில் கு.ப.ரா. துறையூருக்கு வந்தார். அவருக்கு பணத்தேவை ஏற்பட்டிருந்தது. ஊழியன் நிர்வாகத்திடமிருந்து சிறு தொகை கேட்டுப்பெறும் எண்ணத்தோடு அவர் வந்தார். பணம் நிச்சயம் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு அவர் வந்திருந்தார். ஆனால் அவர் எண்ணம் நிறைவேறவில்லை. அவருக்குப் பணம் தர இசையவில்லை சம்பந்தப்பட்டவர்கள். அது அவருக்கு மிகுந்த ஏமாற்றம் தந்தது. அவர் மனச்சோர்வுடன் திரும்பிப் போனார். அதற்குப் பிறகு கு.ப.ரா. துறையூருக்கோ திருச்சிக்கோ வரவில்லை.

அந்தச் சந்தர்ப்பத்தில்தான் நான் கு.ப. ராஜகோபாலனைப் பார்த்தேன். அதுவே முதலும் கடைசியுமான சந்திப்பாக அமைந்துவிட்டது.

மனச்சோர்வுடன் கும்பகோணம் திரும்பிய கு.ப.ரா. நோய்வாய்ப்பட்டார். நோய் முற்றி, சிகிச்சை பலனளிக்காமல், ஏப்ரல் மாதம் அவர் இறந்து போனார்.

கு.ப. ராஜகோபாலனைப் பார்ப்பதற்கு முன்னதாக, ந. பிச்சமூர்த்தியை துறையூரில் சந்திக்கக்கூடிய வாய்ப்பு எனக்கு கிட்டியது. அந்நாள்களில் அவர், கோயில்களின் நிர்வாகத்தைப் பொறுப்பேற்றுக் கவனித்த அறங்காவல் துறையில் பணிபுரிந்து கொண்டிருந்தார். ‘கிராம ஊழியன்’ காலத்தில், துறையூருக்கு

அருகில் இருந்த செட்டிகுளம் என்ற ஊரில் கோயில் நிர்வாக அதிகாரியாக அவர் பொறுப்பு வகித்தார். கோயில் சம்பந்தமான வழக்குகள் துறையூர் முனிசீப் கோர்ட்டில் நடைபெறும். அவ் வழக்குகளின் விசாரணையின்போது அவர் கோர்ட்டுக்கு வரவேண்டியது அவசியமாயிற்று. அப்படிக் கடமையாற்று வதற்காக பிச்சமூர்த்தி அடிக்கடி துறையூர் வந்து போனார். அப்போதெல்லாம் அவர் அ.வெ.ர.கி. ரெட்டியார் வீட்டில் தங்கினார். இரண்டு மூன்று நாள்கள் கூட அவர் தங்குவது உண்டு. அப்போதெல்லாம் அவர் ஊழியன் அலுவலகத்துக்கு வந்து வெகுநேரம் பேசிக்கொண்டிருப்பது வழக்கம்.

1936 முதலே நான் ந.பிச்சமூர்த்தியின் எழுத்துக்களால் ஈர்க்கப்பட்டிருந்தேன். மணிக்கொடி பத்திரிகையில் வெளிவந்திருந்த அவருடைய சிறுகதைகளும் வசனகவிதைகளும் என்னை வசீகரித்திருந்தன. 1937ல் 'தினமணி' ஆண்டு மலரில் இடம் பெற்றிருந்த 'பிக்ஷு' வின் 'கிளிக்கூண்டு' எனும் வசனகவிதை என்னில் மிகுந்த தாக்கம் ஏற்படுத்தியது. நானும் கவிதை எழுத வேண்டும் என்ற உந்துதலை அது என்னுள் ஏற்படுத்தியது.

ஆகவே பிச்சமூர்த்தியின் அறிமுகமும் அவருடன் பேசிப் பழகக் கூடிய வாய்ப்பும் கிட்டியது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. கழுத்து வரை தொங்கும் தலைமுடியும் நீண்ட தாடியுமாக அவர் ஒரு ரிஷிபோல் காட்சியளித்தார். அவருடைய முகத்தோற்றம் கவி தாகூரின் சாயலைக் கொண்டிருந்தது. ஆனால் தாகூர் நல்ல உயரம். பிக்ஷு உயரமானவரில்லை.

அவர் என்னிடம் சகஜமாகப் பேசிப் பழகினார். வயது வித்தியாசம் பாராட்டாமல் இனிய நண்பராகவே அவர் நடந்து கொண்டார். ஊழியன் இதழுக்குத் தொடர்ந்து கவிதைகள், கட்டுரைகள் எழுதி உதவினார். 'மனநிழல்' என்கிற புதுமையான கதையும் அல்லாத கட்டுரையும் இல்லாத, ஆயினும் இரண்டின் தன்மைகளையும் கொண்டிருந்த வாழ்க்கைச் சித்திரங்களை அதிகம் எழுதித் தந்தார்.

கிராம ஊழியன் பொங்கல் மலர் மூலம் விளம்பர வருமானம் கிடைத்திருந்தது. அதனால், ஆண்டு மலர் எனச் சிறப்பு மலர் ஒன்றைத் தயாரித்து விளம்பரங்கள் அதிகம் சேகரிக்கலாம், அதன் வாயிலாக பத்திரிகையின் வருமானத்தை அதிகப்படுத்தலாம் என்று திருலோகம் யோசனை கூறினார். ரெட்டியார் அதை ஏற்றுக் கொண்டார். மலருக்கான ஆரம்ப வேலைகள் உற்சாகமாகத் தொடங்கப்பட்டன.

'கிராம ஊழியன்' இதழ் வேலைகளும் வழக்கம்போல் நடந்தன. 1944 ஏப்ரல் இதழ் முதல் அதன் தோற்றம் மாறுதல் பெற்றது. டிம்மி சைஸில், அட்டை அமைப்பு புது 'டிசைன் ஏற்று இந்த வடிவ முதலாவது இதழில் கு.ப.ரா.படத்தை அட்டையில் வெளியிட்டு, அவரைப் பற்றிய கட்டுரைகள், கவிதைகள் உள்ளே பிரசுரிக்கப்பட்டன. அது கு.ப.ரா.வின் நினைவுச் சிறப்பிதழாக வெளிவந்தது.

கு.பராஜகோபாலன் இறந்து போனதால், சிரமப்பட்ட அவரது குடும்பத்துக்கு நிதிஉதவி செய்ய வேண்டியது அவசியம் என்று அவருடைய நண்பர்கள் கருதினார்கள். எனவே நிதி வசூல் முயற்சியும் மேற்கொள்ளப்பட்டது. சென்னையில் 'கலைமகள்' பத்திரிகையும் கு.ப.ரா.குடும்பத்துக்காக நிதி வசூலில் ஈடுபட்டிருந்தது.

பெரிதும் முயன்றும் நிதி அதிகம் சேரவில்லை. குறிப்பிட்ட காலம் வரை வசூலான தொகை கு.ப.ரா.குடும்பத்துக்கு வழங்கப்பட்டது. 'கலைமகள்' வசூலித்த நிதிமுயற்சிக்கும் குறைந்த அளவு தொகை தான் சேர்ந்தது. அதை அவர்கள் தனியாகக் கு.ப.ரா.குடும்பத்துக்கு அளித்தார்கள்.

இந்த சந்தர்ப்பத்தில் ந.பிச்சமூர்த்தி, கு.ப.ரா.இருவரின் நண்பரும், மற்றொரு 'மணிக்கொடி எழுத்தாள'ருமான 'சிட்டி' பெ.கோ.சுந்தரராஜன் துறையூருக்கு வந்தார். அவர் திருச்சி வானொலியில் பணிபுரிந்து கொண்டிருந்தார். சிட்டி என்ற பெயரில் நகைச்சுவைக் கட்டுரைகள் எழுதிப் பெயர் பெற்றிருந்தார் அவர். நையாண்டி செய்யும், 'கிண்டல் பண்ணும்' எழுத்துக்கள். அவை 'சிட்டியின் ரகளை' என்று குறிப்பிடப்பட்டன. அவரும் என்னை நண்பனாக ஏற்றுக்கொண்டு பழகினார்.

சிட்டியும் கிராம ஊழியனில் அடிக்கடி எழுதலானார். ரேடியோ நிலையத்தைச் சேர்ந்த வேறு சில நண்பர்களும் ஊழியனுக்கு எழுதி உதவினார்கள். இலங்கை அன்பர்கள் சிலர் மகிழ்ச்சியுடன் கவிதைகள் எழுதிக்கொண்டிருந்தார்கள்.

எழுத்தாளர்கள் பத்திரிகைக்காரர்கள் இலக்கிய நண்பர்களின் கவனிப்பையும் நன்மதிப்பையும் பெறும் விதத்தில் கிராம ஊழியன் விஷயச் சிறப்புடன் வளர்ந்து வந்தது. ஆயினும் அதன் பெயர் அதற்கு பாதகமாகவே அமைந்திருந்தது.

கிராம ஊழியன் என்ற பெயரைக் கேட்டதும் பார்த்ததும் அது கிராம நலனுக்கும் முன்னேற்றத்துக்கும் பாடுபடுகிற பத்திரிகையாக

இருக்கும் என்று பலரும் எண்ணுவதே இயல்பாக இருந்தது. அத்தகைய விஷயங்களை எதிர்பார்த்துப் பத்திரிகையை வாங்கியவர்கள், கிராம சம்பந்தமான எழுத்துக்கள் இடம் பெறாமல் என்னென்னவோ இருப்பதைக் கண்டு ஏமாற்றம் அடைந்தார்கள். இத்தகைய பாதிப்பைக் குறைப்பதற்காகவே 'கிராம' எனும் சொல்லை மிகச் சிறியதாகவும் 'ஊழியன்' என் பதைப் பெரிதாக எடுப்பாகவும் அச்சிட்டு வந்தார்கள். இலக்கியத்தில் ஆர்வமும் ஈடுபாடும் கொண்ட ரசிகர்கள் ஊழியனை வரவேற்று ரசித்துப் பாராட்டத் தவறவில்லை.

கு.ப. ராஜகோபாலனின் மரணத்துக்குப் பிறகு கும்பகோண எழுத்தாள அன்பர்கள் பத்திரிகைக்கு நீடித்த ஒத்துழைப்புத்தர விரும்பவில்லை. இதுவரை கு.ப.ரா.வுக்காக எழுதிக் கொடுத்தோம் இனியும் சும்மா எதற்காக எழுதவேண்டும். பணம் தந்தால் எழுதலாம் என்று அவர்களில் சிலர் கருதினார்கள். ஆனால், எழுத்தாளர்களுக்கு சன்மானம் அளிக்கக்கூடிய நிலையில் கிராம ஊழியன் இருந்ததில்லை.

எனவே, வழக்கமாக 'விஷயதானம்' செய்து கொண்டிருந்த பலர் தங்கள் பணியை நிறுத்திக் கொண்டார்கள். எனினும், தி.ஜானகிராமனும் எம்.வி. வெங்கடராமும் தொடர்ந்து தங்கள் எழுத்துக்களை அனுப்பி உதவினார்கள். 'அமிர்தம்' தொடர் கதை நிறைவு பெறும் வரை ஜானகிராமன் ஊழியனுக்கு எழுதிக் கொண்டிருந்தார். எம்.வி.வி.கதை, கவிதை, மொழிபெயர்ப்பு என்று நீண்டகாலம் எழுதினார். பெண்கள், பெண் உரிமை பற்றி சரத்சந்திரர் எழுதிய நூல் ஒன்றின் மொழிபெயர்ப்பு (எம்.வி. வெங்கடராம் தமிழாக்கம்) நெடுங்காலம் பிரசுரம் பெற்றது.

பத்திரிகை காலம் தவறாது மாதம் இருமுறை வந்தாகவேண்டும். எனவே நான் பல புனைபெயர்களில் அதிகமாக எழுத வேண்டியது அவசியமாயிற்று. அவ்வெழுத்துக்கள் வித்தியாசமானவையாக இருந்தன. உயிர்ப்பும் உணர்ச்சியும் வேகமும் புதுமையும் கொண்டிருந்தன. முக்கியமாக, நையாண்டிபாரதி என்ற பெயரில் நான் எழுதிய கட்டுரைகள் கட்டுப்பாடற்று தாராளமாகச் கொடுக்கப் பெற்ற கிண்டல்களும் நையாண்டியும் கலந்து ரசிக்கத்தக்கனவாக இருந்தன. அதனால் அவை பலரது பேச்சுக்கும் பொருளாயின. நையாண்டி பாரதி யார் என்று பலரும் கேட்கலாயினர்.

எனவே, இவர் தான் நையாண்டி பாரதி என்று ஒரு இதழில் போட்டோ அச்சிடப்பட்டது.

அந்த சமயத்தில் தான் பாரதிதாசன் துறையூருக்கு வந்தார். திருச்சிக்கு வந்த கவிஞரை துறையூர் அன்பர்கள் தங்கள் ஊருக்கும் அழைத்து வந்தார்கள். அவர், அ.வெ.ர.கி. ரெட்டியாரின் அழைப்பை ஏற்று கிராம ஊழியன் அலுவலகத்துக்கும் வந்தார். உரிய மரியாதைகளோடு கவிஞருக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. அவருடைய பாடல்களை அவரே பாடிக்காட்ட வேண்டும் எனும் வேண்டுகோளை ஏற்று பாரதிதாசன் தமது கவிதைகள் சிலவற்றைப் பாடிக் காட்டினார்.

பாரதியார் பாடல்களோடு பாரதிதாசன் பாடல்களையும் பாடிப்பரப்பி வந்த திருலோக சீதாராம் இந்தச் சமயத்தில் துறையூரில் இல்லை. ஆண்டு மலருக்கு விளம்பரம் சேகரிப்பதற்காகக் கோயம்புத்தூர் போயிருந்தார்.

கிராம ஊழியனில் 'உவமை நயம்' என்ற தலைப்பில் ஒவ்வொரு கவிஞரின் பாடல்களில் காணப்படுகிற உவமைகள் பற்றிய கட்டுரைகள் திருலோக சீதாராம் எழுதியிருந்தார். அடுத்து பாரதிதாசன் உவமைகள் பற்றி நான் தொடர்ந்து சில கட்டுரைகள் எழுதினேன்.

எழுத்துக்கள் மூலம் பெயர் கவனிப்பு அதிகம் பெற்றிருந்த தால், வல்லிக்கண்ணன் என்றால் வயது முதிர்ந்த பெரிய ஆளாக இருக்க வேண்டும் என்றே பலரும் எண்ணுவது இயல்பாக இருந்தது. ஆளை நேரில் பார்த்ததும், இவர் தான் வல்லிக்கண்ணன் என அறிமுகம் செய்யப்பெற்றதும் அநேகர் ஆச்சர்யப்பட்டார்கள். நம்புவதற்குத் தயங்கினார்கள். இது தொடர்ந்து நடந்து வந்தது.

கவிஞர் பாரதிதாசனும் அவ்விதமே உணர்ந்தார், 'வல்லிக்கண்ணனா!' என்று ஆச்சரியப்பட்டார். 'பையன் மாதிரி அல்லவா இருக்கிறே!' என்றார். 'உன் போட்டோவை பத்திரிகையில் வெளியிடாதே. எழுத்தைப் படித்து விட்டு எப்படி எல்லாமோ எண்ணியிருக்கிறவங்க ஏமாற்றம் அடைவார்கள்' என்று சொன்னார்.

'இவர் படம் வெளிவந்து விட்டது. ஊழியனிலேயே அச்சிட்டிருக்கிறோம்' என்று ரெட்டியார் கூறி, என் படம் வெளிவந்திருந்த ஊழியன் இதழைக் கவிஞரிடம் காட்டினார்.

அவர் அதைப் பார்த்து விட்டு, 'போகட்டும். இனிமேல் படம் வெளியிட வேண்டாம்' என்றார்.

பாரதிதாசன் உவமைநயம் பற்றி நான் எழுதிய கட்டுரைகள் தொகுக்கப் பெற்று 1945ல் புத்தகமாக வெளிவந்தது. பாரதிதாசன் கவிதைகள் குறித்து வெளிவந்த முதல் புத்தகம் அது தான். பாரதிதாசன் கவிதைகளை ஆய்வுசெய்த பேராசிரியர் ஒருவர் இச் செய்தியைத் தமது ஆய்வில் பதிவு செய்திருக்கிறார்.

கிராம ஊழியன் ஆண்டு மலர் வேலைகள் அவசரமின்றி மெதுவாகவே நடைபெற்று வந்தன. அதற்கு புதுமைப்பித்தன் ஒரு கவிதை அனுப்பியிருந்தார். வேளூர் வெ. கந்தசாமிக் கவிராயர் என்ற பெயரில் 'ஓடாதீர்!' என அவர் எழுதியிருந்த கவிதை வேகமும் சுவையும் கொண்ட அருமையான படைப்பு, மறைந்த எழுத்தாளர் கு.ப. ராஜகோபாலனுக்கு நிதி வசூல் முயற்சி நடந்து கொண்டிருந்த சமயம். எழுத்தாளன் வாழ்கிறபோது கவனிக்காமல் விட்டுவிட்டு, அவன் இறந்த பிறகு நிதி திரட்டுவது நினைவுச் சின்னம் வைப்பது என்று பெருமைப்படுத்துகிற காரியம் புதுமைப்பித்தனுக்குப் பிடிக்கவில்லை. அந்தப் போக்கைக் கண்டித்தும் நையாண்டி பண்ணியும் உணர்ச்சிகரமாக எழுதப்பட்ட நீண்ட கவிதை அது.

'ஓடாதீர்' கவிதை அச்சில் வருவதற்கு முன்னரே பரபரப்பான கவனிப்பைப் பெற்று விட்டது. அதற்குக் காரணம் திருலோக சீதாராம்தான். அதை அவர் மனப்பாடம் செய்து, போகிற இடங்களில் எல்லாம் அவருடை தனித்தன்மை வாய்ந்த குரலில் பாடிக்காட்டி, அனைவரையும் ரசிக்கச் செய்தார். கோயம்புத்தூரில் நடைபெற்ற தமிழ் எழுத்தாளர்களின் முதலாவது மாநாட்டு மேடையிலும் அவர் அந்தப் பாட்டை எடுப்பாகப் பாடினார்.

1944 இறுதியில் தமிழ் எழுத்தாளர்களின் முதலாவது மாநாடு, கோவை எழுத்தாளர்களான ஆர்.சண்முகசுந்தரம், ஆர். திருஞானசம்பந்தம் இருவரது தீவிர முயற்சியாலும், மற்றும் பலரது ஒத்துழைப்பாலும், கோயம்புத்தூரில் வெகு சிறப்பாக நடைபெற்றது. கோவையில் வசித்த விஞ்ஞானியும் தொழில் அதிபருமான ஜி.டி. நாயுடு மாநாட்டின் வெற்றிக்குப் பெரிதும் உதவினார். அவருடைய 'கோபால் பாக்' என்ற மாளிகையில் தான் அம்மாநாடு நடந்தது.

ஜி.டி. நாயுடு ஒரு விந்தை மனிதர். அவர் பரிசோதனைகள் செய்து, புதிய புதிய கண்டுபிடிப்புகள் மூலம், அற்புதமான பல ஆக்கங்களைப் படைத்தார். பப்பாளியில் மிக அதிகமான காய்களைப் பெரிது பெரிதாகக் காய்க்கச் செய்வது, தேய்வுறாமல் நீண்ட காலம் பயன்படக்கூடிய ரேஸர் பிளேட், மற்றும் புதிய

மாடல் கார்கள், மோட்டாருக்குத் தேவையான பாகங்கள் என்று ஏகப்பட்ட தயாரிப்புகளை அவர் உருவாக்கினார். அவை மலிவான விலையில் சந்தைக்கு வந்து மக்களுக்கு உதவுவதற்கு வகை செய்தார். ஆனால் அரசாங்கம் அவற்றை அங்கீகரிக்கவில்லை; அவருக்கு ஆதரவு தரவுமில்லை. மாறாக அவரது தயாரிப்புகளுக்கு மிகக் கடுமையான வரிகளை விதித்தது. அவர் வரிகட்ட மறுத்தார். அரசாங்கத்தோடு போராடினார். நாயுடு இறுதியில் அவரது கண்டுபிடிப்புகள் அனைத்தையும் அவரே சுத்தியலால் அடித்து நொறுக்கி அழித்தார். அப்படி அழித்து ஒழிப்பதற்கு முன்னதாக அவற்றைக் கண்காட்சிப் பொருள்களாக்கி மக்களின் பார்வைக்கு வைத்தார். 'அழிக்கப்படுவதற்காகவே செய்யப்பட்ட ஆக்கங்கள்' என அவை காட்சிப்படுத்தப்பட்டன. 'CONSTRUCTION FOR DESTRUCTION என்று பெரிதாக எழுதிவைக்கப் பட்டிருந்தது அந்தக் கண்காட்சியில்.

ஜி.டி. நாயுடு இலக்கிய ஆர்வம் உடையவராகவும் இருந்தார். எழுத்தாளர்களுக்கு மனமுவந்து உதவிகள் புரிய அவர் தயங்கியதில்லை. அந்த அதிசய மனிதர் எழுத்தாளர்களின் முதலாவது மாநாட்டுக்கும் தாராளமாகப் பொருளுதவி செய்தார்.

முதல் எழுத்தாளர் என்று அந்நாள்களில் பெருமைப் படுத்தப்பட்டிருந்த, வ.ரா.எனும் இரண்டு எழுத்துப் பெயரால் நன்கு அறியப்பட்டிருந்த, வ.ராமஸ்வாமி மாநாட்டுக்குத் தலைமை தாங்கினார். 'தினசரி' நாளிதழின் ஆசிரியர் டி.எஸ் சொக்கலிங்கம் சிறப்புரை ஆற்றினார். எழுத்தாளர்கள் பலர் தங்கள் கருத்துக்களை எடுத்துரைத்தனர். தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

எழுத்தாளர்கள் அனைவரும் தங்களைத் தாங்களே அறிமுகம் செய்து கொண்டது மாநாட்டின் சுவாரசியமான சிறப்பு நிகழ்ச்சியாக அமைந்திருந்தது. சிலர் புதுமையாகவும் ரசமாகவும் தங்களை அறிமுகம் செய்துகொண்டார்கள்.

ஒரு எழுத்தாளர், 'நான் எழுதியுள்ள கதைகள் கட்டுரைகள் கவிதைகள் பலப்பல பலபல, பலபல பலப்பல என்று அடுக்கினார் ஆனால் அவற்றில் பலப்பல பலபல அச்சில் வரவேயில்லை என்றார்.

'பிரசண்ட விகடன்' ஆசிரியர் நாரண துரைக்கண்ணன், 'துரதிர்ஷ்ட எழுத்தாளர்கள் வரிசையில் முதலில் நிற்பவன் நான்' என்று தனது அறிமுகத்தைத் தொடங்கி, தான் எழுத்துலகில் உரிய கவனிப்பு பெறாமல் இருந்ததைக் குறிப்பிட்டார்.

இப்படி அநேகர் வித்தியாசமான முறையில் தங்களை அறிமுகம் செய்து கொண்டனர், எனது அறிமுகம் அனைவரையும் வியப்புற வைத்தது. 'நான் தான் வல்லிக்கண்ணன், நான் தான் நையாண்டி பாரதி, நான் தான் ரா.சு.கி, நான் தான் கோரநாதன், நான் தான் மிவாஸ்கி, நான் தான் பிள்ளையார், நான் தான் சொக்கலிங்கம், நான் தான் வேதாந்தி, நான் தான் சொனா, முனா. நான் தான் கெண்டையன் பிள்ளை, நான் தான் கீராவதாரன், நான் தான் நடுத்தெரு நாராயணன், நான் தான் இளவல், நான் தான் ரா.சு.கிருஷ்ணசுவாமி' என்று அடுக்கினேன்.

ஏயம்மா, எத்தனை பெயர்கள்!... ஒருவனுக்கு இத்தனை புனைபெயர்களா... எல்லாப் பெயர்களிலும் ஒருவரே எழுதுகிறார் என்பது ஆச்சர்யமாகத் தானிருக்கு.... எதுக்காக இத்தனை பெயர்களை வைத்துக் கொள்ள வேண்டும்?- இப்படி வியந்தார்கள் பலரும்.

ஒருவர் இத்தனை பெயர்கள் வைத்துக் கொண்டு, நிறைய நிறைய எழுதணும் என்று ஆசைப்பட்டு எழுதினால், ரொம்பகாலம் தொடர்ந்து எழுத முடியாது, சீக்கிரமே ஓய்ந்துபோக நேரிடும் என்று சிலர் கருத்துத் தெரிவித்தார்கள்.

எப்படியோ, மாநாட்டிற்கு வந்திருந்தவர்களின் கவனத்தைக் கவர்ந்து, பேச்சுக்குப் பொருளாக முடிந்ததே என்ற சந்தோஷம் எனக்கு ஏற்பட்டது. நிறைய எழுத வேண்டும், நானே பத்திரிகை முழுவதையும் நிரப்ப வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டு நான் அதிகம் எழுதவில்லை. பத்திரிகையின் தேவை கருதி அப்படி எழுத வேண்டியதாயிற்று.

பத்திரிகைப் பொறுப்பேற்று எழுத நேர்கிற எந்த எழுத்தாளரும் தேவைக்காக அநேக பெயர்களில் எழுத வேண்டிய கட்டாயம் ஏற்படத்தான் செய்யும். 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி கல்கி, ரா.கி, கர்நாடகம், எமன் முதலிய பல பெயர்களில் எழுதிக் கொண்டிருந்தார். நாரண துரைக்கண்ணன், துரை, ஜீவா, லியோ, மைவண்ணன் என்றும் வேறு சில பெயர்களிலும் எழுதினார். இப்படி எத்தனையோ பேர் பல பெயர்களில் எழுதியிருக்கிறார்கள். நான் அதிக எண்ணிக்கையில் புனைப் பெயர்களை வைத்துக் கொண்டு எழுத நேர்ந்தது 'காலத்தின் கட்டாயம்'! அவ்வளவு தான்.

எழுத்தாளர். மாநாட்டின் மேடையில் நின்று திருலோக சீதாராம் புதுமைப்பித்தனின் 'ஓடாதீர்!' கவிதையை முழக்க மிட்டார். 'ஓகோ, உலகத்தீர்! ஓடாதீர்! உம்மைப்போல் நானும்

ஒருவன் காண்' என்று எழுத்தாளன் அறிவிப்பு செய்யும் கவிதை. குத்தலும் நையாண்டியும் சாடலும் நிறைந்தது. முடிவில் அது விடுத்த கோரிக்கை.

இத்தனைக்கும் மேலே
இன்னொன்று! நான்
செத்ததற்குப் பின்னால்
நிதிகள் திரட்டாதீர்!
நினைவை விளிம்பு கட்டி
சிலைகள் செய்யாதீர்!

இந்தக் கவிதைக்கும், திருலோகம் அதைப் பாடிய தோரணைக்கும் பிரமாத வரவேற்பு கிட்டியது. இது யார் பாடியது என்று வரா. கேட்டார். வேலூர் வெ. கந்தசாமிக் கவிராயர் என்று திருலோகம் மிடுக்காகச் சொன்னார். வரா. திகைப்பு அடைந்தார். யார் அது? யார் அது? என்று திரும்பத் திரும்பக் கேட்டார். அதன் பிறகு தான், புதுமைப்பித்தன் எழுதிய கவிதை இது. இன்னும் அச்சில் வரவில்லை எனத் திருலோகம் தெரிவித்தார்.

கிராம ஊழியன் ஆண்டு மலர் உரிய காலத்தில் வெளி வந்தது. அது தரமான இலக்கிய மலராக அமைந்து இலக்கியவாதிகளின் பாராட்டுக்களை அதிகம் பெற்றது.

மகாகவி பாரதியாரை அடுத்து வந்து, புகழ் பெற்றிருந்த கவிஞர்கள் அனைவரது கவிதைகளும் அம்மலரில் இடம் பெற்றிருந்தன. பாரதிதாசன், ச.து.சு.யோகியார், தேசிகவிநாயகம் பிள்ளை, நாமக்கல் வெ.ராமலிங்கம், கவியோகி சுத்தானந்த பாரதியார், கம்பதாசன் ஆகியோரின் படைப்புகள். அடுத்த தலைமுறைக் கவிஞர்களான கலைவாணன், சாலிவாகனன், மந்தஹாசன், தே.ப.பெருமாள், சுரபி ஆகியோரும் கவிதை விருந்து அளித்திருந்தனர். நபிச்சமூர்த்தி (பிக்ஷு) 'மகாகவிகள்' என்று ஐந்து பறவைகள் பற்றி தனித்தன்மையான கவிதை இயற்றியிருந்தார். சிறுகதைகள், கட்டுரைகளிலும் அந்த மலர் சிறந்து விளங்கியது.

அனைத்தினும் மேலாக விசேஷமாகக் குறிப்பிடப்பட வேண்டிய ஒரு சிறப்புத் தன்மையை கிராம ஊழியன் ஆண்டு மலர் பெற்றிருந்தது. தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் அக்காலத்தில் இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களுக்குக் கவனிப்பும், அவர்களுடைய எழுத்துக்கு வரவேற்பும் கொடுத்ததில்லை. 'கலைமகள்' அபூர்வமாக சம்பந்தன், சி. வைத்தியலிங்கம்

கதைகளை வெளியிட்டது. திறமையை நிரூபித்த இலங்கை எழுத்தாளர்களுக்கும் மலரில் இடம் அளிக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். அங்குள்ள படைப்பாளிகளுக்குக் கடிதம் எழுதினேன்.

அவர்களும் மகிழ்ச்சியுடன் ஒத்துழைப்பு தந்தார்கள். இலங்கையின் முன்னோடித் தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்களான சம்பந்தன், சி.வைத்தியலிங்கம், இலங்கையர்கோன் மூவரும் நல்ல சிறுகதைகள் எழுதி உதவினார்கள். சோ.தியாகராசா, ச.அம்பிகைபாகன் போன்றவைகள் கட்டுரைகள் தந்தார்கள். இளைய தலைமுறைப் படைப்பாளிகளும் கதை, கவிதை வழங்கியிருந்தனர்.

அந்நாள்களில் தமிழ்ப்பத்திரிகைகள் சிறப்பு மலர்கள் தயாரிக்கும்போது, மகாமகோபாத்தியாய உ.வே.சாமிநாதய்யர், சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் முதலிய மகாப்பெரியவர்கள், மற்றும் மந்திரிகள், அரசியல் தலைவர்களுக்கு முதலிடம் தந்து அவர்களுடைய எழுத்துக்களையே முதன்மையாக, வரிசையாக வெளியிட்டு வந்தன. இதை ஒரு மரபாகவே அவை கொண்டிருந்தன.

கிராம ஊழியன் மலர் அந்த மரபை மீறியது. இலங்கையைச் சேர்ந்த சாதாரண எழுத்தாளரான சோ. தியாகராசாவின் கட்டுரையை முதல் கட்டுரையாக வெளியிட்டது.

இதனால் எல்லாம் இலங்கை எழுத்தாளர்கள் கிராம ஊழியனையும் என்னையும் வெகுவாக மதித்துப் பாராட்டி மகிழ்ந்தார்கள். இலங்கையர்கோன், கிராம ஊழியனின் இறுதி இதழ் வரை சிறுகதை, நாடகம் என்று எழுதி உதவிக் கொண்டிருந்தார். இளைய படைப்பாளிகளும் உற்சாகமாக ஆதரவு தந்தார்கள்.

மீண்டும் காலம் எனது வளர்ச்சிக்கு வழி அமைத்துக் கொடுத்தது.

திருலோக சீதாராம் கிராம ஊழியனை விட்டுப் பிரிந்து செல்லத் தீர்மானித்தார். அவர் தமது வாழ்க்கை முன்னேற்றத்துக்காகச் சில திட்டங்கள் தீட்டியிருந்தார். அதைச் செயல்படுத்துவதற்காகத் துறையூரை விட்டுத் திருச்சிக்கே போய் விடுவதுதான் நல்லது என்று அவர் முடிவு செய்தார்.

திருச்சியில் 'சிவாஜி' என்றொரு வாரப்பத்திரிகை நடந்து கொண்டிருந்தது. வணிக சமூகத்துடன் தொடர்புடைய சிவஞானம் என்பவர் அதன் ஆசிரியராகவும் உரிமையாளராகவும் இருந்தார். சொந்த அச்சுக்கூடமும் வைத்திருந்தார். 'சிவாஜி' ரொம்ப சாதாரண இதழாக, திருச்சிவட்டார வணிக உலகச் செய்திகள் மற்றும் விளம்பரங்கள் கொண்டதாக, வந்து கொண்டிருந்தது.

திருலோக சீதாராம் சிவஞானத்துடன் பேசி, சிவாஜியைக் கவனிப்புக்கு உரிய எல்லோரும் மதிக்கக்கூடிய பத்திரிகையாக மாற்றிவிடலாம். அதன் வளர்ச்சி காரணமாக விளம்பர வருமானமும் கிடைக்கும் என்று கூறி அவருக்கு நம்பிக்கை ஊட்டினார். சிவாஜி இதழ், அச்சகம் இரண்டிலும் கூட்டாளியாகச் சேர்ந்தார். உழைக்கும் பங்காளியாகப் பொறுப்பேற்ற திருலோகம் தீவிரமுயற்சிகள் செய்து, சிவாஜியை விரைவிலேயே வளர்ச்சிப்பாதையில் முன்னேறும்படி செய்தார். அதிகமான பக்கங்களுடன் வெளிவரத்தொடங்கிய சிவாஜியில் முக்கிய எழுத்தாளர்கள் பலரும் எழுதினார்கள். என்னுடைய எழுத்துக்களும், கதை கட்டுரை, புதிய பகுதி, கேள்வி- பதில் என்று வாரம்தோறும் சிவாஜியில் இடம் பெற்றன.

சிவாஜிக்கு மேலும் பெருமை சேர்க்கவும், விளம்பர வருமானம் பெறுவதற்காகவும், சீதாராம் ஆண்டுமலர் வெளியிட்டார். ஆண்டுதோறும் மலர் வெளியிடுவதை ஒரு முக்கியப் பணிஆக்கிக் கொண்டார் அவர். சிவாஜி ஆண்டுமலர்கள் தரமான தயாரிப்புகளாக அமைந்திருந்தன. வழுவழு தாள்கள், பளபளச் சித்திரங்கள், கவர்ச்சி அம்சங்கள் எதுவுமில்லாது, பெயர்பெற்றிருந்த எழுத்தாளர்கள் பெரும்பாலரது தரமான - நயமான படைப்புகளை மிகுதியாகக் கொண்டிருந்தன அவை. இலக்கியவாதிகள் ரசிகர்கள் முதலானோரின் கவனிப்புக்கும் பேச்சுக்கும் உரியனவாக சிவாஜிமலர்கள் விளங்கின.

திருலோகம் கூட்டுச் சேர்ந்த பிறகு, சில மாதங்களிலேயே சிவஞானம் பத்திரிகை அச்சகம் ஆகியவற்றின் முழுப் பொறுப்பையும் அவரிடமே ஒப்படைத்துவிட்டு விலகிக்கொண்டார். அதனால் திருலோகம் 'சிவாஜி' யின் சொந்தக்காரர் ஆனார். அவருடைய ஆர்வம், உழைப்பு, ஆற்றல் எல்லாம் சேர்ந்து சிவாஜியை வெற்றிகரமாக முன்னடத்திச் சென்றன. சிவாஜி சீதாராம் என்ற பெருமையும் அவரை வந்தடைந்தது.

கிராம ஊழியன் வழக்கம்போல் மாதம் இருமுறை வெளிவந்து கொண்டிருந்தது. அ.வெ.ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் நிர்வாக ஆசிரியர், வல்லிக்கண்ணன் ஆசிரியர் என்று அறிவிக்கப்பட்டது. கும்பகோணம் எழுத்தாளர்கள் எழுதவில்லை. புதிய எழுத்தாளர்கள் சிலர் எழுதலானார்கள். ராசிபுரம் தனுஷ்கோடி, தி.க. சிவசங்கரன், என் அண்ணா அசோகன் (ரா.சு. கோமதி நாயகம்), சுப.நாராயணன், திருச்சி வானொலியில் பணிபுரிந்த சிட்டி, குகன், கே.பி.கணபதி (மாறன்) என்று அநேகரின் எழுத்துக்கள் ஊழியனுக்கு உயிரூட்டின. திருச்சி ரேடியோ நிலைய உதவி இயக்குநர் கு.ப. ரங்காச்சாரி, பராங்குசம் என்ற பெயரில், புதுமையான சிறுகதைகள் எழுதி உதவினார். நான் அதிகம் எழுத வேண்டியிருந்தது. வெவ்வேறு பெயர்களில் வித்தியாசமான நடைகளில், கதை கட்டுரை கவிதை நாடகம் என்று எழுதிக்கொண்டிருந்தேன்.

பாரதியின் வசனகவிதைப் படைப்புகளான 'காட்சிகள்' பாணியில், 'பாரதி அடிச்சுவட்டில்' எனும் தலைப்பில், இளவல் என்ற புனைபெயரில் நான் இதழ்தோறும் எழுதினேன். இவை மிகுந்த பாராட்டுதல்களைப் பெற்றுத் தந்தன. அதே சமயம் அதிகமான கண்டனங்களையும் குறைகூறல்களையும் பரிகசிப்புகளையும் எதிர்கொண்டன.

புத்தக மதிப்புரை ஊழியனின் சிறப்பான அம்சமாக விளங்கியது. அவற்றை நானே எழுதினேன். எனவே மதிப்புரைக்காகப் பல்வேறு பதிப்பகங்களும் புதிய வெளியீடுகளை அனுப்பிக் கொண்டிருந்தன.

தி.க.சி, துருவன் என்ற பெயரில், திரைப்பட விமர்சனங்களை சூடும் சுவையுமாக எழுதிவந்தார். அவ்வப்போது கவிதைகளும் எழுதினார். முச்சந்தி என்ற பகுதியில் பிள்ளையார் விவாதத்துக்கு உரிய பிரச்சினைகளை அலசினார். பிள்ளையார் என்பது என் புனைபெயர்களில் ஒன்று.

ரெட்டியார், கண்ணன், அ.வெ.ர.கி., தேவராய பூபதி என்ற பெயர்களில் அ.வெ.ர. கிருஷ்ணசாமி எழுதினார்.

கிராம ஊழியன் இதழ்கள் முக்கியமான எழுத்தாளர்கள், பத்திரிகைக்காரர்கள், புத்தக வெளியீட்டாளர்கள் முதலியோருக்கு இலவசமாக அனுப்பப்பட்டன. அதனால் எங்கள் எழுத்துக்கள் மிகப் பலரது கவனிப்புக்கும் விமர்சனத்துக்கும் உரியனவாயின.

இச்சந்தர்ப்பத்தில் டி.கே.எஸ். சகோதரர்களின் நாடக சபை திருச்சியில் முகாமிட்டு நாடகங்கள் நடத்தியது. புதிய நாடகங்களை அரங்கேற்றியது. நாரண துரைக்கண்ணன் எழுதிய 'உயிரோவியம்', ப.நீலகண்டன் நாடகம் 'முள்ளில் ரோஜா', ஆதிமூலம் எழுதிய 'மனிதன்', கி.ஆ.பெ.விசுவநாதம் மற்றும் ரா. வேங்கடாசலம் எழுதிய நாடகங்கள் என்று பல புதிதாக மேடை ஏற்றப்பட்டன. ஏற்கனவே அவர்களுக்குப் பெயர் வாங்கித் தந்திருந்த ஔவையார், சிவலீலா முதலிய நாடகங்களும் நடிக்கப் பெற்றன.

நடிகர் டி.கே. சண்முகம் நல்ல ரசிகர். இலக்கியங்களில் ஈடுபாடு உடையவர். பலரகமான நூல்களையும் விரும்பிப் படிக்கும் இயல்பினர். எழுத்தாளர்களின் நண்பர். அவர் எனது அன்புச் சகோதரர் ஆகியிருந்தார். அடிக்கடி சுவை நிறைந்த கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு நாடக மாற்றத்தின் போதும் அவர் எனக்குப் பணம் அனுப்பி புதிய நாடகத்தைக் கண்டு மகிழ்வதற்காக என்னை திருச்சிக்கு வரவழைப்பதை வழக்கமாக்கினார்.

நான் பார்த்த நாடகங்களைப் பற்றி ஊழியனில் விரிவான கட்டுரைகள் எழுதினேன். அவை வாசகர்களால் விரும்பி வரவேற்கப்பட்டன.

டி.கே.எஸ். சகோதரர்களின் நாடகங்கள் பற்றி நான் கிராம ஊழியனில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதியதால், நவாப் டி.எஸ். ராஜமாணிக்கமும் அவரது நாடகங்கள் குறித்து கட்டுரைகள் ஊழியனில் வரவேண்டும் என்று விரும்பினார். எனவே, நவாப் நாடகக் கம்பெனியான ஸ்ரீ தேவிபால விநோத நாடக சபை முகாமிட்டு நாடகங்கள் நடத்திய ஊர்களுக்கு வருமாறு அழைத்துப் பணமும் அனுப்பினார். அப்படி திருவனந்தபுரம், கொல்லம், கல்லிடைக்குறிச்சி ஆகிய ஊர்களுக்கு நவாபின் அழைப்பின் மீது போய், அவர் கம்பெனி நாடகங்களைக் கண்டு களித்தேன். அவை பற்றியும் ஊழியனில் கட்டுரைகள் எழுதினேன்.

கிராம ஊழியன் மாதமிருமுறை இதழ் விற்பனையாளர்கள் மூலம் விற்பனை செய்யப்படுவதற்காக முக்கியமான பல ஊர்களுக்கு அனுப்பப்பட்டு வந்தது. ஆயினும் அதிகமான விற்பனை அதற்கு இருந்ததில்லை. சந்தாதாரர்களும் குறைந்த எண்ணிக்கையினரே இருந்தனர். ஆயிரம் பிரதிகளுக்குள்ளே தான் ஊழியன் அச்சாயிற்று. தரமான வாசகர்கள் ஊழியன் வருகையை

எதிர்பார்த்தார்கள். அதில் வந்த விஷயங்கள் பற்றிப் பேசினார்கள். கடிதங்கள் எழுதினார்கள்.

சுப.நாராயணன் எழுதிய சிந்தனைக் கட்டுரைகள் நல்ல கவனிப்புப் பெற்றுவந்தன. வாழ்க்கை குறித்தும், சமூகம் மற்றும் பொருளாதாரப் பிரச்சினைகள் குறித்தும் அவர் தனித்தன்மையான கட்டுரைகள் எழுதிக் கொண்டிருந்தார். நல்ல திறமையாளர். அவர் வை. கோவிந்தன் நடத்திய 'சக்தி' அலுவலகத்தில் வேலை பார்த்தார்.

'சக்தி' ஆசிரியராகப் பணியாற்றிய தி.ஜ.ர. (தி.ஜ. ரங்கநாதன்) சக்தியிலிருந்து விலகி, புதிதாக ஆரம்பிக்கப்பட்டிருந்த 'மஞ்சரி' இதழின் ஆசிரியரானார். மஞ்சரி 'கலைமகள்' நிறுவனத்தின் பத்திரிகையாகத் தோன்றியது. அவருக்குப் பதிலாக, சுப.நாராயணன் 'சக்தி' ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அந்த நிலையிலும் அவர் ஊழியனின் ஒவ்வொரு இதழுக்கும் கட்டுரை எழுதி அனுப்பிக் கொண்டிருந்தார். 'சக்தி' மாத இதழுக்கு நான் கதை எழுதித் தரவேண்டும் என்று கேட்டு வாங்கி என் சிறு கதைகளைத் தொடர்ந்து வெளியிட்டார்.

'சக்தி'க்காக நான் எழுதிய கதைகள் சற்று வித்தியாச மானவையாக இருந்தன. வாழ்க்கையில் தென்படுகிற வேடிக்கை மனிதர்கள் பலரது விந்தை இயல்புகளையும், அவற்றினால் ஏற்படுகிற விநோதமான செயல்பாடுகளையும் நையாண்டித்தன்மையோடு சித்திரித்த கதைகள் அவை.

நான் விதம் விதமான கதைகளையும், புதிது புதிதான வாழ்க்கைச் சித்திரங்களையும் கட்டுரைகளையும் எழுத வேண்டும் என்றொரு உள்உந்துதல் பெற்றிருந்தேன். அந்த வேகம் சதா என்னை இயக்கிக் கொண்டிருந்தது. கிராம ஊழியன் மாதம் இருமுறை இதழுக்காக எழுதியதுடன், சிவாஜி வாரப்பத்திரிகைக்கும், சக்தி மாத இதழுக்கும் தொடர்ந்து எழுதிக்கொண்டிருந்தேன். அவ்வப்போது என் எழுத்துக்களை விரும்பிக்கேட்ட சில இதழ்களுக்கும் கதை, கட்டுரை என்று எழுதி அனுப்பிக் கொண்டிருந்தேன்.

பத்திரிகைகள் எனக்குப் பணம் தரவேண்டும் என்று எதிர்பார்த்ததில்லை. அவை எழுதுகிறவர்களுக்குப் பணம் கொடுக்கக் கூடிய நிலையில் இருந்ததுமில்லை. காலம் தவறாமல் ஒவ்வொரு இதழையும் கொண்டு வருவதற்கே, ஆர்வத்துடன் பத்திரிகை நடத்தியவர்கள் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

சிறுபத்திரிகைகள் நடத்துகிறவர்கள் பாடு இன்றும் அப்படித்தான் இருக்கிறது.

என் விருப்பம்போல் கதைகளும் குறுநாவல்களும் புதுமையான சோதனை ரீதியான நாவல்களும் எழுதுவதற்காக நான் 'இதய ஒலி' எனும் கையெழுத்துப் பத்திரிகையையும் மாதம் தோறும் உருவாக்கி வந்தேன்.

'இதயஒலி' பற்றி அறிய நேர்ந்த ந. பிச்சமூர்த்தி, 'நீங்கள் ஏன் உங்கள் திறமையையும் உழைப்புச் சக்தியையும் வீணடிக்கிறீர்கள்?' என்று கேட்டார். 'எங்கே, உங்கள் இதயஒலியைப் பார்க்கலாம்' எனக் கேட்டு வாங்கிப் படித்துப் பார்த்தார். ரசித்துப் பாராட்டினார்.

'நன்றாகத் தான் தயாரிக்கிறீர்கள். கையெழுத்துப் பத்திரிகை என்றாலும் தரமான இதழாகத்தான் இருக்கிறது. இதைப் பார்க்கையில், இதைப் பூக்குடலை என்று சொல்லலாம் போல் தோன்றுகிறது. பூக்காரன் பூக்களைச் சரமாகவும் ஆரங்களாகவும் செண்டாகவும் கட்டிக் குடலைக்குள் வைத்துப் பாதுகாக்கிறான். அப்புறமாக அவற்றை விநியோகிக்கிறான். வீடுகளுக்கும் கடைகளுக்கும் தேவைப்படுவோருக்கும் வழங்குகிறான். அதே மாதிரி உங்கள் எழுத்துமலர்களை நீங்கள் வகை வகையாகக் கோர்த்த இந்த இதழில் பத்திரப்படுத்துகிறீர்கள்' என்று ந.பி.மகிழ்ச்சியோடு சொன்னார்.

இதய ஒலி கையெழுத்துப் பத்திரிகையின் பெருமை சிறிது சிறிதாக வெளியேயும் பரவியது. பெரும் அளவில் தெரியவருவதற்கு ஒரு நல்வாய்ப்பு வந்து சேர்ந்தது.

திருச்சியிலும் அதன் அருகில் உள்ள பல ஊர்களிலும் அநேக இளைஞர்கள் கையெழுத்துப் பத்திரிகையை ஆர்வத்துடன் எழுதி வளர்த்து வந்தார்கள். ஸ்ரீரங்கத்தில் ம.ரா. சுப்பிரமணியன் எனும் ஆரம்ப எழுத்தாளர் ஓட்டல் தொழிலில் ஈடுபட்டிருந்தார். அவர் கையெழுத்துப் பத்திரிகையும் நடத்தி வந்தார்.

அவருக்கும் அவருடைய நண்பர்கள் சிலருக்கும் ஒரு எண்ணம் எழுந்தது. திருச்சி மாவட்டத்தில் நடத்தப்பெறுகிற கையெழுத்துப் பத்திரிகைகள் பலவற்றையும் ஒரே இடத்தில் சேர்த்து வைத்து ஒரு கண்காட்சி நடத்தலாமே என்று ஆசைப்பட்டார்கள். திட்டம் தீட்டி அதற்கான முயற்சியில் ஈடுபட்டார்கள். வெறும் காட்சியோடு நிறுத்திவிடாமல் கையெழுத்துப் பத்திரிகை மாநாடு ஒன்றையும்

நடத்தியாக வேண்டும் என்று தீர்மானித்தார்கள். துறையூருக்கு என்னைத் தேடி வந்து எனது கருத்தைக் கேட்டார்கள். பணச்செலவைப் பற்றி அவர்கள் கவலைப்படவில்லை.

இளைஞர்களின் உற்சாகமான முயற்சியை நான் வரவேற்றேன். பாராட்டினேன். செய்ய வேண்டியது தான் என்று ஆதரித்தேன். வரவேற்புக் குழுவின் தலைவராக நான் இருக்க வேண்டும் என்றும், கையெழுத்துப் பத்திரிகைகளின் காட்சியில் எனது இதயஒலியும் இடம்பெற வேண்டும் என்றும் மரா.சுப்பிரமணியன் வேண்டினார். நானும் இசைவு தெரிவித்தேன்.

கையெழுத்துப் பத்திரிகையாளர் மாநாடு 1946ல் ஸ்ரீரங்கத்தில் சிறப்பாக நடைபெற்றது. சென்னையிலிருந்து 'பாரததேவி' நாளிதழ் ஆசிரியர் கே.அருணாசலமும், ஆனந்த விகடன் ஆசிரியர் குழுவில் அங்கம் வகித்த எழுத்தாளர் 'நாடோடி' வெங்கட்ராமனும் மாநாட்டுக்காக வந்திருந்தார்கள்.

நான் வரவேற்புரை நிகழ்த்தினேன். 'பாரததேவி' அருணாசலம் தலைமை உரை, நாடோடி வாழ்த்துரை வழங்கினார்கள். நாகப்பட்டினம் வக்கீல் சூரியமூர்த்தி, மணிக்கொடி எழுத்தாளர்கள் ந.பிச்சமூர்த்தி, 'சிட்டி' சுந்தரராஜன் மற்றும் சிலபேர் வாழ்த்திப் பேசினார்கள். மற்றொரு மணிக்கொடி எழுத்தாளர் சி.சு.செல்லப்பாவும் வந்திருந்தார்.

செல்லப்பா வத்தலக்குண்டிலிருந்து, நண்பர்களைப் பார்த்துப் பேசுவதற்காக, திருச்சிக்கு வந்திருந்தார். சிட்டியின் அழைப்பின் பேரில் அவரும் மாநாட்டுக்கு வந்தார். இளைஞர்களின் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் பாராட்டினார்.

மாநாடு பெரும் வெற்றி என மதிக்கப்பட்டது. ஐம்பதுக்கும் அதிகமான கையெழுத்து இதழ்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. சென்னைப் பத்திரிகைகள் இந்த மாநாட்டுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் செய்திகள் வெளியிட்டிருந்தன.

இதயஒலி எனும் கையெழுத்து மாத இதழுடன், நான் நையாண்டி பாரதியாக 'காப்பி' என்ற தினசரிக் கையெழுத்துப் பத்திரிகையையும் தயாரித்துவந்தேன். முழுநீளத்தாளில் (ஃபுல்ஸ்கேப் பேப்பர்) நான்கு பக்கங்கள் கொண்ட நாளிதழ் நையாண்டி பாரதியின் கிண்டல், குத்தல், சாடல்களே அதிகம் அதில் இடம் பெற்றன. முக்கியமான உள்ளூர் செய்திகளும் அவை

பற்றிய கருத்துக்களும் உண்டு. பாரதியாரின் 'புதிய ஆத்திசூடி' மாதிரி 'நை. பாரதீயம்' என்று தொடர்ந்து எழுதப்பட்டன. நாம் வாழ்க, நமக்கு நாமே துணை என்று தொடங்கி, வாழ்க்கைக்கு வழிகாட்டக் கூடிய தற்காலச் சமூக நடைமுறைகளைப் பரிகாசம் செய்யும் அறிவுரைகள் அடங்கியது நை.பாரதீயம்.

'காப்பி' நாளிதழுக்கு உற்சாகமான வாசகர்கள் பலர் இருந்தார்கள். ரெட்டியார், ஊழியன் பிரஸ் தொழிலாளித்தோழர்கள், மற்றும் சிலர் தினசரி வாசகர்களாகி, இதழை வரவேற்றுப் பாராட்டி ஊக்கம் தந்து கொண்டிருந்தார்கள்.

'நாம் வாழ்க! நமக்கு நாமே துணை!' என்ற உரை பலரை வசீகரித்தன. பின்னாளில் 'கல்கண்டு' ஆசிரியர் தமிழ்வாணன், வல்லிக்கண்ணன் விளம்பரப்படுத்திய தன்னம்பிக்கைச் சொற்கள் என்று தனது கட்டுரையில் குறிப்பிட்டுப் பாராட்டியுள்ளார்.

எழுத்து என்பது எனக்கு உயிர்மூச்சாகவும், பொழுதுபோக்கு விளையாட்டாகவும், உற்சாகம் ஊட்டும் உந்துசக்தியாகவும் அமைந்திருந்தது. பணம் பண்ணுவது பற்றியோ, வாழ்க்கை வசதிகள் தேடிக்கொள்வது பற்றியோ எண்ணாமல் எப்போதும் வகைவகையாக எழுதுவதில் மகிழ்ச்சியும் மனநிறைவும் கண்டேன். புத்தகங்கள் படிப்பது என் சந்தோஷத்தை அதிகப்படுத்தியது.

கிராம ஊழியன் ஆசிரியர் என்ற பெயர் வந்ததே தவிர எனக்குச் சம்பளம் அதிகமாகக் கிடைத்து விடவில்லை. ஊழியன் நிறுவனத்தில் நான் சேர்ந்தபோது எனக்கு இருபத்தைந்து ரூபாய் சம்பளம் நிர்ணயிக்கப்பட்டது. சிறிது காலத்துக்குப் பிறகு அது முப்பது ரூபாய் என்று ஆக்கப்பட்டது. ஆசிரியர் என்றானதும் சம்பளம் நாற்பது ரூபாயாக உயர்ந்தது. அதற்கு மேல் என் சம்பளம் உயர்த்தப்படவில்லை.

நான் அது பற்றிக் கவலைப்படவில்லை. சம்பளம் பற்றி எண்ணவேயில்லை. என் இஷ்டம்போல் · தாராளமாக எழுதுவதற்குச் சுதந்திரம் இருந்தது. எனது வேலையில் யாரும் குறுக்கிட்டதுமில்லை. இதை எழுது, அதை எழுதாதே என்று கட்டுப்பாடுகள் விதிக்க யாருமில்லை. அதுவே எனக்குப் போதுமானதாக இருந்தது.

என் எழுத்துக்கள் பத்திரிகைகளில் வந்தன. அச்சில் வராமல் கையெழுத்து நிலையிலும் ஏகப்பட்டவை இருந்தன. நான் மேலும் மேலும் எழுதிக் கொண்டிருந்தேன். பலவிதமான சிறுகதைகள், கட்டுரைகள், வசனகவிதைகள், சொனா. முனாவின் சொக்குதங்க

உண்மைகள் என்று வாழ்க்கை, சமூகம், மனிதர்கள் பற்றிய நையாண்டித்தனமான சிந்தனைகள், ஓரங்க நாடகங்கள் என்று எழுதினேன். கடிதங்களும் அதிகம் அதிகமாக எழுதினேன்.

'நீங்கள் கடிதங்கள் அதிகம் எழுதுகிறீர்கள். உங்கள் சம்பளத்தில் அரைவாசிக்கு மேல் தபால் செலவிலேயே காலியாகிறது. இது அவசியமா?' என்று ஒருமுறை நண்பர் திருலோக சீதாராம் என்னைக் கேட்டார்.

'சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பது தானே வாழ்க்கையின் நோக்கம்? எழுதிக் கொண்டிருப்பது எனக்கு சந்தோஷம் தருகிறது. கடிதங்கள் எழுதுவது என் சந்தோஷங்களை அதிகப்படுத்துகிறது' என்றேன்.

'உங்கள் எழுத்துக்களை புத்தகங்களாகக் கொண்டு வரவேண்டும் என்று நீங்கள் ஆசைப்படவில்லையா?' என்று நண்பர் வேறொரு சமயம் கேட்டார்.

'காலம் வருகிறபோது அவை வந்துவிட்டுப் போகட்டும். வெறுமனே ஆசைப்படுவதால் மட்டும் காரியங்கள் நடந்து விடுவதில்லை. மேலும் முயற்சிகள் எப்போதும் உரிய பலன்களைப் பெற்றுத் தருவதுமில்லை' என்று சொன்னேன்.

என் எழுத்துக்கள் புத்தக வடிவம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் நான் மேற்கொண்ட சில முயற்சிகளின் முடிவு என்னை அவ்வாறு கருதத் தூண்டியது.

1944 ஆரம்பத்தில் நான் சென்னையில் 'நவசக்தி' அலுவலகத்தில் தங்கி இருந்தபோது ஒருநாள் 'அல்லயன்ஸ் கம்பெனி' குப்புசாமி அய்யரை கண்டு பேசினேன். அவர் தமது நிறுவனம் மூலம் நல்லநல்ல புத்தகங்களை வெளியிட்டு வந்தார். 'தமிழ்நாட்டுச் சிறுகதைகள்' வரிசையில் தொடர்ந்து பல எழுத்தாளர்களின் சிறுகதைகளை புத்தகங்களாகப் பிரசுரித்தார். என்னுடைய கதைகளையும் வெளியிட இயலுமா என்று நான் அவரிடம் கேட்டேன்.

அவர் மகிழ்வுடன் சம்மதித்தார். கதைகளைக் கொடுங்கள் என்றார். நான் பதினைந்து கதைகளைத் தொகுத்து அவரிடம் அளித்தேன். அவற்றில் 'பட்டாசுக்கட்டு' என்றொரு கதை இருந்தது. அந்தப் பெயரிலேயே கதைத் தொகுதியை வெளியிடலாம் என்று அவர் கூறினார். 'வெளிவர இருக்கும் நூல்கள்' பற்றிய விளம்பரங்களில் அந்தப் பெயரும் இடம் பெற்றது. ஆயினும்

வருடங்கள் பல ஓடியும் என் சிறுகதைத் தொகுப்பு 'பட்டாசுக்கட்டு' வெளிவரவேயில்லை. 'தமிழ்நாட்டுச் சிறுகதைகள்' பட்டியலில் 'பட்டாசுக்கட்டு' பெயர் காணப்பட்ட போதிலும், கடைசி வரை அந்தத் தொகுப்பு வரவில்லை.

துறையூரில் 'பாரதமாதா பிரசுரம்' என்றொரு பதிப்பகம் இருந்தது. கருப்பையா என்பவர் சிறுஅளவில் அதை நடத்திக் கொண்டிருந்தார். 'இந்திரா' பத்திரிகையின் ஆசிரியர் பநீலகண்டன் எழுதிய கம்பராமாயணம் கட்டுரைகளை, 'கோசலைச் செல்வன்' 'மிதிலைச் செல்வி' என இரண்டு புத்தகங்களாக வெளியிட்டிருந்தார். சிரஞ்சீவி என்ற எழுத்தாளரின் கதை களையும், வேறு சில நூல்ளையும் அவர் பிரசுரித்திருந்தார் நான் திருநெல்வேலியில் இருந்தபோதே அவருக்குக் கடிதம் எழுதி என் கதைகளைப் புத்தகமாக வெளியிட இயலுமா என்று கேட்டிருந்தேன். அவர் இசைவு தெரிவித்து, கதைகளை அனுப்பிவைக்கச் சொன்னார். பன்னிரண்டு கதைகள் அனுப்பினேன். 'அணையா விளக்கு' என்று பெயர் வைக்கலாம் என்று தெரிவித்தேன். அந்தப் பெயரில் ஒரு கதை அதில் இருந்தது. எனினும் அந்த விளக்கு ஏற்றப்படவே இல்லை!

நான் துறையூர் சேர்ந்ததும், பாரதா மாதா பிரசுரம் கருப்பையாவைச் சந்தித்தேன். என் கதைகள் பற்றி விசாரித்தேன். 'கண்டிப்பாக உங்கள் கதைகளை புத்தகமாக வெளியிடுவேன். இப்ப கொஞ்சம் பணக் கஷ்டம். பொருளாதார நிலைமை சீர்பட்டதும், முதலாவதாக அணையாக விளக்கை அச்சாக்குவேன் என்று அவர் உறுதி கூறினார்.

அவர் வசதிகள் அதிகம் இல்லாத எளிய மனிதர். புத்தகக் கடை வைத்து, பலவிதமான புத்தகங்களையும் விற்பனை செய்வதில் ஈடுபட்டிருந்தார். அத்துடன் புதிய நூல்களை வெளியிடலாமே என்று ஆசைப்பட்டு பதிப்புவேலையிலும் முனைந்தார். புத்தகங்கள் விற்பனையாகவில்லை. அவருடைய பொருளாதார நிலையும் சரிப்படவில்லை. அவருடைய நிலைமையை புரிந்துகொண்டு நான் என்னுடைய கதைப்பிரதிகளை திரும்பப் பெற்றேன். காலம் வரும் என்று காத்திருந்தேன்.

கோயம்புத்தூரில் 'சினிமா உலகம்' பத்திரிகையைக் கவனித்து வந்த எஸ்.பி.கிருஷ்ணன்- ஆசிரியர் பி.எஸ்.செட்டியாரின் உறவினர்- 'ஏதாவது பிசினஸ் பண்ணணும்' என்று ஆசைப்பட்டார். சிறுகடை ஒன்று வைத்திருந்த நண்பர் ஒருவர் அவருடன் கூட்டுச் சேர்ந்தார்.

புத்தகங்கள் வெளியிடலாம் என்று தீர்மானித்தார்கள். முதலில் எனது சிறுகதைகளை ஒரு புத்தகமாக்கலாம் என்று முடிவு செய்து, எனக்கு எழுதினார்கள். நான் பன்னிரண்டு கதைகள் அனுப்பினேன். தொகுப்புக்கு 'கல்யாணி முதலிய கதைகள்' என்று பெயர் சூட்டலாம் என்றும் தெரிவித்தேன். கல்யாணி எனும் அழகான பெயருக்கு ஏற்ப வனப்பும் வசீகரமும் நிறைந்த அட்டைப்படம் அமைக்க முடியும் என்ற எண்ணம் எனக்கு.

சில மாதங்களில் புத்தகம் தயாராகி வெளிவந்தது. ஆனால் புத்தகத்தின் வடிவ அமைப்பும் அட்டைச்சித்திரமும் வசீகரமாகவே இல்லை. அதன் தோற்றம் எனக்கு திருப்தி தரவில்லை. இருப்பினும், எப்படியோ எனது முதலாவது சிறுகதைத் தொகுப்பு வெளிவந்து விட்டதே என்ற மகிழ்ச்சி தான் எனக்கு. இது 1944ல் நிகழ்ந்தது.

1946ல் எனது இரண்டாவது சிறுகதைத் தொகுப்பான 'நாட்டியக்காரி' வந்தது. இது வெளிவர நேர்ந்ததும் விநோதமான ஒரு அடிப்படையிலே தான்.

நான் திருநெல்வேலியில் வசித்த நாள்களில் எனக்கு நண்பர்களான இளைஞர்களில் எஸ். சிதம்பரம் என்பவரும் ஒருவர். கல்லூரி மாணவர். தி.க.சியின் சிநேகிதர். திருவனந்தபுரம் சிதம்பரம் செல்வந்தர் வீட்டுப்பிள்ளை. அவருடைய தந்தை திருவனந்த புரத்தில் பிரபலமான வைர வியாபாரி. அவருக்கு மிகுந்த சொத்து இருந்தது. வைர வியாபாரம், சொத்து அனைத்துக்கும் வாரிசு ஒரே மகனான சிதம்பரம் தான். சிதம்பரத்தின் சித்தப்பாவுக்குப் பிள்ளை கிடையாது. அவரது சொத்துகளுக்கும் சிதம்பரம் தான் வாரிசு என்ற நிலை இருந்தது.

சிதம்பரம் உல்லாச குணங்கள் பெற்ற 'ஜாலி பிரதர்'. திருநெல்வேலியில் உறவினர்கள் வீட்டில் தங்கி, இந்துக்கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். படிப்பு ஒத்துவராததால் அதை அரைகுறையாக விட்டுவிட்டு திருவனந்தபுரம் போய், 'காற்றடிக்கும் சோலையிலே கனிஅடித்துத் திரிகின்ற செல்லப்பிள்ளை'யாக நாளோட்டலானார்.

அந்த நிலைமையிலும், வாழ்க்கையிலே ஏதாவது செய்து எப்படியாவது பெயர் பெறவேண்டும் என்ற ஆசை அவருள் வளர்ந்தது. கவிதைகள் எழுதலானார். பத்திரிகைகளுக்கு அனுப்பினார். ஒன்றிரண்டு பிரசுரம் பெற்றன. அதிகமாகக் கவிதைகள் எழுதி அவற்றை புத்தகமாக்கி வெளியிட வேண்டும் என்று விரும்பினார்.

அவருடைய நண்பர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு யோசனை சொன்னார்கள். அவர்களில் ஒருவர் சொன்னது சிதம்பரத்துக்குப் பிடித்திருந்தது. 'உன்னுடைய கவிதைகளை புத்தகமாகக் கொண்டு வருவது நல்ல யோசனை தான். அதன் மூலம் உனக்கு கவனிப்பு கிடைக்கும் சரிதான். உன் புத்தகத்தை கொண்டு வருவதற்கு முன்னதாக, எழுத்துலகில் பெயர் பெற்ற ஒருவரின் எழுத்துக்களை புத்தகமாக வெளியிட வேண்டும். அதன் துணையோடு வெளிவந்தால், உன் புத்தகமும் நல்ல கவனிப்பு பெறும்' என்று அந்த நண்பன் கூறினான்.

அது நல்ல யோசனை எனப்பட்டது சிதம்பரத்துக்கு, தனக்குத் துணைவரக்கூடிய எழுத்தாளர் யார் இருக்கிறார் என்று நினைத்துப் பார்க்கையில் வல்லிக்கண்ணன் நினைவுதான் அவருக்கு வந்தது. எனவே அவர் உடனடியாகப் புறப்பட்டு துறையூர் வந்து சேர்ந்தார்.

நான் அவருக்குக் கதைகள் கொடுத்தேன். 'நாட்டியக்காரி என்ற கதைத் தொகுப்பை அவர் 'கவிக்குயில் நிலையம்' வெளியீடாகக் கொண்டு வந்தார். கூடவே தனது கவிதைகளை 'காதலிக்கு' என்ற தொகுப்பாகப் பிரசுரித்தார்.

'வைரம்' என்ற பெயரில் எஸ்.சிதம்பரம் எழுதிய கவிதைகள் தொடர்ந்து 'கிராம ஊழியன்' இதழ்களில் இடம் பெற்றன. மேலும் கவனிப்பு பெறுவதற்காக இலக்கிய மலர் ஒன்று தயாரித்து வெளியிடலாம் என்று அவருக்கு யோசனை கூறினேன்.

'கவிக்குயில்' என்ற பெயரில், பெரிய அளவில், ஒரு மலர் வெளியிடும் முயற்சியில் சிதம்பரம் மும்முரமாக ஈடுபட்டார். அவருக்காக நான் முக்கிய எழுத்தாளர்கள் பலருக்கும் கடிதங்கள் எழுதினேன், மலருக்கு விஷயங்கள் கேட்டு.

எழுத்தாள நண்பர்கள் அன்புடன் ஒத்துழைத்தார்கள் கவிக்குயில் முதலாவது மலர் நன்கு உருவாகி வெளிவந்தது. அதில் என்னுடைய எழுத்துக்கள் அதிகமாகவே இருந்தன.

மலரின் வெற்றியைக் கண்ட சிதம்பரம் இரண்டாவது கவிக்குயில் மலர் வெளியிடுவதில் உற்சாகம் காட்டலானார். முதல் மலரைப் பார்த்து திருப்தி அடைந்த எழுத்தாளர்கள் பலரும் கதைகள் கட்டுரைகள் கொடுத்து உதவினார்கள். புதுமைப்பித்தன் நீண்ட கவிதை ஒன்று அளித்தார். இரண்டாவது மலர் முதல் மலரைவிடச் சிறப்பாக அமைந்திருந்தது. இரண்டு மலர்களும் திருவனந்தபுரத்தில் இருந்துதான் வெளியிடப்பட்டன.

அத்துடன் சிதம்பரத்தின் இலக்கிய ஆர்வம் அடங்கிவிட்டது. அவருடைய உற்சாகமும் வேகமும் திசைமாறிப்போயின. அவருக்குத் திருமணமாகிக் குழந்தைகள் இருந்தன. ஆயினும் செல்வப் பெருக்கும் கட்டுப்பாடற்ற போக்கும் அவரை விபரீத வழிகளில் செல்லத் தூண்டின. திருவனந்தபுரத்தில் அவருக்குச் சேர்ந்த நண்பர்களும் அப்படி வந்து வாய்த்தார்கள். இலக்கியத்தில் இருந்து அவர் போட்டோக்கலை பக்கம் கவனம் செலுத்தலானார். அழகு அழகான அருமையான படங்கள் எடுத்து முன்னேற வேண்டும், போட்டோக்கலை மூலம் இந்தியாவின் கவனத்தையே பெற்றுவிடலாம் என்று அவர் ஆசைகள் வளர்த்தார். அதற்காக ஏராளமான பணம் செலவு செய்தார்.

அவரது இலக்கிய உணர்வும், நல்ல உள்ளமும், திருவனந்தபுரத்தில் வந்து தங்கிய காசநோயாளியான புதுமைப்பித்தனுக்கு அவருடைய இறுதிக்காலத்தில் தாராளமாகப் பண உதவிகள் புரியவும், அருகிலிருந்து உதவிகள் செய்யவும் அவரை ஊக்கின. புதுமைப்பித்தன் மரணம் வரை சிதம்பரம் அவர் கூடவே இருந்து தேவைப்பட்ட உதவிகளை அன்புடன் செய்தார்.

# நான் கண்ட வல்லிக்கண்ணன்

கழனியூரன்

வல்லிக்கண்ணன் என்ற ஆளுமையை, இப்போது அவர் மறைந்துவிட்ட இந்த நேரத்தில் நினைத்துப் பார்க்கும்போது வியப்பாக இருக்கிறது.

நம்மோடு நம் கண்ணெதிரே வாழ்ந்த வல்லிக்கண்ணனின் வாழ்வில் இருந்த எளிமையும், தியாகமும் நம்மைச் சிந்திக்க வைக்கிறது.

வரலாற்று நாயகர்கள் சிலரின் வாழ்வில் நடந்த சில சம்பவங்களைப் படிக்கும்போது. நம் மனம் நம்ப மறுக்கும். வ.கவின். வாழ்க்கை வரலாற்றை, இன்னும் முப்பது, நாற்பது வருசம் கழித்து அடுத்த தலைமுறையைச் சேர்ந்த தமிழ் மாணவர் ஒருவர் படித்து “இப்படியும் ஒருவர் வாழ்ந்தாரா..?” என்று மூக்கின் மேல் விரல் வைக்கக் கூடும்.

‘எளிமை, தன்னடக்கம் என்ற சொற்களின் இலக்கணமாகத் திகழ்ந்தார் வ.க, அவரது உடைமைகள் ரொம்பக் குறைவு. அவரது தேவைகளும் மிக, மிகக் குறைவு.

வ.க. அவர்களின் எழுத்துக்களோடு எனக்கு மிகுந்த பரிச்சயம் உண்டு. அவரை தூரத்தில் இருந்தும் பாத்திருக்கிறேன் பக்கத்திலிருந்தும் பார்த்திருக்கிறேன். அவரோடு பத்து நாட்கள் வாழ்ந்துமிருக்கிறேன். பல்வேறு சூழல்களில் கலந்துரையாடியும் இருக்கிறேன். எனவே வ.க.வைப்பற்றிப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் எனக்குத் தகுதி இருக்கிறதென்று கருதுகிறேன்.

நம் தேசத்தந்தை மகாத்மா காந்தியவர்கள் எளிமையாக வாழ்வது குறித்துப் பேசினார். அதன்படி வாழ்ந்தும் காட்டினார். காந்தியக் கொள்கைகளில் ஒன்று எளிமையாக வாழ்வது. அக் கொள்கையை வ.க. காலமெல்லாம் கடைப்பிடித்தார்.

வ.க. குளிர் காலமானாலும், மழைக்காலமானாலும் தினமும் அதிகாலை ஐந்து மணிக்கே படுக்கையைவிட்டு எழுந்திருக்கும்

பழக்கத்தைக் காலமெல்லாம் கடைப்பிடித்தார். அதிகாலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்து விட்டுத் தினமும் குளிர்ந்த தண்ணீரில் குளித்து விடுவார்கள்.

2005 மே மாதத்தில் என் வீட்டில் தங்கி இருந்தகாலத்தில், ஒரு நாளாவது அதிகாலையில் வ.க. படுக்கையை விட்டு எழுந்திருக்கும் காட்சியைப் பார்த்து விட வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் முடியவில்லை!

நான் காலையில் எழுந்திருச்சி அவர் தங்கி இருந்த மச்சிக்குப் போனால் மச்சின் கொடியில் ஈரமான கோவணத்துணி காற்றில் ஆடி அசைந்து என்னை வரவேற்கும்.

வ.க. மச்சின் உள்ளே அமர்ந்து ஏதாவது ஒரு புத்தகத்தை எடுத்து அந்த அதிகாலை நேரத்திலும் படித்துக் கொண்டிருப்பார். என் வீட்டில் வ.க.தங்கி இருந்தபோது அவருக்கு வயது எண்பத்தி நான்கு.

கோவணம் கட்டும் பழக்கம் என் தாத்தாவுக்கு இருந்தது என்று பிறர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் 2005 வரை கோவணம் கட்டி வாழ்ந்த மனிதராக நான் வ.க. அவர்களைத்தான் பார்த்தேன்.

சாதாரண கோபால் பல்பொடி வைத்துத்தான் பல் துலக்குகிறார் என்பதையும் ஒரு நாள் நேர்பேச்சின் மூலம் தெரிந்து கொண்டேன்.

பேஸ்ட், பிரஸ், வாசனைசோப் வாசனைத் திரவியங்கள், முகத்துக்கு பவுடர் என்பன போன்ற எந்த விதமான ஆடம்பரப் பொருள்களையும் பயன்படுத்தாமல், ஆரோக்கியமாகவும், தூய்மையாகவும் இந்த நூற்றாண்டிலும் வாழமுடியும் என்று வாழ்ந்து காட்டினார் வ.க.

பயணத்தின்போதும் அவரின் உடைமைகள் மிகச் சாதாரணமானது ஒரு துணிப்பை. அதனுள் ஒரு துண்டு மாற்றிக் கொள்ள பச்சைக்கரை போட்ட ஒரு துவை வேட்டி. சாதாரண அரைக்கைச் சட்டை. அத்தோடு ஒரு லங்கோடு; மற்றும் இரண்டு கோவணத்துணிகள். அனைத்துமே பருத்தித் துணியால் நெய்யப்பட்ட ஆடைகள்தான். அவைகளை மடிப்புக் களையாமல் தோய்த்துத்தான் அணிய வேண்டும் என்றும் அவர் நினைத்ததில்லை.

அவரிடம் இருந்த மிகப்பெரிய ஆயுதங்கள் "எழுத ஒரு பேனா, ஒரு நோட்டு". பயணத்தின்போது படிக்க ஒரு புத்தகம், முதலியவைகள்தான்.

எங்கள் வீட்டில் குளிக்கவும். குடிக்கவும் தாமிரபரணித்தண்ணீர்தான் என்றேன். அதைக் கேட்டு அவர் ரொம்பச் சந்தோசப்பட்டார். தாமிரபரணித் தண்ணீர்மேல் அவருக்குப் பெரிய காதலே இருந்தது.

"சின்னவயதில் இருந்தே நான் தாமிரபரணி நதியோடு சினேகிதமாய் இருந்தேன். ராஜவல்லிபுரத்தில் வசிக்கும்போது, தாமிரபரணி ஆத்துக்கு நடந்தேபோய் ஆத்தில் முங்கிக் குளிப்பதில் எனக்கு அளவில்லாத ஆனந்தம் இருந்தது... பின்னாளில் எனது இளம்பிராயத்தில் திருநெல்வேலி டவுணில் நாங்கள் குடியிருந்தபோது, நான் அதிகாலையிலேயே எந்திரிச்சி, ஒரு வேப்பங்குச்சியை ஒடித்து அதன் நுணியைப் பல்லால் கடித்து அதையே ஒரு 'பிரஸ்' போல ஆக்கி அதைக்கொண்டே பல்லைத் தேய்த்துக் கொண்டு ஆற்றைப் பார்த்து நடப்பேன். இடையில் மறைவான இடம் பார்த்துக் காலைக்கடன்களைக் கழித்துவிட்டு தாமிரபரணி ஆத்துக்குப் போய் முங்கி, முங்கிக் குளித்துவிட்டு வருவதில் எனக்கு அலாதியான ஒரு சுகம் இருந்தது. பின்னால் நான் சென்னையில் குடியேறிய போது, அடிக்கடி தாமிரபரணியை நினைத்து ஏங்கி இருக்கிறேன்.

நெல்லை நண்பர்கள் திருநெல்வேலியிலோ, அல்லது அதை ஒட்டிய ஊர்களிலோ இலக்கிய விழா இருக்கிறது என்று சொல்லி என்னை அழைத்தால் நான் மகிழ்ச்சியாக ஒப்புக்கொண்டு, திருநெல்வேலிக்கு வந்துவிடுவேன். வந்து நேரே, தாமிரபரணி ஆத்துக்குத்தான் போவேன், குளிக்க...

திருநெல்வேலி என்றதும் என் மனக்கண்ணில் தாமிரபரணி நதிதான் ஓடும். தாமிரபரணி ஆத்தில் முங்கிக்குளிப்பதே தனிசுகம் தான் தாமிரபரணித் தண்ணீரில் குளிப்பதும். அந்த ஆத்தின் தண்ணீரைக் குடிப்பதும்தான் எத்தனை ஆனந்தமான அனுபவங்கள் என்று தாமிரபரணியைப் பற்றிய தன் நினைவுகளைப் பலமுறை நேர்பேச்சில் என்னோடு பகிர்ந்திருக்கிறார்.

வ.க.அவர்களுக்கு, 'தாமிரபரணி நதி உருவாகும் இடத்தில் இருந்து நடக்கத்துவங்கி, அந்நதி கடலில் சங்கமமாகும் இடம் வரை நடந்தே செல்லவேண்டும். அப்படி நடந்து பெற்ற

அனுபவத்தை மையமாகக்கொண்டு ஒரு பயண நூல் எழுத வேண்டும்" என்ற பேராசை இருந்தது. அவரது வாழ்நாளில் அந்த ஆசை நிறைவேறவே இல்லை. வ.க. அவர்களின் நிறைவேறாத ஆசைகளில் இதுவும் ஒன்றாகும்.

வ.க. ஒரு நடை மன்னர். அவர் நடப்பதற்கு சலித்ததே இல்லை "பஸ்ஸுக்குக் காத்திருக்கும் நேரத்தில் நடந்தே நாம் செல்லவேண்டிய இடத்திற்குச் சென்று விடலாம். நடப்பது உடம்பிற்கும் நல்லது" என்று அடிக்கடி 'வ.க.' சொல்வார். திருநெல்வேலியில் இருந்து வீட்டில் சொல்லாமல் கொள்ளாமல் ஒரு துணிப்பையுடன் நடந்தே சென்னை. நோக்கிப் பயணமான, சேதியை, மிக உருக்கமாக இந்நூலில் பதிவு செய்துள்ளார் வ.க.

காலையில் இரண்டு இட்லி, ஒரு கப் காப்பி, மதியம், ஒருசிறு குழந்தை சாப்பிடுகிற அளவுக்குச்சாதம் பின் இரவில் இரண்டு இட்லி, ஒரு டம்பளர் பால். இடையில் கிடைத்தால் ஏதாவது ஒரு பழம். என்று மிகச் சாதாரணமாகச் சாப்பிட்டு உயிர் வாழ்ந்தவர் வ.க.

என் வீட்டில் வ.க. வுக்கு மிகவும் பிடித்த இன்னொரு விசயம். பசுவின்பால். மச்சியில் இருந்து அவர் கண்ணால் பார்க்க, பசுவில் இருந்து பாலைக்கறந்து அதைக் காச்சிக் கொடுத்தேன்.

"கொழுப்பு நீக்கப்பட்ட பாக்கெட் பாலில் ருசியே இல்லை. இங்கேதான் உண்மையான பசும்பாலைக் குடிக்கிறேன். மணமாகவும், ருசியாகவும் இருக்கிறது பால்" என்று என்னிடம் சொன்னார். "சுகாதாரமான, காற்றோட்டமான, நெருக்கடியில்லாத, கூச்சல், குழப்பம் இல்லாத இந்த கிராமத்து வாழ்க்கை ரொம்பப் பிடிக்கிறது. என்ன செய்ய சென்னை வாழ்க்கைதான் வாழவேண்டும் என்று விதித்திருக்கிறது" என்று ஒரு முறை கிராமத்து வாழ்க்கையைச் சிலாகித்துக் கூறினார்.

இராஜவல்லிபுரத்து வீட்டை விற்கும் வரை ஆண்டுதோறும் ஓரிரு மாதங்கள், இராஜவல்லிபுரத்தில் வந்து நான் தங்குவதுண்டு. கிராமத்து வாழ்க்கையின் அனுபவத்திற்காகவே அவ்வாறு நான் வருவேன். இராஜவல்லிபுரத்தில் இருக்கும்வரை தினமும் காலையில் தாமிரபரணிக்குச் சென்று குளித்து விட்டு வருவேன். மீண்டும் மாலையில் வெயில் குறைந்த பிறகு, காலார நடந்து தாமிரபரணி நதிக்கரை மணலில் போய் உக்காந்து, இயற்கையை ரசித்த படியே காற்று வாங்குவேன். சென்னையில் இருக்கும் போதும் முன்பெல்லாம் காலார நடந்தே மாலை வேளைகளில், கடற்கரை

வரை சென்று கடற்கரை மணலில் வெகு நேரம் கடலையே கண்கொட்டாமல் வெரித்துப் பார்த்துக் கொண்டே இருப்பேன்.

பரமக்குடியில் இரண்டு வருசம் பணிபுரிந்தபோது, அங்கும் ஆற்றுக்குச் சென்றுதான் குளிப்பேன். ஆற்றில் தண்ணீர் ஓட்டம் இல்லாத கால கட்டங்களில், ஆற்றுமணலில் பள்ளம் தோண்டி இருப்பார்கள். அந்தப் பள்ளத்தில் சுத்தமான தண்ணீர் ஊறும். அதை இங்கு நம்ம பக்கதில் 'ஊத்து' ன்னு சொல்வாங்க. "ஆத்துக்குள்ள ஊத்து வெட்டி- அதிலொரு மீன் பிடித்து-" ன்னு ஒரு பழம் பாடல் உண்டு. ஆனால், ஆத்து ஊத்தை பரமக்குடி வட்டாரத்தில் "ஓடுகால்"ன்னு சொல்வாங்க. பரமக்குடியில் இருக்கும்வரை அந்த ஓடுகால்லதான் குளித்தேன்னார். வ.க.

என் வீட்டில் தங்கி இருந்தபோது. ஒரு நாள் ரசிகமணி டி.கே.சி அவர்களின் பேரன் தீப. நடராஜன் அவர்கள் வீட்டிலிருந்து வ.க.வுக்கு அழைப்பு வந்தது. அந்த அழைப்பு வந்ததே ஒரு ரசமான கதை.

ஒரு முறை தீப. நடராஜன் எனக்கு என் தொலைபேசி எண்ணில் போன் பேசினார். அது மாலை நேரம் நானும் வ.க.வும் என் வீட்டில் உக்கார்ந்து பலப்பல பேச்சாகப் பேசிக் கொண்டிருந்தோம்.

அப்போது என் வீட்டுப்போன் மணி அடித்தது. எந்த விதத்தயக்கமும் இல்லாமல், வ.க. இயல்பாக, என் வீட்டுப் போனின் ரிசீவரைக் கையில் எடுத்துக் காதருகே வைத்துக் கொண்டு 'ஹலோ' என்றார்.

வ.க. 'ஹலோ' என்று சொன்ன ஒரே வார்த்தையின் ஒலிப்பு முறையை வைத்தே தீப. நடராஜன் எதிர்முனையில் பேசுவது வ.க.தான் என்று தெரிந்து கொண்டு. போனில் "ஐயா, நான் தென்காசியில் இருந்து தீப. நடராஜன் பேசுகிறேன். நீங்கள் எப்ப, அங்கு கழுநீர்குளத்திற்கு வந்தீர்கள்?" என்று கேட்டார்.

"அது ஒரு பெரிய கதை அதைப்பின்னால் சொல்கிறேன். நீங்கள் கழனியூரனிடம் பேசிறீர்களா... அவரிடம் ரிசீவரைக் கொடுக்கட்டுமா... ?"என்று வ.க. கேட்டார்.

அதற்கு தீப. நடராஜன், "நான் அவரிடம் எப்ப வேணாலும் பேசிக்கிடுவேன். உங்கட்ட பேசுனதுல ரொம்ப மகிழ்ச்சி, நீங்க ரெண்டு பேரும். நாளைக்கே புறப்பட்டு எங்க வீட்டுக்கு வரணும். அங்க கழுநீர்குளம் வரை வந்துட்டு இங்க எங்க வீட்டுக்கு வராம

போனா.. எப்படி..? அதனால நாளைக்கே வந்திரலாமா.... அல்லது என்னக்கி உங்களுக்கு சௌகர்யம்னு சொல்லுங்க. நானே, அங்க வந்து உங்களைக் கூப்பிட்டுக்கிடுதேன்னு சொன்னார்.

வ.க.ரீசிவரின் கீழ்ப்பகுதியைக் கையால் பொத்திக்கொண்டு, உங்களுக்கு எப்ப சௌகரியப்படும், நான் நாளைக்கே தென்காசி போகத் தயார்ன்னு சொன்னார். நான் "நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. உங்ககூட பஞ்சவடிக்கு (ரசிகமணி வீட்டின் பெயர் பஞ்சவடி) வாரேன் அது புது[illegible]மான அனுவமா இருக்குமே, அதனால நானே உங்களைத் தென்காசியில் இருக்கிற பஞ்சவடிக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன்" என்றேன்.

வ.க. ரிசீவரின் கீழ்ப் பகுதியில் பொத்தி வைத்திருந்த தன் கையை எடுத்துவிட்டு எதிர் முனையில் போனில் இருக்கும். தீப. நடராஜனிடம், 'நானும்' கழனியூரனும் நாளைக்காலையில் அங்கு உங்கள் வீட்டிற்கு வருகிறோம்" என்று சொன்னார்.

இப்படித்தான். பஞ்சவடியில் இருந்து வ.க.வுக்கு அழைப்பு வந்தது. மறுநாள் காலையில் நான் எனது டி.வி. எஸ். சூப்பர் எக்ஸ். எல். வண்டியில், ஏறினேன். வ.க.வும் அந்த வண்டியில் என் பின்னால் ஏறி உட்கார்ந்து கொண்டார். வண்டி கழுநீர்குளத்தில் இருந்து ஒருகாட்டுப் பாதை வழியாக, ஒத்தையடித்தடத்தில் குறுக்கு வழியாக, அடைக்கல பட்டணம் என்ற ஊரைப் பார்த்துச் சென்றது.

சிறு தெய்வக் கோயில்களும் மரங்களும், பனைமரக் கூட்டங்களும், புஞ்சைக் காடுகளும் சூழ்ந்த பகுதியின் ஊடே சென்ற அந்த ஒத்தையடிப் பாதை வழிப் பயணத்தை வ.க.ரொம்ப ரசித்தார். வண்டியை அடைக்கல பட்டணத்தில் ரோட்டோரம் இருந்த நண்பர் ஒருவரின் வீட்டில் போட்டு விட்டு அங்கிருந்து. பஸ்ஸில் தென்காசி சென்றோம்.

தென்காசியில் தீபநடராஜன் என்னையும். வ.க.வையும் மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றார். ஏற்கனவே, சில இலக்கிய ஆர்வலர்கள், அங்கு வ.க. வரப்போகிறார் என்று தெரிந்து பஞ்சவடிக்கு வந்து விட்டார்கள். 'சத்சங்கம்' கூடி விட்டது. பிறகென்ன பேச்சு, பேச்சு, ஒரே பேச்சுதான். வ.க.வும் அந்த சத்சங்கத்தில் மகிழ்ச்சியுடன் கலந்து கொண்டார்.

மதிய விருந்து பஞ்சவடியில். ரசிகமணி வீட்டு உபசரிப்புக்கும் சாப்பாட்டுக்கும். கேட்கவா வேண்டும்! விருந்து உண்ட களைப்புதீர சற்றே ஒய்வு. பிறகு மீண்டும். இலக்கிய விசாரம் என்று அன்றைய பொழுது மகிழ்ச்சியாகக் கழிந்தது.

மாலையில் சிற்றுண்டி வந்தது சாப்பிட்டோம் சிற்றுண்டிக்குப்பிறகும் பேச்சு தொடர்ந்தது. "இரவு உணவையும் சாப்பிட்டு விட்டுத்தான் போகணும்" என்று 'தீப.ந.' சொல்லி விட்டார். இரவு சாப்பாட்டிற்குப் பிறகு புறப்பட்டு பஸ்ஸில் அடைக்கல பட்டணம் வந்து நண்பரின் வீட்டில் நின்ற இருசக்கர வாகனத்தில் நானும் வ.க.வும், அதே காட்டுப் பாதை வழியாக ஒற்றையடிபாதையில் பயணித்தோம்.

இருட்டுக்கே உரிய வாசம், இரவில் எழும் பூச்சிகளின், சத்தம் எல்லாம் சேர்ந்து அந்தப் பயணத்தை ரம்மியமாக்கியது. பழுத்த எழுத்தாளர் ஒருவரை அத்தராத்திரியில், காட்டு வழியில் அழைத்துச் செல்கிறோம் என்று நினைத்தபோது என் நெஞ்சு படபடத்தது.

பாதி வழி சென்றதும்,' கழனியூரன் வண்டியை நிறுத்துங்கள்" என்றார் வ.க.எனக்கு என்ன! ஏது?" என்று புரியவில்லை. ஒருவேளை பெரியவருக்குத் தலைசுற்றுகிறதோ என்னவோ என்று நினைத்து வண்டியை நிறுத்தினேன்.

"இஞ்சினை அமர்த்திவிட்டு வண்டியை அப்படி ஒரு ஓரமாக நிறுத்துங்கள். என்று கட்டளை இடுகின்ற தோரணையில் கூறினார். என்ன ஏது என்று புரியவில்லை என்றாலும் அவர் சொன்னபடியே, இஞ்சினை நிறுத்தினேன். உடனே அவர் வண்டியில் இருந்து இறங்கித் தரையில் நின்று கொண்டு, "வண்டியை ஒரு ஓரமாய் நிறுத்துங்கள். இந்த இருளும், இந்த இடமும் ரம்மியமாய் இருக்கிறது. சற்று நேரம் இங்கு உக்கார்ந்திருப்போம்" என்றார்.

"ரசனை எல்லாம். சரிதான் வேளை கெட்ட வேளையில், பூச்சி பொட்டு வந்து கடித்து விடக் கூடாதே" என்ற பயம் எனக்கு உள்ளூர இருந்தாலும் பெரியவர் சொன்ன சொல்லைத்தட்டாமல், வண்டியை ஓரமாய் ஒரு பனை மரத்தின் அடியில் நிறுத்தினேன்.

வாருங்கள் இப்படி உட்காருவோம் என்று. அங்கு கிடந்த இரண்டு சின்னஞ்சிறு பாறைகளைக் காட்டினார். பிறகு என்ன செய்ய நானும் அவர் சொன்ன இடத்தில் உட்கார்ந்தேன்.

இரவு ஒன்பது மணிக்கு மேல் இருக்கும், மூன்றாம்பிறைச் சந்திரன் இளம் ஒளியைப் பரப்பிக்கொண்டிருந்தது.

காட்டுப் பூச்சிகளின் 'உய்' என்ற சத்தமும், குளிர்ந்த தென்பொதிகைத் தென்றலின் தழுவலும் மனதிற்கு இதமாக

இருந்தது. வ.க. இளம் இருளில் உக்காந்தபடியே வானத்தில் இருக்கும் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது அவர்,

இனிது, இனிது
ஏகாந்தம் இனிது..."

எனத்தொடங்கும் மகாகவி பாரதியாரின் கவிதை வரிகளை வாய்விட்டுப் பாடினார்.

அப்போதுதான் பாரதியாரின் அந்தக் கவிதைக்கு உரிய உண்மையான பொருளை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

சுமார் அரைமணி நேரம் அந்த ஏகாந்தத்தின் இனிமையை ரசித்தபின் "சரி, வாருங்கள், வீட்டிற்குப் போவோம்" என்றார் வ.க.

அதன் பின் வண்டியில் அவரை ஏற்றிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்.

வ.க. என்னோடு தங்கி இருந்த நாட்கள் மிக இனிமையாகவும் இலக்கிய ரசனையானதாகவும் கழிந்தது. ஒவ்வொருநாளும் மாலை வேளையில் நானும் வ.க.வும். பொடி நடையாக நடந்து கால்வாய் கரை வழியாக, குளக்கரைக்குச் சென்று அங்குள்ள கோயில் மரத்தடியில் உட்கார்ந்து பேசினோம்.

அப்படிப் பேசும்போதுதான் நாட்டுப்புறவியலில் வ.க.வுக்கு நிறைய புலமை இருக்கிறது என்பது தெரிந்தது. அந்திக் கருக்கலில் குளத்தின் கரையோர மரத்தடியில் நன்கு இருட்டும் வரை மணிக் கணக்கில் எனக்கு பல நாட்டுப்புறக்கதைளையும், சில நாட்டு நடப்புகளையும், விடுகதைகளையும், நாட்டுப்புறப்பாடல்களையும் சொன்னார் வ.க.

சுமார் கால் நூற்றாண்டு காலமாக. நாட்டார் தரவுகளில் கவனம் செலுத்தி வருகிற எனக்கே, அவர் அப்போது சொன்ன நாட்டார் தரவுகள் மிகவும் புதுமையாக இருந்தன. அவருக்குள் மிகப்பெரிய நாட்டார் தகவல் களஞ்சியம் புதைந்து கிடக்கிறது என்பதை அன்றைய அந்திப் பொழுதில் நான் தெரிந்து கொண்டேன். அதனால் தான் நான் கதை சொல்லி இதழின் பொறுப்பாசிரியரானதும், முதல் காரியமாக வ.க.விடம் படைப்புகள் அதுவும் நாட்டுப்புறவியல் தொடர்பான படைப்புக்களை அனுப்புங்கள் என்று கேட்டேன். அவரும் அனுப்பி உதவினார். நான் பொறுப்பாசிரியராக இருந்து தயாரித்த நான்கு கதை சொல்லி இதழ்களிலும் (எண் : 17, 18, 19, 20) வ.க.

அவர்களின் நாட்டுப்புறவியல் சார்ந்த படைப்புகள் இடம் பெற்றன. 20-வது கதைசொல்லி இதழில் இடம் பெற்ற வல்லிக்கண்ணனின் நாட்டுப் புறக்கதைகள் தான் அவர் தன் வாழ்நாளில் கடைசியாக எழுதிய படைப்பு என்பதும் குறிப்பிடத்தக்கது.

வ.க. அவர்களுக்கு அன்பளிப்பாக வரும் நாட்டுப்புறவியல் சார்ந்த புத்தகம் எதுவாக இருந்தாலும். அவற்றைப் படித்து முடித்த பின்பு. அந்நூலைக்குறித்து கட்டுரை அல்லது கடிதம் எழுதி முடித்தபின்பு அந்நூலின் மேல், ஒரு உறை இட்டு அதன் உச்சியில் ‘அச்சிட்ட நூல் மட்டும்’ என்று சிவப்பு மையால் எழுதி. இருபத்தைந்து பைசா தபால் தலையை அதில் ஒட்டி, உறைமேல் என் முகவரியை எழுதி எனக்கு அனுப்பிவிடுவார். நாட்டுப்புறவியல் சார்பான கட்டுரைகளை எழுதுகிற எனக்கு அந்நூல் உதவும் என்பதால் அவர்களே தன் கைக்காசு போட்டு எனக்கு அனுப்பி விடுவார் எனக்கு மட்டும் தான் இப்படி அனுப்புகிறார் என நினைத்திருந்தேன். நேர் பேச்சில். ஒருநாள் புத்தகங்கள் அனுப்புவது குறித்துப் பேசும்போர்துதான் தமிழகம் முழுவதும் உள்ள அன்பர்களுக்கு இவ்வாறு தான் படித்து முடித்து துறைசார்ந்த நூல்களை அந்தந்த துறை சார்ந்த ஆர்வலர்களுக்கு தன் கைகாசு போட்டு தபால் தலை ஒட்டி அனுப்புகிறார் என்ற செய்தியைத் தெரிந்து கொண்டேன்.

தனிமையில் எனக்கு வ.க. சில பாலியல் நாட்டுப் புறக்கதை களையும் கூறினார். இப்போது நான், நினைத்துப் பார்க்கிறேன். வ.க.வுடன் செலவழிந்த பொழுதுகளில் அவர் சொன்ன நாட்டுப்புறயில் தொடர்பான தரவுகளை ஒலிப்பதிவு செய்யாமலும், குறிப்பெடுக்காமலும் விட்டு விட்டோமே என்று.

வ.க.வுக்குள் இருந்த நாட்டுப்புறக்கதையாளன் வெளிப்படவே இல்லை. ஏதோ, நான் தூண்டியதால் ஒரு சில நாட்டுப் புறக்கதைகள் கதைசொல்லி இதழில் அச்சில் பதிவாகின. அவைகள் கடுகு அளவு தான். இன்னும் மலையளவு நாட்டார் தரவுகள் அவர் நெஞ்சுக்குள் புதைந்து கிடந்தன. இனி அவைகளை யாரால் எப்படி வெளிக்கொணர முடியும்?

ஒரு நாள் தென்காசி அருகில் ஆய்க்குடி என்ற ஊரில் உள்ள அமர்சேவா சங்கம் என்ற உடல்குறை உள்ள மாணவர்களுக்கான பள்ளியில் இருந்து, வ.க.அவர்கள் பேச வேண்டும் என்று அழைப்பு வந்தது.

உடல் குறை உள்ள பிள்ளைகளுக்குப் பேச வேண்டும் என்றதும் மிகுந்த சந்தோசத்தோடு நிகழ்ச்சிக்கு ஒத்துக் கொண்டார். வ.க.

மாலை மூன்று மணி அளவில் நிகழ்ச்சி ஆரம்பித்தது. நண்பகல் உணவு உண்டதும். ஊரிலிருந்து ஆய்க்குடிக்கு நானும் வ.க.வும் புறப்பட்டு விட்டோம்.

இரண்டு மணிக்கெல்லாம் பள்ளிக்குள் சென்று விட்டோம். பள்ளி நிர்வாகத்தினர், 'வ.க.'வை அன்போடு வரவேற்றார்கள். "வ.க. அப்பள்ளியைச்சுற்றிப் பார்க்க வேண்டும், உடல்குறை உள்ள மாணவர்களுக்கு, குறிப்பாக மூளைவளர்ச்சி குன்றிய மாணவர்களுக்கு எவ்வாறு பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்" என்று ஆசைப்பட்டார். நிர்வாகத்தினரே வ.க.வை அழைத்துச் சென்று ஒவ்வொரு வகுப்பறையிலும் பாடம் நடப்பதைக் காட்டினார்கள்.

வ.க.வும் ஆர்வத்துடன். வகுப்பறைக்குள் சென்று சில மாணவர்களுடன் பேசினார். குறிப்பாக மனநலம் குன்றிய மூளை வளர்ச்சி அற்ற மாணவர்களிடம் ஆர்வத்துடன் உரையாடினார்.

மூன்று மணிக்கு அப்பள்ளியின் கலையரங்கில் நிகழ்ச்சி நடைபெற்றது. நிகழ்ச்சிக்கு யாரைத் தலைவராகப் போடுவது என்ற கேள்வி எழுந்தபோது வ.க. சற்றும் தயங்காமல், இந்த நிகழ்ச்சிக்கு, கழனியூரனைத் தலைவராகப் போடுங்கள்" என்றார்.

'மன்னன் சொல்லுக்கு மறு சொல் ஏது?' எனவே, அன்றைய நிகழ்ச்சிக்கு நான் தான் தலைமை தாங்கினேன். வ.க. எங்கே..? நான் எங்கே..? வ.க.வின் விசாலமான மனதிற்கு அந்நிகழ்ச்சி ஒரு சான்று.

வ.க. அந்நிகழ்ச்சிக்கு என்னைத் தலைமை தாங்கச் சொன்னதற்கு ஒரு உட்பொருளும் இருக்கிறது என்பதை நிகழ்ச்சியின்போதுதான் புரிந்து கொண்டேன்.

வ.க. அவர்களின் மேடைப் பேச்சு நாம் அறிந்ததுதான். டேப்ரிக்கார்டு போட்டது போன்று மடைதிறந்த வெள்ளம் போல மூச்சு விடாமல். ஏற்ற, இறக்கம் இல்லாமல் ஒரேசீராகப் பேசுவார். ஆனால் அன்று உடல்குறையுற்ற அந்த மாணவர்களுக்கு, உணர்ச்சி மயமாக, ஒரு தேர்ந்த கதை சொல்லியின் லாவகத்துடன். சில நாட்டுப்புறக்கதைகளையும், ஆங்கிலத்தில் இருந்து மொழி பெயர்க்கப்பட்ட நீதிக் கதைகளையும் ஏற்ற இறக்கமான வட்டார வழக்கு மொழி நடையில் 'வ.க'சொன்னதை உடல்குறையுற்ற அந்த

மாணவர்கள் ரொம்பவும் ரசித்துக் கேட்டார்கள். வ.க.வின் மேடைப் பேச்சுகளைப் பலமுறை கேட்ட எனக்கு, அன்று அவர் மாணவர்களுக்குக் கதைகள் சொன்னவிதம் ரொம்ப அதிசயத்தைத் தந்தது.

தலைவரின் பின்னுரையில் என்பங்குக்கு நானும் ஒரு நீதிக்கதையைச் சொன்னேன். 'அன்றைய நிகழ்ச்சியைக் கதை சொல்லல் நிகழ்ச்சியாக அமைக்க வேண்டும் என்பதால்தான் என்னை. வ.க.தலைமை ஏற்கச் சொல்லி இருக்கிறார்' என்ற உண்மையைப் பின்னால்தான் புரிந்து கொண்டேன். எப்படியோ, என் வாழ்நாளில் வ.க. கலந்து கொண்ட நிகழ்ச்சிக்குத் தலைமை ஏற்கும் பாக்கியம் அன்று வ.க.வால் எனக்குக் கிடைத்தது.

வ.க.சென்னை சென்ற ஒரு வாரத்திற்குப் பிறகு, என் முகவரிக்கு ஆய்குடி அமர்சேவா சங்கத்தின் செயலரிடம் இருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதம் "தாங்கள் அழைத்து வந்து, எங்கள் பள்ளி மாணவர்களுக்கு கதைகள் சொன்ன மூத்த எழுத்தாளர் திரு.வல்லிக்கண்ணன் அவர்கள் ஆயிரம் ரூபாய்க்கான காசோலையை, எங்கள் பள்ளியின் மாணவர்களுக்கு அனுப்பியுள்ளார். எனவே, அன்னாரை அழைத்து வந்தவர் என்பதற்காகத் தாங்களுக்கும் எங்கள் பள்ளி மாணவர்கள் சார்பாக நன்றி தெரிவித்துக்கொள்கிறோம்" என்ற சேதியைச் சொன்னது.

"எனக்கு...அடடா" என்றிருந்தது. வ.க.அந்தப்பள்ளி மாணவர்களுக்கு நன்கொடை அனுப்பவேண்டும் என்ற செய்தியை என்னிடம் தெரிவிக்கவும் இல்லை. சென்னை சென்றபின் எழுதிய கடிதத்திலும். 'அமர்சேவா சங்க மாணவர்களுக்கு நிதி உதவி செய்து உள்ளேன் என்று தெரிவிக்கவும் இல்லை. அப்பள்ளி செயலாளர் அக்கடிதத்தை எனக்கு எழுதவில்லை என்றால் எனக்கும் அச்செய்தி தெரிந்திருக்காது. வ.க. அவர்களின் பொருளாதார நிலை உலகம் அறிந்த ஒன்றுதான். என்றாலும் அவர் மூளை வளர்ச்சி குன்றிய மாணவர்களுக்குத் தன்னால் இயன்ற பொருள் உதவியை எவ்வித விளம்பரமும் இன்றிச் செய்தது. என்னை பரவசப் படுத்தியது.

வ.க. ஜவஹர்லால் நேருவைப்போல ஆத்திகரும் அல்ல. நாத்திகரும் அல்ல. அவர் ஒரு நிர்ஈஸ்வரவாதி (AGNOSTIC). என்னோடு தங்கி இருந்த நாட்களில், நடைபயிற்சியின்போது, எத்தனையோ, கோயில்களைக் கடந்து சென்றிருக்கிறார். சில கோயில்களின் உள்ளே, சென்று அக்கோயில்களின் அழகையும் ரசித்திருக்கிறார். குறிப்பாக எங்கள் ஊரின் அருகில் உள்ள

வீரகேரளம் புதூர் நவநீத கிருஷ்ணசாமி கோயிலின் உள்ளே சென்று, அக்கோயிலில் உள்ள சிற்பங்களையும், ஓவியங்களையும் பார்த்து பரவசப்பட்டார். ஆனால் எந்தக் கோயிலிலும் அவர் சாமி கும்பிடவே இல்லை!

வ.க. அவர்களை தமிழ் அறிவுலகவாதிகளில் சிலர் மிகக் கடுமையாகச் சாடி இருக்கின்றார்கள். அவர் படைப்புகளின் மீதும் மிகக் கடுமையான விமர்சனங்களை வைத்திருக்கிறார்கள். வ.க.வுடன் பேசும்போது நான் அது பற்றியும் கேட்டேன். அதற்கு அவர் சொன்ன பதில் 'உலகம் பல விதம்' என்பதுதான்.

"கடிதம் எழுதுகிறவர்களுக்கு எல்லாம் சளைக்காமல் பதில் கடிதம் எழுதுகின்றீர்களே. அதைத் தவிர்க்கலாமே," என்று ஒரு முறை கேட்டபோது, என்னைப் பார்த்து ஒருவன் கையெடுத்து 'ஐயா, வணக்கம்' என்று சொல்கிறபோது என்னால் பதிலுக்கு 'வணக்கம்' என்று சொல்லாமல் இருக்கமுடியவில்லை! அது போல என்னை மதித்துக் கடிதம் எழுதுகிறவர்களுக்கு நான் பதில் கடிதம் எழுதுகிறேன்" என்று பதில் சொன்னார். அந்த பதில் எனக்கு நிறைவாக இருந்தது.

சுத்த அசைவப் பிரியர்களான எங்கள் வீட்டில் வீரசைவரான வ.க. அவர்கள் பத்து நாட்கள் எந்தவித முகச்சுழிப்பும், வருத்தமும் இன்றித் தங்கினார். வ.க.வுக்காக, நாங்கள் குடும்பத்துடன் அவர் எங்கள் வீட்டில் தங்கிய காலத்தில் நாங்களும் சுத்த சைவர்களாக வாழ்ந்தோம் என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

வ.க. எங்களோடு தங்கியது எங்களுக்கு ஒரு சுமையாகவே இல்லை. தோளில் ஒரு குருவியை வைத்துக்கொண்டு அல்லது. மார்பில் ஒரு ரோஜாப்பூவைச் சுமந்துகொண்டு பயணிப்பதைப் போன்ற இனிய அனுபவமாகத்தான் இருந்தது.

'வ.க. அவர்களை வசைபாடிய கூட்டத்திற்கு அவரின் முழுமையான ஆளுமைகள் தெரியுமா?' என்ற ஐயப்பாடு எனக்கு எப்போதும் உள்ளது.

சிற்றிலக்கிய வட்டாரத்திலும் எந்த வித இசங்களுக்குள்ளும், எந்த வித குறுங்குழுக்குள்ளும் சிக்கிக் கொள்ளாமல் வ.க.வாழ்ந்தார்.

தன்னுடைய எண்பத்து ஆறு வயதுவரை, மெலிந்த அந்த விரல்கள் எழுபத்தி இரண்டு நூல்களை எழுதியுள்ளது. அவரது பன்முகப்படைப்புக்களை தமிழ் அறிவுலகம் எளிதில் புறந்தள்ளி விட முடியாது.

வ.க. அவர்கள் கவிஞராக, சிறுகதை ஆசிரியராக, நாவலாசிரியராக, இதழாளராக, மொழிபெயர்ப்பாளராக, திறனாய்வாளராக, நாடக ஆசிரியராக, இலக்கிய வரலாற்றாசிரியராக, சினிமா வசனகர்த்தாவாக உழைத்திருக்கின்றார்.

அதிகாலையில் எழுந்தது முதல் இரவு படுக்கச்செல்லும்வரை படிப்பது, எழுதுவது, நண்பர்களுடன் கலந்துரையாடுவது என்று மட்டுமே சுமார் எழுபது ஆண்டுகள் இலக்கியத்திற்காகவே வாழ்ந்த சாதனையாளர் அவர் வ.க. தன் எழுத்தின் பலத்தில் நிற்கிறார்.

★ பாரதிக்குப்பின் உரைநடை

★ தமிழில் சிறுபத்திரிகைகள்

★ சரஸ்வதி காலம்.

★ புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்

★ தீபம்யுகம். - போன்ற நூல்கள் என்றும் வல்லிக்கண்ணனின் சாதனைகளை நிலை நாட்டிக் கொண்டே இருக்கும். மேலே கண்ட வ.க.வின் நூல்களின் மேல் மறுவாசிப்பும், ஆய்வுகளும் தேவை.

வ.க.வின் எழுபதாண்டுகால தேடலும், வாசிப்பும், உழைப்பும் வியக்கத்தக்கதாகும்.

'வ.க.' ஒரு வரலாற்று நாயகர் அவர் ஒரு அழகிய முன் மாதிரி.

மூன்று தலைமுறை எழுத்தாளர்களின் கவனத்தைப் பெற்றவர், அவர்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றவர். தற்காலத் தமிழ் இலக்கிய வரலாற்றில் அழுத்தமான தடம்பதித்தவர்.

2006- நவம்பர் 9-ல், இலட்சக்கணக்கான பக்கங்களை வாசித்துக் கடந்து வந்த அந்த கண்கள் மூடிவிட்டன. ஆயிரக்கணக்கான பக்கங்களை எழுதிய அந்தக் கை, ஓய்ந்து விட்டது. நூற்றுக் கணக்கான மைல் தூரங்களை நடந்தே கடந்த அந்தக் கால்கள் நீட்டி நிமிர்ந்து விட்டன.

ஜாதி, மத, மொழி, இன வேறுபாடு பார்க்காமல், சக, மனிதர்கள் மேல் அன்பைச் சொறிந்த அந்த இதயம் நின்று விட்டது.

வ.க. மறைந்தபோதுதான் தமிழகத்தில், அவருக்காகக் கண்ணீர் சிந்த இத்தனை இலக்கிய ஆர்வலர்கள் இருக்கிறார்கள் என்ற உண்மை இலக்கிய உலகுக்குத் தெரிந்தது.

மனித நேயத்தின் தலை சிறந்த வடிவமாகத் திகழ்ந்தார். இளம் எழுத்தாளர்களுக்கு வழிகாட்டியாக விளங்கினார். சிற்றேடுகளின் காவலராக வாழ்நாளெல்லாம் மிளிர்ந்தார்.

பாரதி, புதுமைப்பித்தன் பாதையில் வாழ்நாளெல்லாம் பயணம் செய்தவர் வ.க.

வ.க. வுடன் சுமார் முப்பது ஆண்டுகளாகப் பழகி நான் கற்றுக் கொண்ட பாடங்கள் பல. 'வ.க' என்ற எளிய, இனிய மனிதனின் ஆளுமை, அன்பினாலும், அறிவினாலும், கடுமையான உழைப்பினாலும், முயற்சியினாலும் கட்டப்பட்டது.

வ.க.வின் நினைவுகள், வ.க. விட்டுச்சென்றுள்ள நூல்கள் என்னைப் போன்றவர்களுக்கு என்றும் ஆக்கமும் ஊக்கமும். கொடுத்துக் கொண்டே இருக்கும். வ.க. பற்றிய என் நினைவுகளைப் பதிவு செய்ய வாய்ப்பளித்த சந்தியா பதிப்பகத்தார்க்கு என் இதயம் கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



வல்லிக்கண்ணன்
தன் சுயசரிதையின்
பிற்பகுதியினை
எழுதிக்
கொண்டிருந்தபோது
2006 நவம்பர்
9ம் தேதி இவ்வுலக
வாழ்வை நீத்தார்.
அதுவரை அவர்
எழுதிவிட்டுச்
சென்றுள்ள
நிலைபெற்ற
நினைவுகள்
இரண்டாம் பாகமாக
வெளிவருகிறது.




விலை ரூ. 80











